ஸ்ரீ குருப்யோ நம:

# அத்வைத ஞான தீபம்

எழுதியவர் : கரபாத்திர ஸ்வாமிகள்

மூலம் : சமஸ்கிருதம்

(முமுக்ஷூக்களுக்கு மட்டும்)

தொகுப்பு

ஸ்வாமி பிரபஞ்சநாதன்

# Advaita Bhodha Deepika

(ஸ்ரீ ரமணாஸ்ரமம் வெளியீடு)

இந்த நூலை எளிய தமிழில் ஆக்கித்தந்தவர் :

**எஸ் ராமன்.**

# அத்வைத ஞான தீபம்

## “அத்வைத போத தீபிகா”

எழுதியவர்: கரபாத்திர ஸ்வாமிகள்

## முன்னுரை

ஆதி சங்கரரும் அவர் போன்ற ஏனைய மாபெரும் ஞானிகளும் வேதாந்த சூத்திரங்களுக்கு விரிவான விளக்கவுரைகளை வெகு காலம் முன்பாகவே எழுதி, ஆன்ம விசாரம் செய்யும் வழிகளை நன்கு காட்டிச் சென்றிருக்கின்றனர். அவ்வாறான உரைகளில் காணப்பட்ட மிக முக்கியமான கருத்துக்களைத் தொகுத்து, அவைகளை சம்ஸ்க்ருத சுலோகங்களாக எழுதி, அதனை **“ஸ்ரீ அத்வைத போத தீபிகா”** என்ற தலைப்பில் பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்டதொரு நூலாக **ஸ்ரீ கரபாத்திர சுவாமிகள்** படைத்துள்ளார். (காசியில் வசித்த அவர் தனது கரத்தையே பாத்திரமாகக்கொண்டு உணவு உட்கொண்டு வாழ்ந்ததால் அவருக்கு இந்தக் காரணப் பெயர் அமைந்தது.

சில காலம் கழிந்த பின், செய்யுள் வடிவில் இருந்த அந்த சம்ஸ்க்ருதப் படைப்பை யாரோ ஒரு மகான் உரைநடைத் தமிழில் மொழி பெயர்த்து அருளியிருக்கிறார். காலத்தின் கோலமாக, அந்தப் பன்னிரண்டு அத்தியாயங்களில் தற்போது நமக்கு எட்டு அத்தியாயங்கள் மட்டுமே கிடைத்திருக்கின்றன. அவையாவன:

1. **அத்யாரோபம்** : ஒன்று வேறொன்றாகக் காணப்படுவது
2. **அபவாதம** : வேறாகக் காணப்படும் காட்சியை நீக்குவது
3. **சாதைன வழிகள்** : அவ்வாறான காட்சிகைள நீக்குவதற்கான வழிகள்
4. **ஸ்ரவணம்** : ஆன்மாவைப் பற்றிக் கேட்டு அறிவது
5. **மனனம்** : அவ்வாறு கற்று அறிந்ததை மனத்தால் தொடர்ந்து எண்ணுவது
6. **வாசனாக்க்ஷயம்** : ஏற்கனேவ குடிகொண்டுள்ள வாசைனகைள (கற்பிதங்கைள) நீக்குவது
7. **சாக்ஷாத்காரம்** : ஆன்மாவை நேரடியாக அனுபவித்து உணர்வது
8. **மனோ நாசம்** : மனத்தை அழிப்பது

இருக்கும் ஆன்மாவான அதைத் தவிர வேறொன்றும் இல்லாது, உள்ளபடி இருக்கும் அந்த ஒன்றை அறியவிடாமல் அறியாமையான அஞ்ஞானம் தடுக்கிறது; அனைத்தையும் மறைக்கும் தன்மை கொண்ட அஞ்ஞானம் என்றும், எப்போதும் இருக்கும் உண்மையை மறைத்து **“அது இல்லை”** என்றும், **“அது தானாக வெளிப்படுவதில்லை”** என்றும் ஆகிய இரண்டு விளைவுகைள ஏற்படுத்துகிறது; அதன் இன்னொரு தன்மையால் அது நம்முள் மனம் என்ற ஒன்றை உருவாக்கி, அதன் மூலம் மனிதர்கள், இறைவன், உலகம் என்ற தோற்றங்கள் உண்மையாக இருப்பன போல உணர்த்தி நம் முன் ஒரு மாய வலையை விரிக்கிறது; நன்கு கற்றுத் தெளிந்தவர்கள் மட்டுமே அந்த உண்மையை உணர்வதற்கான தகுதியை பெற்றவர்கள், வெறும் சாஸ்திர அறிவு மட்டுமே பெற்றவர்கள் அதை உணர இயலாது;

அதை உணரும் அறிவைப் பெறுவதற்கு **ஆன்ம விசாரம்** ஒன்றே முதன்மையான சாதனம்;

விசாரம் என்பது என்றும் நிலைத்து இருக்கும் தனது இருப்பைப் பற்றி முதலில் கேட்டறிந்து, அதனைத் தீவிரமாக எண்ணிப் பார்த்து, அவ்வாறு உள்ளபடி இருக்கும் உண்மையையும், அதை உணர்வதால் வரும் சமாதி நிலையயும் உள்வாங்கி அசைபோட்டு அறிவது;

பலர் சொல்லக் கேட்டு அறிந்ததால் நாம் அடைந்த கேள்வி ஞானம் **“அது இல்லை”** என்ற கருத்தைப் போக்குவது போல, கேட்டதைப் பலமுறை நாம் எண்ணிப் பார்த்து, அதன் பலனாக “நான் யார்?” என்று நம்முள் கேட்டு நாம் செய்த ஞான விசாரத்தால் நாம் அடைந்த அனுபவ ஞானம் “அது தானாக வெளிப்படுவதில்லை” என்ற தவறான கருத்தை நீக்குகிறது;
**“நீ அதுவாக இருக்கிறாய்”** என்ற மஹா வாக்கியத்தில் உள்ள அந்த **“நீ”** என்பதும் என்றும், எங்கும், எப்போதும் உள்ள **“அது”** என்பதும் ஒன்றே; அந்த அறிவைப் பெறுவதற்கான ஆன்மீகப் பாதையில் முன்னேற இயலாது தடைகளாக நிற்கும், நமது முந்தைய அனுபவங்கள் மூலம் நம்முள் ஊறியிருக்கும், வாசைனகள் எனும் கற்பிதங்கள் அனைத்துமே ஆன்ம விசாரமாகிய தியானத்தால் அகலுகின்றன;

அதன் விளைவால் நம்மை ஒரு ஜீவனாகக் குறுக்கிக் கட்டிப் போட்டிருந்த மனம் என்று இடையில் முளைத்த உபாதியும் அத்துடன் மறைவதால், எங்கும் எப்போதும் உள்ள ஆன்மா எனும் பிரம்மத்தை அறிபவனாக நாம் விளங்குகிறோம்;

அந்த நிலைைய அடைபவனுக்கு, அவனது முக்குண வினையால் அவன் அனுபவிக்க வேண்டிய கர்ம பலன்களாக, அவனுக்கு வரவிருக்கும் பிறவிகளும் இல்லாது போகின்றன;

அவ்வாறான கர்ம பலன்களும் அவனது உண்மையான சொரூபமாக உள்ள பிரம்மத்திற்கு அல்ல, அவை அனைத்துமே தனியாக இடையில் தோன்றும் ஜீவனுக்கே என்பதால், உண்மையில் எவ்வித பந்தமும் இல்லை, பந்தம் இல்லாததால் விடுதைலயும் இல்லை என்பைதயும் உணர்ந்து, எவ்வாறு இடையில் தோன்றும் மனத்தை அழிக்கும் வழிகளை அறிவது; என்ற இவ்வாறான அனைத்துக் கருத்துக்கைளயும் ஆசிரியர் இந்த நூலில் தெளிவாக விளக்குகிறார்.

இங்கு சொல்லப்பட்டுள்ள அனைத்துமே, உண்மைமைய நாடி அறிய விரும்பும் சீடர்களுக்கு உதவியாக இருக்கும் என்பதால் பகவான் ஸ்ரீ இரமண மகரிஷியின் சீடரும், முன்னர் முனகால வேங்கடராமையா என்றும் பின்னர் ஸ்ரீ இரமணானந்த சரஸ்வதி என்றும் அறியப்பட்டவரான ஆசிரியர், பகவானின் அருட் துணையால் இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் எட்டு அத்தியாயங்கள் கொண்ட இந்த நூலின் ஆங்கில வடிவை உருவாக்கினார். சவிகல்ப சமாதி, நிர்விகல்ப சமாதி, ஜீவன் முக்தி, மற்றும் விதேக முக்தி என்று முன்பு இருந்த கைடசி நான்கு அத்தியாயங்களும் தமிழிலோ, தெலுங்கிலோ, சம்ஸ்க்ருதத்திலோ கிடைக்கப் பெறாததால் அைவைகள ஆங்கிலப் பதிப்பில் சேர்க்க முடியவில்லை. அவை பற்றிய தகவல் எவருக்கேனும் கிடைத்தால் அவர்கள் வெளிப்படுத்துவது, இந்த உலகின்றகு செய்கின்ற மிகப்பெரிய சன்மானமாகும்.

தங்களது சமஸ்தான நூலகங்களில் இருந்த இந்நூலின் சம்ஸ்க்ருத மூல ஆவணங்கைள மகரிஷியின் பார்வைக்காக அனுப்பி உதவி செய்த மேதகு மாண்புமிகு பரோடா மகாராணி திருமதி சாந்தா தேவி அவர்களுக்கும், மேதகு மாண்புமிகு திருவிதாங்கூர் மகாராஜா அவர்களுக்கும் எங்களது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூலின் ஆங்கில மொழி பெயர்ப்பு பகவான் முன்னிலையில் பலமுறை படித்துப் பார்க்கப்பட்டு, நன்கு திருத்தி அமைக்கப்பட்டது. பகவான் மதித்துப் போற்றிய வெகுசில நூல்களில் இதுவும் ஒன்றாக அடங்கும்.

அதனால் அடியவர்கள் அனைவரும் நிச்சயமாகப் பயன் பெறுவார்கள் என்ற முழு நம்பிக்கையுடன் இந்தச் சிறிய நூலை அவர்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

# அறிமுகம்

1. பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து சீவராசிகளுக்கும் இறுதிப் புகழ் என்று இருப்பவரும், மீண்டும் மீண்டும் பிறந்து, இறந்து கடக்கவிருக்கும் சம்சார பந்தத்தை அழிக்கவல்ல ஒரே மார்க்கமாய் இருந்து, என்றும் எங்கும் நிறைந்து இருப்பவராய் உள்ள ஆனைமுக விநாயகரான உன்னத இறைவனின் தாள் பணிகின்றேன்.

2. எப்போது தோன்றியது என்று தெரியாத அனாதியாக உள்ள அறியாமையால் விளைந்த ஓர் அடர்ந்த இருளினால் பார்க்கும் திறைன இழந்த மூடனான நான், யோகிகளுள் சிறந்த யோகியாகவும், எப்போதும் ஆனந்தமயமாயும் இருப்பதோடு இரண்டற்ற ஒன்றான இருப்பு மயமாய்த் திகழ்ந்து, அறிவு ஒன்றே வடிவாக விளங்கும் சிதம்பர பிரம்மமான தெய்வீக குருவின் கடைக்கண் பார்வையால் கிடைத்தற்கரிய ஞானம் பற்றி அறியப்பெற்றதால், அவரை மனதில் இருத்தி தியானிக்கிறேன்.

3.

அவரது கால் தூசிகள் தன் மேல் பட்டதால் அளப்பற்கரிய சம்சாரக் கடலை ஏதோவொரு ஓைடையத் தாண்டுவது போலத் தாண்டிய அடியார்கள் வணங்கும் அந்தத் தெய்வீக குருவைத் தியானிக்கிறேன்.

4. தங்களுக்கு வாய்த்த பல பிறவிகளில் தூய ஆன்ம நெறிகைளக் கைடபிடித்ததால் தாங்கள் முன்பு செய்திருந்த பாவச் செயல்களின் பலன்கள் அழிக்கப்பட்டதன் மூலம் தூய மனத்தினராய் ஆகி தகுதி பெற்றவர்கள், அதனால் உண்மையாய் உள்ளதையும் அவை அல்லாததைதயும் பிரித்துத் தெளியும் அறிவைப் பெற்றவர்கள்,

அதனால் வளர்ந்த விவேகத்தால் இம்மையலும், மறுமையிலும் வாய்க்கும் சுக துக்கங்களைப் பற்றிச் சிறிதும் கவைலப்படாதவர்கள், தங்கள் மனமும், புலன்களும் ஒடுங்கியவர்களாகவும், ஆசாபாசங்கள் அடங்கியவர்களாகவும், ஆற்ற வேண்டிய கடமைகளையன்றி வேறெந்தச் செயல்கைளயும் ேதைவயற்றன என்று ஒதுக்கியவர்களாகவும், உறுதியான நம்பிக்கை மற்றும் அமைதியான மனம் படைத்தவர்களாகவும், பந்தங்களில் இருந்து விடுதலை பெறுவதில் மிக்க நாட்டம் உள்ளவர்களாகவும் விளங்கும் அடியவர்களுக்காக, பன்னிரண்டு சிறிய அத்தியாயங்கைளக் கொண்ட **“ஸ்ரீ அத்வைத போத தீபிகா”** என்ற இந்த நூல் எளிய தமிழில் சமர்ப்பிக்கப்படுகிறது.

6. அத்வைதம் பற்றிய பல நூல்கள் ஆதி சங்கரர் மற்றும் வித்யாரண்யர் போன்ற பண்டைய காலத்து குருமார்கள் பலராலும் எழுதப்பட்டிருந்தாலும், திக்கித் திக்கி மழலை மொழிப் பேசும் குழந்தைகளின் பேச்சைக் கேட்க ஆர்வம் கொண்ட அவர்களின் பெற்றோர்கள் போல, கற்றோர் அனைவரும் இந்த நூலையும் ஏற்றுக்கொண்டு, இதில் கருத்துப் பிழைகள் இருந்தாலும் பெரிய உள்ளம் கொண்டவர்களாய் வரவேற்பார்களாக.

# 1. அத்யாரோபம் : ஒன்று வேறொன்றாகக் காணப்படுவது

7. சீடன் ஒருவன், நான்கு வழியில் சாதனைகளைப் பல காலம் பயின்று வந்தாலும், **"தாப-த்ரயம்"** என்று அறியப்படும் மூன்று விதத் துயர்களால் மிகவும் ஆட்கொள்ளப்படுகிறான். அதனால் பந்தம் நிறைந்த வாழ்க்கை எனும் அந்த நரக வேதனைகளில் இருந்து விடுபடுவதற்காக, தகுதி வாய்ந்த குரு ஒருவரைத் தேடிக் கண்டுபிடித்து, அவரிடம் இப்படி வேண்டுகிறான்:

8 - 12. கருணைக் கடலான குருவே! என்னை ஆட்கொண்டவரே! நான் தங்களைச் சரணடைந்தேன். தயவு கூர்ந்து என்னைக் காப்பாற்றுங்கள்.

குரு : **காப்பாற்றவா? எதி**லிருந்து **உன்னைக் காக்க வேண்டும்?**

சீடன்: இடைவிடாது தொடரும் பிறப்பு-இறப்புச் சுழல் என்ற பயத்தில் இருந்து.

குரு : சம்சாரத்தை விடு; பயமின்றி இரு.

சீடன்: அகன்று விரிந்து இருக்கும் சம்சாரக் கடலைத் தாண்ட முடியாதவனாக இருக்கும் நான் மீண்டும் மீண்டும் தொடர்ந்து வரும் பிறப்பு-இறப்புகளை எண்ணி அஞ்சுகிறேன். அதனால் தங்களிடம் சரண் அடைந்துள்ளேன். என்னைக் காப்பாற்றுவது உங்கள் கையில்தான் இருக்கிறது.

குரு : சரி, நான் என்ன செய்ய வேண்டும்?

சீடன்: என்னைக் காப்பாற்றுங்கள். உங்களை விட்டால் எனக்குப் புகலிடம் என்று வேறு எவரும் இல்லை. எவ்வாறு ஒருவனின் தலை மயிரில் தீ பிடித்துவிட்டால் அதைத் தணிக்க தண்ணீர் ஒன்றே பயன் தருமோ, அது போல நீங்கள் ஒருவர்தான் என்னைப் போன்று மூவிதத் துன்பங்களாகிய தீயின் நடுவில் தவிக்கும் மக்களுக்கு இருக்கும் ஒரே புகலிடம். சம்சாரம் என்னும் மாயையில் இருந்து நீங்கள் விடுபட்டவர்; மன அமைதியோடு இருப்பவர்; ஆதியும் அந்தமும் இல்லாத பிரம்மத்தின் ஆனந்தத்தில் எப்போதும் திளைத்து இருப்பவர். உங்களால் நிச்சயமாக எங்களைக் காத்தருள முடியும் என்பதால் உங்களை வேண்டுகிறோம்.

குரு : உனக்குத் துன்பம் என்றால் எனக்கு அதனால் என்ன வந்தது?

சீடன்: ஒரு குழந்தையின் துயரத்தை எவ்வாறு அதன் தந்தை பொறுக்க மாட்டாரோ, அது போல உங்களைப் போன்ற ஞானிகள் மற்றவர்கள் துன்பப்படுவதைச் சகிக்க மாட்டார்கள். எந்த சீவராசிகளிடமும் நீங்கள் காட்டும் பாசத்திற்கு எவ்வித நோக்கமும் இருக்காது. அனைவருக்கும் பொதுவான குருவாக விளங்கும் தாங்கள் ஒருவரே நாங்கள் அனைவரும் சம்சாரக் கடலைக் கடந்து கரை சேர உதவும் தோணியாக இருப்பீர்கள்.

குரு : சரி, இப்போதுள்ள உன் துயரத்திற்குக் காரணம்தான் என்ன?

சீடன்: சம்சாரம் எனும் நச்சுப் பாம்பால் கடிபட்டுள்ள நான் செய்வதறியாது தவிக்கின்றேன். அவ்வாறு என்னைப் பொசுக்கும் நரகத்தில் இருந்து காத்து, அதிலிருந்து நான் மீளும் வழியை தயவு கூர்ந்து காட்டுங்கள்.

13 - 17. குரு : சரியாகச் சொன்னாய், மகனே! உனக்குப் புத்தியும் கூர்மையாக இருக்கிறது, நல்ல ஒழுக்கமும் இருக்கிறது. ஒரு சீடன் ஆவதற்கான தகுதியை நீ இதற்கு மேலும் நிரூபிக்க வேண்டியதில்லை. இப்போது நீ சொன்ன வார்த்தைகளே உனது தகுதியைத் தெளிவாகக் காட்டுகிறது. இப்போது நன்கு கவனி, குழந்தாய்!
சத்-சித்-ஆனந்தமாக எப்போதும் இருக்கும் பரப்பிரம்மத்தின் மீது வேறெந்த உருவம்தான் படர முடியும்? அங்கு சம்சாரம் எப்படித்தான் வாய்க்க முடியும்? எந்தக் காரணத்தால் அது அங்கு வர முடியும்? எப்படி, எதிலிருந்து தானாகவே அது தோன்றி இருக்க முடியும்? இரண்டற்ற ஒன்றாக இருக்கும் (அத்வைத) உண்மை சொரூபமான உன்னை அது எப்படி மயக்கியிருக்கும்? ஆழ்நிலைத் தூக்கத்தில் வேறொருவனாக இல்லாது, அப்போதும் தான் தானாகவே இருந்தும், அமைதியுடனும் நிம்மதியாகவும் தூங்கிய மூடன் ஒருவனே, தான் விழித்து எழும்போது “ஐயோ, நான் தூக்கத்தில் தொலைந்து போனேனே!” என்று சொல்வான். என்றும் மாறாத, உருவம் ஏதும் இல்லாத, ஆனந்தமயமான பரப்பிரம்மாக விளங்கும் நீ எப்படி “நான் மாறிவிட்டேன், அல்லது நான் அவதிப்படுகிறேன்” என்ற எதையும் சொல்லமுடியும்? உண்மையில் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை; எவரும் தோன்றுவதும் இல்லை, மறைவதும் இல்லை. அப்படி எதுவுமே இல்லை என்பதே உண்மை.
சீடன்: அப்படியானால் இருப்பது எது?
குரு : ஒரு தொடக்கமோ, முடிவோ இல்லாது, இருப்பது அது ஒன்றே என்றவாறு, எதனுடனும் பந்தம் கொள்ளாது, சுதந்திரமாய், தூய்மையாய், அறிவுமயமாய், ஆனந்தமாய் விளங்கும் பரப்பிரம்மம் மட்டுமே எப்போதும் உள்ளது.

18. சீடன்: அது உண்மையானால், மழைக் காலத்தில் திரளும் கார்மேகங்களைப் போல, இல்லாததொரு சம்சாரம் எவ்வாறு பெரியதாகவும் வலிமையுடையதாகவும் தோன்றி என்னை மயக்கி ஓர் இருளில் ஆழ்த்துகிறது?

19 -20. குரு : இருப்பதை மறைக்கும் மாயையின் வலிமையைப் பற்றி என்னதான் சொல்லமுடியும்? வெளிச்சம் குறைந்த இடத்தில் உள்ள ஒரு தூணைப் பார்ப்பவன் அதை ஒரு மனிதன் என்று தவறாக நினைப்பது போல, அத்வைதமான தூய பரம்பொருளைத் தனித்துவம் கொண்ட ஜீவன் என்று தவறாக ஒருவன் நினைக்கிறான். அவ்வாறு ஒரு தவறான நினைப்பு

உனக்கு வரும்போது நீ துயரடைகிறாய். இந்த மதி மயக்கம் எவ்வாறு வந்தது? ஒருவனது உறக்கத்தில் வரும் கனவைப் போல, அறியாமை என்பது உண்மையில் இல்லாதபோதும் அதனால் வரும் மயக்கத்தில் ஒருவனுக்குச் சம்சாரம் என்ற ஒன்று தெரிகிறது. அது உன் தவறால் விளைந்ததே.

21 -24. சீடன்: அறியாமை என்பது என்ன?
குரு : நன்றாகக் கேள். மனிதன் ஒருவனின் உடலைப் பற்றிக்கொண்டு ஒரு "பொய்யான நான்" என்ற அகந்தை ஒன்று அந்த உடல் தனதே என்று சொந்தம் கொண்டாடுகிறது; அதையே ஜீவாத்மா என்று சொல்கிறோம். எப்போதும் வெளிப்பார்வை ஒன்றை மட்டுமே கொண்ட அந்த ஜீவன், தான் காணும் உலகை உண்மையானது என்று கொண்டு, தான் அதில் இயங்கும் கர்த்தா என்றும், உலகில் காணப்படும் சகல போகங்களை விரும்புபவன் என்றும், அதனால் வரும் இன்ப துன்பங்களையும் அனுபவிப்பவன் என்றும் கருதுகிறது. அவ்வாறான கருத்துக்களைக் குறித்து ஆழமாக எண்ணாமல், தனது உண்மை நிலை என்ன என்பதையும் அடியோடு மறந்து, தான் யார் என்பது பற்றியும் விசாரம் செய்யாததால் தன்னைப் பற்றி ஏதும் அறியாது இருக்கும் அந்த நிலையில், அவன் சம்சார பந்தங்களில் உழன்றுகொண்டு இருக்கிறான். இவ்வாறாகத் தனது உண்மை சொரூபமான பிரம்மத்தை அறியாது இருப்பதே அறியாமை எனப்படுகிறது.

25. சீடன்: எல்லா சாஸ்திரங்களுமே சம்சாரம் என்பது மாயையின் லீலையால் வருவது என்னும்போது, நீங்கள் அது அறியாமையால் உருவாகிறது என்கிறீர்களே. இந்த இரண்டு கண்ணோட்டங்களையும் எப்படி ஒருசேரப் பார்ப்பது?
குரு : மாயை, பிரதானம், அவ்யக்தம், அவித்யை, இயற்கை, இருள் என்ற பல பெயர்களால் அறியாமை குறிப்பிடப்படுகிறது. அதனால் சம்சாரம் எனப்படுவது அறியாமையின் விளைவே.

26. சீடன்: சம்சாரத்தை அறியாமை எவ்வாறு வெளிப்படுத்துகிறது?
குரு : ஆவரணம் என்ற மறைத்தலும், விக்ஷேபம் என்ற வெளிப்படுத்தலும் ஆகிய இரண்டு தன்மைகள் அறியாமைக்கு உண்டு. அவைகளால் உருவானதுதான் சம்சாரம். ஆவரணம் இரண்டு வழிகளில் தெரிய வருகிறது. ஒன்றில் "அது இல்லை" என்றும் மற்றதில் "அது தானாக வெளிப்படுவதில்லை" என்றும் உணரப்படுகிறது.

27-28. சீடன்: அதை விளக்கமாகச் சொல்லுங்கள்.

குரு : குருவுக்கும், சீடனுக்கும் இடையே நடக்கும் சம்பாஷணையில், எப்போதும் விளங்கும் அத்வைத பரமான பிரம்மம் ஒன்றே உண்மை என்று குரு கூறினாலும், “வேறொன்றும் இல்லாத ஒரே வஸ்து என்ற ஒன்று எப்படி இருக்க முடியும்? இல்லை, அப்படி ஒன்றும் இல்லை” என்றே அதைக் கேட்கும் அறிவிலி நினைக்கிறான். என்றைக்குத் தொடங்கியது என்று அறியமுடியாத அநாதியான அந்த ஆவரணத்தின் சக்தியால் குரு சொன்னது மறுக்கப்பட்டு, அவனுடைய பழைய எண்ணங்களே அவனுக்கு நிலைத்து நிற்கின்றன. இந்த அலட்சிய மனப்பான்மைதான் அந்த ஆவரணத்தின் முதல் தன்மை.

29-30. அடுத்த நிலையில், அவன் பல புத்தகங்களைப் படித்தும், அருளுடன் விளங்கும் பல குருமார்களின் உபதேசங்களைக் கேட்டும், தன்னை அறியாமலேயே அத்வைத பரமான வஸ்து ஒன்று இருக்கிறது என்ற எண்ணத்தை நோக்கி முழு நம்பிக்கையுடன் அடியெடுத்து வைத்தாலும், அந்தக் கருத்தின் ஆழத்தை உணர முடியாமல், மேலெழுந்தவாரியாக “தெரிந்து கொள்ளும் அளவிற்கு அது அப்படி வெளிப்படவில்லையே” என்று கூறுகிறான். வெளிப்படவில்லை என்ற அளவுக்கு அவனுக்கு அறிவு வளர்ந்திருந்தாலும், முந்தைய அறியாமை என்னும் மயக்கம் அவனை விட்டு இன்னமும் அகலவில்லை. ஆக “அது வெளிப்படவில்லை” என்ற அந்த மயக்கமே ஆவரணத்தின் இரண்டாவது தன்மை.

31-32. சீடன்: விக்ஷேபம் என்ற வெளிப்படுதல் என்றால் என்ன?
குரு : என்றும் மாறாது, உருவம் என்று எதனையும் கொள்ளாது, தான் அன்றி வேறெதுவும் இல்லாது, உயர்ந்த பரப்பிரம்ம நிலையில் ஆனந்தமயமாய் இருக்கும் ஒருவன், தன்னை உடலோடு சம்பந்தப்படுத்திக்கொண்டு தனக்குக் கை, கால்கள் உண்டு என்றும், தான் கர்த்தா என்றும், அந்தக் கர்மத்தின் விளைவுகளை அனுபவிப்பவன் என்றும் கருதுகிறான். அதனால் தான்-பிறர் என்றும், அது-இது என்று பாகுபடுத்தியும் தன்னை ஏமாற்றிக் கொள்கிறான். இவ்வாறாக உண்மையில் இருக்கும் அத்வைத வஸ்துவின் மேல் தான் காணும் புற உலகை ஏற்றிக் காண்பதையே விக்ஷேபம் என்று சொல்லப்படுகிறது. அதுவே இருக்கும் ஒன்று வேறொன்றாகக் காணப்படுகிறது என்றும் சொல்லப்படுகிறது.

33. ஒன்று வேறொன்றாகத் தெரிகிறது என்றால் என்ன அர்த்தம்?
குரு : உண்மையில் உள்ள ஒன்றை விட்டுவிட்டு இல்லாத ஒன்றை இருப்பதாக நினைக்கும் தவறான கருத்தாகும் அது. கயிற்றைப் பாம்பாகவும், தூண் ஒன்றை நின்றுகொண்டிருக்கும் மனிதனாகவும், கானல் நீரைக் குளமாகவும் பார்ப்பதுதான் அது. ஒன்று வேறாகக் காணப்படுவது என்பது இல்லாத ஒன்றை இருக்கும் பொருள் மேல் ஏற்றிக் காண்பதுதான்.

34. சீடன்: அடிப்படை வஸ்துவாக இருக்கும் ஒன்றின் மேல் இப்போது நாம் இல்லாத ஒன்றான எதை ஏற்றிக் காண்கிறோம்?

குரு : அத்வைத பரம்பொருளான சத்-சித்-ஆனந்தமே என்றும் உள்ள பொருள். கயிற்றுக்குப் பதிலாகப் பெயரிலும், உருவத்திலும் அதனிலும் வேறான பாம்பைக் காண்பது போல, அத்வைத உண்மைப் பொருளின் மேல் பலதரப்பட்ட சல உயிர்களையும், அசலப் பொருட்களையும் ஏற்றிக் காண்கிறோம். அதாவது இருக்கும் உண்மைப் பொருளை விடுத்து பல பெயர்களையும், பலவகையான உருவங்களையும் கொண்ட பொருட்களை உடைய உலகம் அங்கு காணப்படுகிறது. அது இல்லாத ஒன்றாகும்.

சீடன்: அத்வைத உண்மைப் பொருள் இருக்கும்போது, இல்லாத ஒன்றை யார் கொண்டு வந்தார்கள்?

குரு : அதுவே மாயை.

சீடன்: மாயை என்றால் என்ன?

35. குரு : மாயை என்பது முன்பு சொல்லப்பட்ட பிரம்மத்தைப் பற்றி அறியாமல் இருப்பது.

சீடன்: அந்த அறியாமை என்பது என்ன?

குரு : இருக்கும் நாம் எப்போதும் பிரம்மமாகவே இருந்தும், தான் பிரம்மம் என்று அறியாமலேயே இருக்கிறோம். அவ்வாறு இருக்கும் அறிவைப் பெறாமல் தடை செய்வதே அறியாமை ஆகும்.

சீடன்: அது எவ்வாறு உலகத்தை உருவாக்குகிறது?

குரு : எவ்வாறு அடிப்படை வஸ்துவான கயிறைப் பற்றிய அறியாமை, இல்லாத பாம்பு ஒன்றை உருவாக்குகிறதோ, அவ்வாறே பிரம்மத்தைப் பற்றிய அறியாமை உலகை உருவாக்குகிறது.

36. குரு: இல்லாத ஒன்றைக் காண்பதால் அதைப் பிரமை அல்லது மயக்கம் என்றே சொல்லவேண்டும். அவ்வாறு காணப்படுவது ஒரு பொருள் அங்கு இருக்கலாம் என்ற ஊகத்தையும் சாராது, அல்லது இருக்கிறது என்ற அறிவையும் சாராது. அதாவது அந்தப் பொருள் காட்சிக்கு முன்பும் இருந்ததில்லை, பின்பும் இருப்பதில்லை.

சீடன்: காட்சிக்கு முன்பும் இருந்ததில்லை, பின்பும் இருப்பதில்லை என்று எவ்வாறு சொல்லமுடியும்?

குரு : ஒரு பொருள் புதியதாக உருவாக்கப்பட்டது என்று சொன்னால், அதற்கு முன் அது இருந்திருக்க முடியாது; அதாவது உருவாக்கப்படும் சமயத்தில்தான் அதற்கு உருவம் வர

முடியும். அழிவுறும் காலத்தில் அது இல்லாமலேயே போகும். இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில்தான் அது ஆகாயத்தில் மந்திரத்தால் வரவழைக்கப்பட்ட ஒரு நகரம் போலத் தெரிகிறது. நமது ஆழ்நிலை உறக்கத்திலோ, திகில் அல்லது சமாதி அடைந்த நிலையிலோ அது இல்லை என்றால், இல்லாத ஒன்றைப் பார்ப்பதாகவும், அதனால் அது பிரமையால் காணப்பட்டது என்றும்தான் அர்த்தம் கொள்ளவேண்டும்.

37. சீடன்: உருவாவதற்கு முன்பும், அது அழிந்து போன பின்பும் உலகம் இல்லை என்றால், அப்போது இருப்பதுதான் என்ன?
குரு : சஜாதீய, விஜாதீய, ஸ்வாகத பேதங்களின் படி ( உண்முகமாகப் பார்த்தாலும், வெளிப்பார்வை கொண்டு பார்த்தாலும் ) இருப்பது என்னவோ தான் என்னும் ஓர் உணர்வே. அது இரண்டற்ற ஒரே பொருள், உண்மையான வஸ்து, மற்றும் பேதங்கள் ஏதும் இல்லாத தூய்மையான ஒன்று.
சீடன்: அதை எப்படி அறிவது?
குரு : "ஜீவராசிகள் தோன்றும் முன்பாக அது ஒரு தூய்மையான உணர்வாக மட்டுமே இருந்தது" என்று வேதங்கள் கூறுகின்றன. "யோக வாசிஷ்டம்" என்ற நூலும் அதை நன்கு விளக்கி புரியவைக்க உதவுகிறது.
சீடன்: எப்படி?

38. குரு : "அழியும் காலத்தில் ஒட்டுமொத்த பிரபஞ்சமே மறைந்து, இருக்கும் ஒன்றான அத்வைத பரம்பொருள் மட்டுமே அசலமாய், மனோவாக்கிற்கு அப்பால், இருளும் இல்லாது ஒளியாகவும் இல்லாது, ஆனாலும் பரிபூரணமாய், அது என்னவென்றும் சொல்லமுடியாது என்றாலும் சூன்யமாக இல்லாது எஞ்சி நிற்கின்றது" என்று யோக வாசிஷ்டம் கூறுகிறது.

39. சீடன்: அவ்வாறான ஒரே வஸ்து என்ற நிலையில் இருந்து, பிரபஞ்சம் எப்படித் தோன்ற முடியும்?
குரு : முன்பு நாம் பார்த்த கயிறு-பாம்பு எனும் உவமையில் எவ்வாறு அடிப்படை உண்மையான கயிறு பாம்பு என்னும் தோற்றத்தில் மறைந்து இருந்ததோ, அதுபோல மாயை அல்லது அவித்யை எனப்படும் அறியாமையும் உண்மையான பரம்பொருளை மறைத்து உலகத்தைக் காட்டுகிறது. இவ்வாறாக உள்ள ஒன்று மறைந்து போய் நானாவித உருவங்களும், பெயர்களும் மட்டுமே காணப்படுகின்றன.

40-41. அதற்குச் சம்பந்தமே இல்லாத சத்-சித்-ஆனந்தத்தின் துணை கொண்டே எழும் மாயைக்கு ஆவரணம், விக்ஷேபம் ஆகிய மறைத்தல் மற்றும் வெளிப்படுத்தல் என்ற இரு தன்மைகள் இருக்கின்றன. அவைகளில் முன்னதால் எப்போதும் உள்ள வஸ்து மறைக்கப்படுகிறது; பின்னதால் வெளிப்படாத மாயை மனம் என்ற வடிவில் வெளிப்படுகிறது. மறைந்திருக்கும் பொருளோடு கூடி மனம் பலப்பல வடிவங்களும், பெயர்களும் கொண்ட உலகத்தை வெளியே கொண்டுவருகிறது.

42. சீடன்: இதை முன்பே யாராவது கூறியிருக்கிறார்களா?
குரு : ஆம், வசிஷ்டர் ராமருக்கு அறிவுறுத்தியிருக்கிறார்.
சீடன்: எப்படிக் கூறியிருக்கிறார்?

43-50. குரு : "பரப்பிரம்மத்தின் சக்திகள் அளவிடற்கு அரியது. அவைகளில் இருந்து வெளிப்படும் சிலவற்றின் மூலம் அது அனைவருக்கும் தெரிய வருகிறது".
சீடன்: அவ்வாறு தெரியவரும் சக்திகள் யாவை?
குரு : சல உயிர்களை நடமாட வைக்கும் சக்தியாகவும், காற்றின் சலனமாகவும், மண்ணின் திடத்தன்மையாகவும், நெருப்பின் உஷ்ணமாகவும், நம்மைச் சூழ்ந்துள்ள ஆகாயத்தின் வெற்றிடமாகவும், அழுகும் பொருளில் அழுகிப்போகும் தன்மையாகவும் என்பன போன்ற இன்னபிற வழிகளிலும் அவை தெரிகின்றன. அந்தத் தன்மைகள் எல்லாம் முதலில் தெரியாது மறைந்திருந்து பிற்பாடு வெளிப்படுகின்றன. எவ்வாறு மயில் தோகையின் பிரமிப்பைத் தரும் வண்ணங்கள் அதன் முட்டைக் கருவில் புலப்படாது மறைந்து இருக்கிறதோ, அல்லது பரந்து விரிந்து வளரப்போகும் ஓர் ஆலமரம் அதன் விதையில் ஒளிந்து இருக்கிறதோ, அதே போல பலவிதமான சக்திகள் அனைத்தும் அதற்கும் வேறு என்று இல்லாத ஒரே பொருளான பிரம்மத்தில் மறைந்து இருக்கின்றன.
சீடன்: அந்த ஒரே வஸ்துவான பிரம்மத்திலேயே அனைத்து சக்திகளும் அடங்கி இருக்கின்றன என்றால் அவை அனைத்தும் ஏன் ஒரே சமயத்தில் வெளிப்படவில்லை?
குரு : மரம், செடி, கொடிகளின் விதைகள் எல்லாமே நிலத்திற்குள் புதைந்து இருந்தாலும் மண்ணின் தரம், வெப்பதட்ப நிலை மற்றும் பருவ காலத்திற்கு ஏற்றாற்போல், அவைகளில் சில விதைகளே அவ்வப்போது துளிர்விட்டு வளர்கின்றன என்பதை நீ பார்க்கிறாய் அல்லவா? அதே போல எந்தச் சக்தி எப்போது வெளிப்படுவதற்கான சூழ்நிலை உருவாகிறதோ அப்போதுதான் அவை வெளிப்படும். அந்தச் சமயத்தில் மாயையின் அடித்தளமாக எப்போதும் உள்ள பிரம்மம், நினைவாற்றல் என்னும் சக்தியோடு கூடி மனம் என்னும் சக்தியாக வெளிப்படுகிறது. இவ்வாறாக எப்போதும் மறைந்தே இருக்கும் மாயை,

அனைத்துக்கும் அடிப்படையான பிரம்மத்திலிருந்து மனமாக வெளிப்படுகிறது. அவ்வாறு வெளியே வந்த மனம் பலவிதமான பொருட்களை உள்ளடக்கிய உலகங்களை உருவாக்குகிறது என்று வசிஷ்டர் கூறுகிறார்.

51. சீடன்: இவ்வாறாக மாயையின் சக்தியை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ள மனத்தின் தன்மைகள் என்ன?

குரு : மலரும் எண்ணங்களையும், மறைந்திருக்கும் தாக்கங்களையும் நினைவிற்குக் கொண்டுவருவதே அதனுடைய சுபாவம். தாக்கங்களே அதன் உயிர்நாடி. அது நமது உணர்வில் "நான்" என்றும் "இது" என்றும் ஆகிய இரண்டு வழிகளில் புலப்படுகிறது.

சீடன்: அந்த இரண்டு வழிகளுக்கு என்ன பொருள்?

குரு : "நான்" என்று தன்னைப் பற்றி நினைப்பதும், "இது-அது" என்று தன்னைச் சுற்றியுள்ளவைகளைப் பற்றிக் கருதுவதும்தான் அந்த வழிகள்.

52. சீடன்: "நான்" என்ற எண்ணம் எவ்வாறு நமது உணர்வின் மேல் படர்ந்து எழுகிறது?

குரு : ஒரு முத்துச் சிப்பியின் மேல் வெள்ளி படர்ந்து நிஜ வெள்ளியாகவே காணப்படுவது போல "நான்" என்ற நினைவு "நான்-நான்" என்ற உணர்வின் மேல் படர்ந்து ஓர் அகங்கார மாயையாக வெளிப்பட்டு, அனைத்துக்கும் சாட்சியாக உள்ள உணர்வும், வெளிப்படும் அகங்கார உணர்வும் வேறுவேறு அல்ல என்பதாகத் தன்னைக் காட்டிக்கொள்கிறது.

53. பேயால் பிடிக்கப்பட்ட ஒருவன் எவ்வாறு தன் வசம் இல்லாது முற்றிலும் வேறொருவன் போலப் பிதற்றுவானோ, அவ்வாறே "நான்" எனும் அகந்தையால் பீடிக்கப்பட்ட ஒருவன் தனது உண்மை நிலையை மறந்து, அந்த அகந்தைப் பேயாகவே காட்சி அளிப்பான்.

54. சீடன்: எப்போதுமே மாற்றம் காணாது ஓர் சாட்சியாக விளங்கும் பிரம்மம் எவ்வாறு மாற்றங்கள் காணும் அகந்தையாக தன்னைத் தவறாகக் கருதக்கூடும்?

குரு : எவ்வாறு மயக்கத்தில் இருக்கும் ஒருவன் தனது உடல் ஆகாயத்தில் மிதப்பதாக நினைப்பானோ, எவ்வாறு குடி போதையில் தள்ளாடுபவன் தன்னை வேறோருவனாக உணர்வானோ, எவ்வாறு ஒரு பைத்தியக்காரன் ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாமல் எதையாவது உளறிக்கொண்டே இருப்பானோ, எவ்வாறு கனவு காண்பவன் ஏதோ பயணம் செய்துகொண்டிருப்பதாக நினைப்பானோ, அல்லது எவ்வாறு பேய் பிடித்து அலைபவன் வித்தியாசமான நடவடிக்கைகளில் ஈடுபடுவானோ அதே போல சாட்சியாக விளங்கும் பிரம்மம் எந்த மாற்றமும் காணாமல், எதனாலும் பாதிக்கப்படாமல் இருந்தாலும், அகந்தைப்

பேயினுடைய தாக்கத்தின் பிடியில் இருக்கும் ஒருவன் தன்னை “நான்” எனும் தனியனாக நினைக்கிறான்.

55. சீடன்: மனத்தின் “நான்” என்னும் எண்ண வடிவம் சாட்சியாக விளங்கும் பிரம்மத்தை மாற்றி அகந்தையாகக் காட்டுகிறதா, அல்லது அனைத்தையும் காணும் சாட்சியாக அகந்தையே விளங்குகிறதா?

56-57. குரு: இந்த மாதிரியான ஒரு கேள்விக்கே இங்கு இடமில்லை. ஏனென்றால் பிரம்மத்தைத் தவிர வேறெதுவும் தனித்து இருக்க முடியாது என்பதால் அகந்தை உட்பட எதுவும் தானாகவே வெளிப்படாது.
சீடன்: இதை மேலும் விளக்கமாகச் சொல்லுங்கள்.
குரு : கயிற்றைப் பற்றிய அறியாமையே ஒரு பாம்பாகத் தோன்ற முடியாது; இருக்கும் ஒரு கயிற்றைத் தான் அறியாமை பாம்பாகக் காட்டும். நுரையோ, அலைகளோ, குமிழ்களோ தானாகத் தோன்றாது; இருக்கும் நீரைத்தான் அது அப்படியாகக் காட்டும். தீப்பொறிகளோ, கொழுந்துகளோ தானாகத் தோன்றாது; தீ இருந்தால் தான் அவைகளைக் காணமுடியும். களிமண்ணில் சட்டியையோ, பானையையோ பார்க்கமுடியாது என்றாலும், களிமண்ணைத்தான் சட்டியாகவோ, பானையாகவோ பார்க்கிறோம். அவைகளைப் போலவே, சாட்சியாக இருக்கும் பிரம்மத்தின் சக்தி வெளியே தெரியாது; அகந்தையின் மூலமே சாட்சியின் வலிமை வெளியே தெரிய வருகிறது.

58-60: சீடன்: மாயை எனும் சக்தியால் ஒன்றேயான பிரம்மம் பலப்பல ஜீவன்களாகப் பிளவுபட்டுக் காணப்படுகிறது என்று எவ்வாறு சொல்லமுடியும்? பிரம்மம் அல்லது ஆன்மாவானது எதையும் சார்ந்து இருப்பதில்லை; பரவியிருக்கும் வெறுவெளி போல எதனாலும் மாறாது, கறை படாது இருக்கிறது. அதனால் மாயையின் தாக்கத்தால் அது எவ்வாறு மாற்றம் அடையும்? மாற்றம் அடையும் என்றால் “ஒருவன் வெட்டவெளியைக் கையால் பிடித்து வைத்து ஒரு மனிதனாகவும், காற்றைப் பிடித்து ஒரு பீப்பாயாகவும் மாற்றுகிறான்” என்று சொல்லும் அளவுக்கு ஓர் அபத்தம் இல்லையா? நான் இப்போது சம்சார சாகரத்தில் மூழ்கியிருக்கிறேன். என்னை அதிலிருந்து காப்பாற்றுங்கள்.

61. குரு: இருக்க முடியாததை இருப்பது போல மாயை காட்டுவதாலேயே அது மாயை எனப்படுகிறது. அழகான ஒரு நகரம் ஆகாயத்தில் இருப்பதாக ஒரு மந்திரவாதி கண்கட்டு வித்தையில் காட்டுவது போல, எப்போதுமே இல்லாத ஒன்றை இருப்பதாகக் காட்டுவதே

மாயையின் வலிமையாகும். ஒரு மனிதனாலேயே அவ்வாறு காட்ட முடியும் என்றால், மாயையால் முடியாதா? அதில் அபத்தம் ஏதும் இல்லை.

62-66. சீடன்: தயவு செய்து அதை விளக்கமாகச் சொல்லுங்களேன்.

குரு : கனவில் நாம் காணும் காட்சிகளை வரவழைக்கும் நமது உறக்கத்தின் வலிமையைக் கொஞ்சம் யோசித்துப் பார். ஓர் அறையில் ஒரு கட்டிலின் மேல் படுத்துத் தூங்கும் ஒருவன் தன் கனவில் பலவிதமான பறவைகளாகவோ, மிருகங்களாகவோ உருவெடுத்துக்கொண்டு பல இடங்களில் உலாவுவான்; தனது வீட்டில் உறங்குபவன் வடக்கே காசியில்இருக்கும் தெருக்களிலோ, தெற்கே ராமேஸ்வரத்தின் கடற்கரை மணலிலோ சுற்றிக்கொண்டு இருப்பதாக நினைப்பான்; உண்மையில் எந்தவித மாறுதல்களையும் அடையாமல் அமைதியாகத் தூங்குபவன், தான் வானத்தில் பறப்பதாகவோ, பாதாளத்தில் தலைகுப்புற விழுந்துகொண்டிருப்பதாகவோ, அல்லது தனது கை துண்டிக்கப்பட்டு அதனால் துடித்துக்கொண்டு கதறுவதாகவோ உணர்வான். இவ்வாறாக ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாமல் வரும் நிகழ்வுகளே அவனது கனவில் வரும் அனுபவங்களாக இருக்கும். ஆனாலும் அந்த நிகழ்வுகளை குறை ஏதும் காணாது தனது அனுபவங்களாக அப்போது அவன் ஏற்றுக்கொள்வான். இவ்வாறு ஒருவனது சிறிய அனுபவமான தூக்கமே நடக்காததை நடப்பது போலக் காட்டும் போது, விவரிக்க முடியாத பிரபஞ்சங்களை உருவாக்கும் மகா மாயை காட்டக்கூடிய அற்புத லீலைகளைப் பற்றி விவரிக்கவும் முடியுமா? அதுதான் அதனுடைய இயல்பு என்று தெரிந்துகொள்.

67-74. யோக வசிஷ்டத்தில் உள்ள கதை மூலம் அதை இப்படிச் சொல்லலாம். இலவணன் என்ற ஓர் அரசன் இஷ்வாகு வம்சத்தில் உதித்த ஓர் இரத்தினமாக விளங்கினான். ஒரு முறை அவனது அரசவையில் அனைவரும் அமர்ந்திருக்கும்போது ஒரு மந்திரவாதி அரசன் முன் தோன்றினான். அவன் அரசனை உடனடியாக அணுகி, வணங்கிவிட்டு "அரசே! இப்போது உங்களுக்கு ஆச்சர்யமான காட்சி ஒன்றைக் காட்டப் போகிறேன்" என்று கூறினான்: உடனே தன் கையில் இருந்த மயில்தோகை ஒன்றை அரசன் முன் ஆட்டினான். அதனால் மயக்கத்தில் ஆழ்ந்த அரசன், தன்னையும் மறந்து, தனக்கு முன் ஒரு கனவுக் காட்சி விரிவது போல உணர்ந்தான். தனக்கு முன்னால் தோன்றிய குதிரை ஒன்றைக் கண்ட அரசன் அதன் மீதேறி அமர்ந்து வேட்டையாடக் காட்டிற்குள் சென்றான். வெகுநேரம் வேட்டையாடிய களைப்பால் அவனுக்கு அளவுக்கு மீறிய தாகம் வந்தது என்றாலும், தாகத்தைத் தணிக்க எங்கும் அவனுக்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. அதனால் அவன் சோர்வடைந்தான். அந்தச் சமயம் ஒரு தாழ்ந்த குலத்துப் பெண் ஒருவள் தனது மண் பாண்டங்களில் அவள் ஆக்கிய சாதாரண

உணவு எதையோ எடுத்து வந்தாள். களைப்பால் பசியும், தாகமும் அடைந்திருந்த அரசன் குல வேற்றுமையையோ, மன்னன் என்ற தனது கௌரவத்தையோ பார்க்காது அவளிடம் உணவையும், நீரையும் தருமாறு வேண்டினான். அவளோ அரசன் தன்னைத் திருமணம் புரிந்துகொண்டால் மட்டுமே அவனுக்கு உதவுவதாகக் கூறினாள். தயக்கம் எதுவும் இல்லாது அதற்கு அவன் ஒப்புக்கொண்டு, அவள் தந்ததைச் சாப்பிட்டுவிட்டு, அவளுடைய கிராமத்திற்குச் சென்று அவளுடன் குடித்தனம் நடத்தியதில் அவர்களுக்கு இரண்டு மகள்களும், ஒரு மகனும் பிறந்தனர்.

இவையெல்லாம் நடந்துகொண்டிருக்கும்போது அரசன் தன் அரியணையிலேயே அமர்ந்திருந்தான். அதற்கான ஒன்றரை மணி நேர கால அவகாசத்தில் அவன் துயரங்கள் மிகுந்த, பல வருடங்கள் நீடித்த வேறொரு மாய வாழ்க்கையை வாழ்ந்து முடித்துவிட்டான். இதைப் போன்ற பல நீண்ட கதைகளை ராமருக்கு வசிஷ்ட மகாமுனி விவரமாகக் கூறி, எவ்வாறு நடக்க முடியாததை மாயை பிரமாதமாக நடத்திக் காட்டும் வல்லமை பெற்றது என்று எடுத்துக் காட்டினார்.

75-76. மனதால் நினைத்து, நினைத்ததைப் பரப்பவும் முடியாத சாகசங்கள் என்று எதுவும் இல்லை; அதே போல அவ்வாறு நடப்பவைகளைக் கண்டு உண்மையென்று மயங்காத மனிதர்களும் எவரும் இல்லை. எது நடக்காதோ, நடக்கவில்லையோ அது நடந்ததைப் போலக் காட்டுவதே அதன் இயல்பு. உலகில் உள்ள எதுவும் அதன் சக்திக்கு ஆளாகாமல் தப்பிக்க முடியாது. எப்போதும் மாறாது, எதனாலும் கறைபடாது விளங்கும் ஆன்மாவையே அது மாறுவதாகவும், ஆட்கொள்ளப்படுவதாகவும் காட்டுகிறது.

சீடன்: அது எவ்வாறு சாத்தியம்?

குரு : எதனிலும் கலக்காத, எதனாலும் கலங்காத ஆகாயம் எவ்வாறு நீல நிறத்துடன் காணப்படுகிறது என்று பார். அதேபோல எப்போதும் பரிசுத்தமாக விளங்கும் ஆன்மாவும் அகங்காரத்தால் ஆளப்பட்டு ஒரு ஜீவனாக வளைய வந்துகொண்டிருப்பது போலத் தெரிகிறது. அரசன் இலவணன் ஒரு தாழ்ந்த குலத்துப் பெண்ணுடன் குடித்தனம் நடத்தியதைப் போலத்தான் இதுவும்.

77. சீடன்: மனத்தில் “நான்” என உதிக்கும் அகங்கார நிலையில், அத்துடன் பிரம்மமும் கலந்து ஜீவன் என்று தோன்றுமானால் அப்போதும் ஒரேயொரு ஜீவன் தானே இருக்க முடியும். ஆனால் பல ஜீவன்கள் இருக்கின்றனவே; எவ்வாறு ஒன்றேயான பிரம்மம் பற்பல ஜீவன்களாகத் தோன்றமுடியும்?

78-80. இருக்கும் ஒன்றேயான பிரம்மத்தில் எப்போது தனித்து இருப்பதாகக் காணப்படும் ஜீவன் என்ற மயக்கத் தோற்றம் உண்டாகிறதோ, அப்போதே பல ஜீவன்கள் என்ற மாயமான தோற்றங்களும் பிரம்மத்தில் தோன்றுகின்றன. வெவ்வேறு கோணங்களில் பிரதிபலிக்கும் பல கண்ணாடிகள் பதிக்கப்பட்ட ஓர் அறைக்குள் ஒரு நாய் நுழைந்தவுடன் தோன்றும் அதன் ஒரு பிம்பம், பல கண்ணாடிகளின் பிரதிபலிப்பால் பல நாய்களாக அதற்குத் தோன்றுகின்றன. அதனால் அந்த நாய் தன்னைச் சுற்றிப் பல நாய்கள் இருப்பதாக எண்ணிக்கொண்டு, தற்காப்பிற்காக உறுமலில் தொடங்கி, அவைகளுடன் சண்டை போடுவதற்கும் தன்னைத் தயார் செய்துகொள்கிறது. ஏகப் பிரம்மத்தில் உதிக்கும் ஜீவனின் மயக்கங்களும் அதைப் போலவேதான் இருக்கின்றன. ஒன்றல்ல இரண்டு என்ற மயக்கம் வந்ததும், அதுவே விரிந்து பல ஜீவன்கள் என்ற நிலை தோன்றுகிறது.

81-83. இவ்வாறாக நான்-நீ-அது என்று உலகைப் பார்க்கத் தொடங்கிய ஒருவனது பழக்கம் அவனது நனவு உலகைத் தொடர்ந்து கனவுலகிலும் நீண்டு, அங்கு காணப்படும் அனைத்தும் பற்பல ஜீவன்களாகவும், அவைகளுடன் ஏற்படும் உறவுகளாகவும் விரிகின்றன. அதே போல ஒருவனது பல பிறவிகளிலும் தொடரும் அந்த மயக்க நிலைகளின் ஒட்டுமொத்த பாதிப்பினாலேயே, தான் சுத்த அறிவுடன் கூடிய ஆன்மா என்ற உண்மை மறைவதும், ஒவ்வொருவரும் தனித்தனி ஜீவன்கள் என்ற பார்வை இருப்பதும் இன்னமும் தொடர்ந்துகொண்டு இருக்கிறது. அளவிடமுடியாத சக்தி கொண்ட மாயையால் எதைத்தான் செய்யமுடியாது? இது இப்படியிருக்க, அண்டங்களும், பிண்டங்களும் எவ்வாறு உருவாகின்றன என்பதை இப்போது கேள்.

84-85. அனைத்துக்கும் மேலான பரமாத்மாவே மாயையால் உருவாகிய அகங்காரத்தால் “நான்” என்ற தனியான ஜீவனாகக் காணப்படுகிறது. அதேபோல “இது-அது” என்ற மாயையின் லீலையினாலேயே அம்மேலான ஆத்மா அனைத்தையும் அடக்கியுள்ள பிரபஞ்சமாகவும் காணப்படுகிறது.
சீடன்: அது எப்படி?

86-89. குரு : எங்கும் பரவியிருக்கும் ஆன்மாவெனும் உணர்வில் இருந்து முதலில் மனம் தோன்றுகிறது. அந்த மனத்தின் அசைவுகளால் முன்பு நாம் கண்ட மயக்கத் தோற்றங்களும், அவைகளின் குணங்களும் உதிக்கின்றன. அவைகளே “இது பல விதமான உறுப்புகள் கொண்ட உடல்” என்றும், “நான் உடலே”, “இவர் என் தந்தை”, “இவன் என் மகன்”, “எனக்கு

இவ்வளவு வயதாகிறது", "இவர்கள் எனது உறவினர்கள், சுற்றத்தார்கள்", "இது எனது வீடு", "நான்-நீ", "இது-அது", "நல்லது-கெட்டது", "சுகம்-துக்கம்", "பந்தம்-விடுதலை", "சாதி-இனம்-கடமைகள்", "கடவுள்-மனிதன்-சீவராசிகள்", "உயர்ந்தது-தாழ்ந்தது-மிதமானது", "அனுபவிப்பவன்-அனுபவங்கள்", "அண்ட கோளங்கள் பதினாயிரம்" என்றெல்லாம் நினைக்கவும், பேசவும் வைக்கின்றன.

சீடன்: எவ்வாறு மறைந்திருக்கும் குணங்களே இவ்வாறான நானாவித பிரபஞ்சமயமாகத் தெரிகிறது?

90. குரு : அமைதியுடன் கூடிய இன்பத்தை அனுபவித்துக்கொண்டு, சிறிதும் அசையாது, ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும் ஒருவனுக்குள் உறைந்து இருக்கும் குணங்கள் மேலெழும்போது பலவகையான சீவராசிகளையும், உலகங்களையும் அவைகள் இருப்பன போலவே தோற்றுவிக்கிறது. அப்படித் தோற்றம் அளித்தாலும் அவைகள் உண்மையில் இல்லாதவைகளே. அப்படி நடப்பது போலவே, ஒருவனது விழிப்பு நிலையிலும் அவனுள் உறையும் குணங்களால் தோன்றும் நானாவித உலகங்களும், சீவராசிகளும் உண்மையில் இருப்பன போல அவனை மயக்குகிறது.

91. சீடன்: குருவே! கனவில் நடப்பன எதுவும் விழிப்பு நிலையில் நடந்தவைகள் விட்டுச்சென்றதால் மறைந்து நிற்கும் சுவடுகளே. அவைகள் நடந்தவைகளை மறுபடியும் பிரதிபலித்துக் காட்டுகின்றன. அதனால் கனவுலக அனுபவங்கள் மனத்தளவில் முன்பே நிகழ்ந்தவைகள்தான் என்று சரியாகவே விளக்கப்பட்டிருக்கின்றன. அவை போலவே நனவுலக நிகழ்வுகளும் நடக்கின்றன என்றால் அவைகளும் முந்தைய தாக்கங்களின் பிரதிபலிப்புகளாகவே இருக்க வேண்டும். அவ்வாறு முன்பு எது நடந்ததால் வந்த விளைவுகளாக தற்போது நாம் காணும் நடப்பு நிகழ்ச்சிகள் அமையக்கூடும்?

92. குரு : நாம் விழித்து இருக்கும் போது நடக்கும் நிகழ்வுகளே நமது கனவு நிகழ்வுகளுக்குக் காரணமாக அமைவது போல, நமது முந்தைய பிறவிகளில் நமக்கு நேர்ந்த அனுபவங்களே இப்போது நாம் காணும் நமது விழிப்பு நிலை நிகழ்வுகளுக்குக் காரணங்களாக அமைகின்றன. அவை உண்மையில் நடப்பன போலத் தோன்றினாலும் நமது விழிப்பு நிலையும், அது நடக்கும் உலகமும் மதி மயக்கத்தால் வந்தவைகளே.

சீடன்: நமது தற்போதைய அனுபவங்களுக்கு முந்தைய நிகழ்வுகள் காரணம் என்றால், முன்பு நடந்தவைகளுக்குக் காரணங்கள் என்ன?

குரு : அதற்கும் முன்பு நடந்தவைகள்தான்; அவை அவ்வாறே தொடர்கின்றன.

சீடன்: அப்படியென்றால் எல்லாமே அனைத்தும் உருவான ஊழிமுதற் காலத்திற்குக் கொண்டுசெல்லும். அதேபோல பிரளய காலத்தில் அதுவரை சேர்ந்திருக்கும் வாசனைகள் அனைத்துமே அழிந்து நிர்மூலமாகும். அப்படியானால் மறுபடியும் எதுவும் புதிதாக உருவாவதற்கு அப்போது என்ன மிஞ்சி இருக்கும்?

குரு : எவ்வாறு நீ உறங்கும்போது உனது வாசனைகள் அடங்கி இருந்து, மறுநாள் விழித்ததும் வெளிப்பட்டு உன்னை ஆட்கொள்ளுகிறதோ, அதேபோல முந்தைய கல்ப காலத்தில் அடங்கி இருந்த வாசனைகள் எல்லாம் அடுத்து வரும் கல்ப காலத்தில் மறுபடியும் மேலெழுந்து அனைத்தையும் உருவாக்கும். இவ்வாறாக வரும் மாயையின் லீலைகளுக்குத் தொடக்கமும் கிடையாது; மேலும் திரும்பித் திரும்பி வரும் இயல்பும் கொண்டவை.

93. சீடன்: குருவே! முன்பு நமக்கு நேர்ந்த அனுபவங்கள் நமது ஞாபகத்தில் இருக்கின்றன. அதுபோல முந்தைய பிறவிகளின் அனுபவங்கள் நம் ஞாபகத்திற்கு ஏன் வருவதில்லை?

94-95. குரு : அது இயலாத காரியம். நமது விழிப்பு நிலை அனுபவங்களே நமது கனவு நிலையிலும் தொடர்ந்தாலும், அவை நனவு அனுபவங்கள் போல இல்லாது வேறு மாதிரியாகத்தானே இருக்கின்றன. இடையில் வந்துள்ள உறக்கம் அவ்வாறான மாற்றத்தைக் கொண்டுவருகிறது என்பதுதான் அதன் காரணம். அது முந்தைய சூழ்நிலைகளை உருமாற்றம் அடையவைக்கிறது. அதனால் அனுபவங்கள் ஒன்றாகவே இருந்தாலும் அது மாற்றங்களையும், தடுமாற்றங்களையும் உருவாக்கி வேறுமாதிரி காணவைக்கிறது. அதேபோல முந்தைய பிறவிகளில் நமக்கு வாய்த்த அனுபவங்கள் வாழ்வின் இறுதியில் வரும் நினைவு தப்புதல், இறப்பு இவைகளால் பாதிக்கப்படுவதாலும், வரும் பிறவிகளில் வாய்க்கும் சூழ்நிலைகள் வேறுமாதிரியாக இருப்பதாலும், பல பிறவிகளில் நமது அனுபவங்கள் ஒன்றாகவே இருந்தாலும் அவை மாறுபட்ட சூழ்நிலைகளில் நிகழ்வதால் நாம் அவற்றை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள முடியாது.

96. சீடன்: குருவே! கனவு நிகழ்ச்சிகள் மனத்தளவில் உருவானவை என்பதால் அவை நிரந்தரமற்றவை; அதனால் அவற்றின் உண்மை மறுக்கப்பட்டு, நிகழ்வுகளும் மறக்கப்பட்டு விடுகின்றன. ஆகையால் அவை பொய்த் தோற்றங்கள் என்று சொல்லப்படுவது சரியானதே. அதற்கு நேர்மாறாக, நனவுலகில் நடப்பவை நம் கண் முன் நடப்பனவாகவும், நிகழ்வுகளுக்கு ஒரு தொடர்ச்சி இருப்பதாகவும் காணப்படுவதால் அவை உண்மை என்பதற்கான சாட்சிகளும் பலமாகவே இருக்கின்றன. அதனால் அவைகளைக் கனவுக் காட்சிகளுடன் ஒரே தட்டில் வைத்து, அவைகளும் மயக்கத் தோற்றங்களே என்று எவ்வாறு கூறமுடியும்?

97-98. குரு : கனவுக் காட்சிகள் தோன்றும் சமயம் அவை உண்மையாக நடப்பன போலவே தோன்றுகின்றன. அந்தச் சமயம் அவை பொய்த் தோற்றங்கள் என்று உணரப்படுவதில்லை. அதேபோல நனவுலகக் காட்சிகள் நடக்கும் போதும் அவை பொய்யானவை என்று உணரப்படாது, உண்மையே என்றும் நம்புகிறோம். அவற்றின் உண்மைத் தன்மையைத் துல்லியமாக உணர்வதற்கு நாம் முதலில் நமது உண்மை நிலையை உணரவேண்டும். அப்போதுதான் அவைகளும் பொய்த் தோற்றங்களே என்பது தெளிவாகும்.

சீடன்: அப்படியானால் நனவு, கனவு நிலைகளுக்கு இடையே என்னதான் வித்தியாசம் இருக்கிறது?

99. குரு : அவ்விரண்டுமே மனத்தளவில் நிகழும் மதி மயக்கங்கள் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. நனவு உலகம் சற்றே நீண்டு காணப்படும் மாயம் என்றால் கனவுலகமோ கால அளவில் மிகக் குறைந்து நீடிப்பது என்பதுதான் அவைகளுக்குள் இருக்கும் வேற்றுமை. அதற்கு மேல் அவை இரண்டிற்கும் வேறெந்த வித்தியாசமும் கிடையாது.

100. சீடன்: விழிப்பு நிலையும் கனவு காண்பதுபோலத்தான் என்றால் அப்போது கனவு காண்பவன் யார்?

குரு : இந்தப் பிரபஞ்சம் எல்லாமே இரண்டற்ற ஒன்றேயான பிரம்மத்தின் சத்-சித்-ஆனந்த சொரூபத்தில் காணப்படும் கனவுகளின் விளைவுகளே ஆகும்.

சீடன்: ஆனால் தூங்கும் ஒருவனுக்குத்தான் கனவுகள் வரும் என்பதால் அந்தக் கனவுகளைக் காண்பதற்காக ஒன்றேயான பரம்பொருள் உறங்கச் சென்றுவிட்டது என்றா அதற்கு அர்த்தம்?

குரு : நமது உறக்கம் என்பதை இந்த நிலையில் அனாதி காலத்தில் இருந்தே தொடர்ந்து வரும் பரம்பொருளைப் பற்றிய அறியாமை என்றே பொருள் கொள்ளவேண்டும். அந்த அறியாமையால் காணப்படும் கனவாகவே இந்தப் பிரபஞ்சத்தைக் கருதவேண்டும். எவ்வாறு கனவுக் காட்சிகள் உண்மையில் நிகழாதபோதும் அவற்றைக் காண்பவன் தன்னைக் கனவு காண்பவனாக நினைத்து மயங்குகிறானோ, அதேபோல மாற்றங்கள் ஏதும் இல்லாது உள்ளது உள்ளபடி இருக்கும் ஆன்மா தன்னை ஜீவாத்மாவாகக் குறிப்பிட்ட எல்லைக்குள் குறுக்கிக்கொண்டு சம்சார பந்தங்களை அனுபவிக்கிறது.

101. கனவுலகில் காணப்படும் பொருட்களைப் போல நனவுலகிலும் காணப்படும் தனது உடல், மற்றும் உலகைக் காண உதவும் தன் ஐம்புலன்கள், போன்றவற்றைக் காணும் ஜீவாத்மா அந்த உடலும், ஐம்பொறிகளும் தானே என்று நினைத்து மயங்குகிறான். அந்த

மயக்கத்துடனேயே அவன் தனது விழிப்பு, கனவு, மற்றும் உறக்க நிலைகளில் தினம் தினம் உழன்று கொண்டிருப்பதால் வருவதுதான் அவனது சம்சார பந்தங்கள்.

102-104. சீடன்: “ஜாக்ரத்” எனப்படும் விழிப்பு நிலை என்பது என்ன?
குரு : “நான்” எனும் அகங்கார பாவத்துடன் வளையவரும் ஒருவனது மனத்தின் போக்குகள், மற்றும் வெளியுலகப் பொருட்களுடன் அவனது தொடர்புகள் என்று எல்லாமே ஒருவனது விழிப்பு நிலை சம்பந்தப்பட்டவைகளே. விழிப்பு நிலையை அனுபவிக்கும் ஜீவாத்மா “உடலே நான்” என்ற உணர்வோடு உலகத்தில் இருப்பதால் “விஸ்வம்” என்று அழைக்கப்படுகிறான்.
சீடன்: “ஸ்வப்னம்” எனப்படும் கனவு நிலை என்பது என்ன?
குரு : வெளியுலகத்தோடு தொடர்பு கொண்டுள்ள ஒருவனது பொறிகளும், புலன்களும் அடங்கி இருக்கும்போது, அவனுடைய முந்தைய விழிப்பு நிலையில் அவனிடம் ஏற்படுத்தியிருந்த தாக்கங்கள் வாசனைகளாக வெளிப்பட்டு அவனது கனவில் காட்சிகளாக மலர்கின்றன. இவ்வாறான நுண்ணிய நிலையை அனுபவிப்பன் “தைஜஸன்” என்று அழைக்கப்படுகிறான்.
சீடன்: “சுஷுப்தி” எனப்படும் ஆழ்ந்த உறக்க நிலை என்பது என்ன?
குரு : எல்லாவித மனோபாவங்களும் மூல காரணமான அறியாமையில் அடங்கி ஒடுங்கி இருப்பதே உறக்கம் எனப்படுகிறது. அந்த நிலையை அனுபவிப்பவனை “பிரக்ஞன்” என்பார்கள். அதற்கு ஆத்மாவின் ஆனந்தமய குணம் உண்டு.

105. இவ்வாறாக மாறி மாறி வரும் விழிப்பு, கனவு, மற்றும் உறக்க அனுபவங்களை தனது முந்தைய கர்மங்களுக்குத் தகுந்தபடி தன் வாழ்நாளில் அனுபவித்துக்கொண்டு ஒரு ஜீவன் சம்சார சாகரத்தில் உழன்றுகொண்டு இருக்கிறான். அவ்வாறே அவன் தனது பூர்வ கர்ம புண்ய-பாவ பலன்களினால் பிறப்பு-இறப்புகளை அடைந்து பற்பல பிறவிகளையும் தொடர்ந்து காண்கிறான்.

106. ஒருவன் பல பிறவிகளை அடைகிறான் என்று சொல்லப்பட்டாலும் அவை அனைத்துமே மதி மயக்கத்தால் காணப்படும் காட்சிகளே அன்றி உண்மை அதுவல்ல. ஒருவன் அவ்வாறு பிறப்பதாகவும், இறப்பதாகவும் காணப்படுகிறான் என்று மட்டுமே சொல்லமுடியும்.
சீடன்: பிறப்பையும், இறப்பையும் வெறும் காட்சிகள் என்று எப்படிச் சொல்லமுடியும்?
குரு : நான் இப்போது சொல்லப்போவதைக் கவனமாகக் கேள்.

107-109. எவ்வாறு ஒரு ஜீவனை தூக்கம் ஆட்கொள்ளும்போது, அவன் முன்பு விழிப்பு நிலையில் அனுபவித்த நிகழ்வுகளை நடத்திக் காட்டுவதற்காக அவனது நினைவுகளை கனவில் வேறுமாதிரி உருவாக்குவது போலவும், அல்லது எதுவுமே நினைவில் இல்லாது போய் அவன் முன்பு கண்ட எல்லா உலகப் பொருட்களுமே காணப்படாதது போலவும் ஆகிறதோ, அதே போல இறக்கும் தருவாயில் ஒருவனுக்கு நினைவு தப்பும்போது அவனுக்கு முன்பு கண்ட காட்சிகளும், கோலமும் அடியோடு மறந்து போய் அவனது மனமும் நிலைகுத்தி நிற்கிறது. அதைத்தான் இறப்பு என்று சொல்கிறோம். எப்போது அவ்வாறு நின்ற மனம் மறுபடியும் அசைபோட்டு பழைய நிகழ்வுகளைப் புதிய சூழ்நிலையில் உருவாக்க முனைகிறதோ, அதையே பிறப்பு என்கிறோம். “இவர் என் தாய். நான் அவரது கருவில் வாசம் செய்கிறேன். என் உடலுக்குக் கை, கால் முதலிய அவயவங்கள் இருக்கின்றன” என்று எப்போது ஒருவன் நினைக்கத் தொடங்குகிறானோ அப்போதிருந்தே ஒரு பிறவியின் தொடக்கம் நிகழ்கிறது. தொடர்ந்து அவன் தன்னை உலகத்தில் பிறந்திருக்கும் ஒருவனாக நினைத்துக்கொள்கிறான். மேலும் “இவர் என் தந்தை; இவன் என் மகன்; எனக்கு இவ்வளவு வயது ஆகிறது; இவர்கள் என் உற்றார், உறவினர்கள்; இந்த அழகான வீடு என்னுடையது” என்றெல்லாம் தன் வாழ்நாள் முழுதும் அடுக்கிக்கொண்டே போகிறான். இறப்பிற்கு முன்னால், அவனுக்கு இருக்கும் நினைவுகள் தவறவே, அப்போது அவனிடம் இருக்கும் மயக்கங்களைத் தள்ளிவிட்டு, அவனது கர்ம பலன்களுக்கு ஏற்ப புதிய மயக்கங்கள் வரும் பிறவியில் அவனுக்குள் குடிபுகுகின்றன.

110-113. ஒரு ஜீவனின் இறப்பிற்கு முன்னால் வரும் இன்னொரு மயக்கமான நினைவு தவறுகிற சமயத்தில், முந்தைய கர்மங்களின் படி அவனுக்கான வேறு சில மயக்கங்கள் தோன்றும். அவன் இறந்ததும், “இது தேவலோகம்; இது மிகவும் அழகாக இருக்கிறது; நான் இப்போது ஒரு தேவ உருவில் இருக்கிறேன்; அதிரூப தேவதைகள் பலரும் எனக்குப் பணிவிடை செய்யக் காத்திருக்கின்றனர்; நான் பருகுவதற்கு எனக்கு அமுதமே இங்கு கிடைக்கிறது”, அல்லது “இது நரகம்; இங்கு யமன் கோலோச்சி அமர்ந்திருக்கிறான்; அவனைச் சுற்றி இருப்பவர்கள் யம கிங்கரர்கள்; ஐயோ! அவர்கள் எவ்வளவு கொடூரமானவர்கள்; அவர்கள் என்னை நர குழியில் தள்ளிப் பாடுபடுத்துகிறார்கள்” என்றோ அல்லது “இது பித்ருக்கள் வசிக்கும் இடம்; அல்லது சிவனோ, விஷ்ணுவோ, பிரம்மனோ இருக்கும் இடம்” என்ற பலவிதமான நம்பிக்கைகள் அந்த ஜீவனுக்கு வருகின்றன. அவனது முந்தைய கர்மங்களுக்கு ஏற்றார்போல அந்த நம்பிக்கைகளில் சில அந்த ஜீவனுக்கு வருகின்றன என்றாலும், ஜீவன் என்ற உணர்வே அப்போதும் அவனுக்கு இருக்கும். உண்மை இருப்பான ஆத்மாவோ பிறப்பு இறப்பு என்ற மாற்றங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்டு நின்று, சொர்க்கம்,

நரகம், நீத்தார் உலகங்கள் எல்லாவற்றையும் கடந்து, என்றும் மாறாத அறிவு மற்றும் ஆனந்த மயமாகத் திகழ்கிறது. அதை விடுத்துக் காணப்படும் மற்ற காட்சிகள் எல்லாம் மதி மயக்கங்களால் உருவானவைகளே; உண்மை அல்ல.

114. அவ்வாறு எந்த மாற்றமும் காணாது, எப்போதும் இருக்கும் ஆன்மாவில்தான் ஆகாய வெளியில் மந்திரத்தால் வரவழைக்கப்பட்ட ஒரு நகரத்தைப் போல உலகமும் உதிக்கிறது. அது உண்மையான வஸ்து போலக் காணப்பட்டாலும் அது உண்மையானது அல்ல. அதற்கு ஓர் உருவமும், ஒரு பெயரும் இருந்தாலும் அதற்கு மேல் எதுவும் இருக்காது.

115. சீடன்: குருவே! சல உயிர்களும், அசல வஸ்துக்கள் பலவும் இருக்கும் இந்த உலகம் உள்ளதை நான் மட்டும் அல்லாது பலரும் தங்கள் அனுபவங்கள் வாயிலாக நேரடியாக உணர்வதை, இல்லாத ஒன்று என்று எப்படி மறுத்துக் கூற முடியும்?

116. குரு : நானாவிதப் பொருட்களையும் உள்ளடக்கிய இந்த உலகம் பரந்து விரிந்து எப்போதும் உள்ள ஆன்மாவின் தன்மையால்தான் காணப்படுகிறது.

சீடன்: அந்த அடித்தளத்தை மறைப்பது எது?

குரு : ஆன்மாவின் இருப்பைப் பற்றிய ஜீவனது அறியாமையே.

சீடன்: எவ்வாறு அந்த மறைத்தல் நிகழ்கிறது?

குரு : ஒரு திரைச்சீலையில் இருக்கும் ஓவியம் திரையை மறைப்பது போல, காணப்படும் காட்சிகளான சல உயிர்களும், அசலப் பொருட்களும் ஆன்மாவை மறைக்கிறது.

117. சீடன்: வேத சாஸ்திரங்கள் அனைத்துமே இறைவனின் உணர்வால் உலகங்கள் உருவாகின்றன என்று கூறும்போது, தாங்களோ ஜீவனின் அறியாமையால் அவை உருவாகின்றன என்கிறீர்கள். இந்த இரண்டு கூற்றுக்களில் உள்ள முரண்பாட்டை எப்படிப் புரிந்துகொள்வது?

118. குரு : அந்த இரண்டு கூற்றுக்களின் இடையே பேதம் என்று ஏதும் கிடையாது. இறைவனின் மாய லீலைகளால் உருவாகிய பஞ்சபூதப் பொருட்கள், மற்றும் அவைகளின் வெவ்வேறு விகிதாசாரக் கலவையால் வெளிப்பட்டுள்ள விதவிதமான உலகக் காட்சிகள் ஆகிய அனைத்துமே பொய்த் தோற்றங்கள் என்றே சாஸ்திரங்கள் கூறுகின்றன.

சீடன்: ஒன்றைப் பொய்த் தோற்றம் என்று சாஸ்திரம் எப்படிச் சொல்லமுடியும்?

குரு : அறியாமல் இருப்பவர்களுக்கு சாஸ்திரங்கள் வழிகாட்டிகளாக இருக்கின்றன. வெளிப்பார்வைக்குத் தோன்றுவதை மட்டும் வைத்துக்கொண்டு அவை எதையும் சொல்வதில்லை.

சீடன்: அது எப்படி?

குரு : தனது உண்மையான சச்சிதானந்த சொரூபத்தை மறந்து, தன்னை உடலாகப் பாவித்து அறியாமையில் உழலும் ஒருவன் தன்னை ஒரு ஜீவனாகக் குறுக்கிக்கொண்டு, தனது வல்லமையை குறைத்து மதிப்பிட்டுக் கொள்கிறான். அவனிடம் "நீ உலகத்தையே படைக்கும் வல்லமை கொண்டவன்" என்று சொன்னால், அவன் அதனை ஒத்துக்கொள்ள மறுக்கிறான். அதனால் அவனது நிலைக்கு சாஸ்திரங்கள் இறங்கி வந்து உலகை உருவாக்கும் சக்தி படைத்த இறைவன் என்றோர் உருவகத்தை அவனுக்கு எடுத்துரைக்கின்றன. அது உண்மையல்ல என்றாலும், என்றும் உள்ள உண்மையை, அதை உணர்ந்துகொள்ளும் வல்லமை படைத்த சாதகனுக்கு சாஸ்திரம் உள்ளபடியே எடுத்துக்காட்டுகிறது. இப்போது நீ பரமார்த்திக உண்மைக்குப் பதிலாகச் சிறுவர்களுக்குக் கூறும் கட்டுக்கதையை நம்பிக்கொண்டு இருக்கிறாய். இதைச் சொல்லும்போது யோக வாசிஷ்டத்தில் வரும் ஒரு சிறுவர் கதை உனக்கு ஞாபகத்திற்கு வரலாம்.

119-134. சீடன்: அது என்ன கதை?

குரு : இந்த உலகம் ஒரு வெத்து வேட்டு என்பதை உணர்த்தும் அந்தக் கதை ஒரு சுவாரஸ்யமான கதை. அதைக் கேட்டால் உலகம் உண்மை, மற்றும் இறைவன் அதைப் படைத்துள்ளான் என்ற உண்மைக்குப் புறம்பான கூற்றுக்கள் அனைத்தும் ஒரேயடியாக மறைந்து போகும். சுருக்கமாகச் சொன்னால் அந்தக் கதை இப்படிப் போகும்:

ஒரு குழந்தை தன் ஆயாவிடம் சுவாரஸ்யமான கதை ஒன்றைச் சொல்லக் கேட்டது. அதற்கு அந்த ஆயா இப்படியான கதை ஒன்றைச் சொன்னாள்.

ஆயா: ஒரு மலடித் தாய்க்குப் பிறந்த ஆளுமை மிக்க பேரரரசன் ஒருவன் மூவுலகங்களையும் ஆண்டு வந்து பெரும் புகழோடு விளங்கினான். அந்த உலகங்கள் அனைத்திலும் இருந்த அரசர்கள் அனைவருக்கும் அவன் வைத்ததுதான் சட்டம். அந்தப் பேரரசனுக்கு உலகங்களை உருவாக்குவது போலவும், பராமரிப்பது போலவும், அழிப்பது போலவும் ஆகிய மாயத் தோற்றங்களைச் செய்யும் பெரும் வல்லமை இருந்தது. அவன் நினைத்த மாத்திரத்தில் தன் உடலை வெளுப்பாகவோ, கருப்பாகவோ, மஞ்சளாகவோ மாற்றிக்கொள்ளும் தன்மையும் இருந்தது. அவ்வாறு அவன் மஞ்சள் உடலில் இருக்கும்

போதெல்லாம், ஒரு மந்திரவாதியைப்போல ஒரு நகரத்தையே உருவாக்கும் எண்ணம் அவனுக்கு இயற்கையாவே வந்து, அதைச் செய்தும் முடிப்பான்.

குழந்தை: அந்த நகரம் எங்கிருக்கும்?

ஆயா : அது ஆகாயத்தில் தொங்கிக்கொண்டு இருக்கும்.

குழந்தை: அதற்கு என்ன பெயர்?

ஆயா : அதை மாயா ஜால் என்பார்கள்.

குழந்தை: அதை எப்படிக் கட்டியிருப்பார்கள்?

ஆயா : அந்த நகரத்தில் இருந்த மொத்தம் பதினான்கு ராஜபாட்டைகளை மூன்றாகப் பிரித்து, ஒவ்வொன்றிலும் முத்துக்களாலும், மணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட வண்ண மலர் பூங்காக்கள், மாட மாளிகைகள், மற்றும் ஏழு பிரம்மாண்ட ஏரிகளும் இருக்கும். ஒன்று சூடாகவும், இன்னொன்று குளிர்ந்ததாகவும் இருக்கும் இரண்டு விளக்குகள் அந்த நகரத்தை எப்போதும் ஒளிர்வித்துக்கொண்டு இருக்கும். மலடியின் புத்திரனான அரசன் அந்த நகரத்தில் மேல், கீழ் மற்றும் நடு என்றபடியான வெவ்வேறு சமதளங்களில் விதவிதமான அழகுடன் மிளிரும் வீடுகளைக் கட்டியிருந்தான். ஒவ்வொரு வீட்டிலும் கருப்பு நிறத்தில் வழுவழுப்பான கூரையும், ஒன்பது வாசல்களும், காற்று நன்கு வீசுவதற்காக பல ஜன்னல்களும், ஐந்து விளக்குகளும், வெண்மை வண்ணத்தில் மூன்று தூண்களும், நன்கு பூசப்பட்ட சுண்ணாம்புச் சுவர்களும் இருந்தன. பார்த்தாலே பயப்படக்கூடிய பூதங்களை அவன் தனது மந்திர சக்தியால் வரவழைத்து, அதனை ஒவ்வொரு வீட்டிற்கும் ஒன்றாக காவலாளியாக வைத்திருந்தான். ஒரு பறவை தன்னிச்சையுடன் பறந்து திரிவது போல, அவன் வேண்டியபோது வேண்டிய வீட்டிற்குச் சென்று, தன் மனம் போனபடி சகல போகங்களுடன் ஆனந்தமாக இருந்துவிட்டு வந்தான்.

135-140. அவன் கருப்பு உடலில் இருக்கும்போது, அந்த மாய பூதங்கள் மூலம் அந்த வீடுகள் அனைத்தையும் கட்டிக் காத்துக்கொண்டு இருப்பான். அவன் வெள்ளை உடல் எடுத்தால் ஒரு நொடி நேரத்தில் அவை அனைத்தையும் பொசுக்கிச் சாம்பலாக்கி விடுவான். இவ்வாறாக அந்த மலடி மைந்தனான அரசன் நகரம் உட்பட அனைத்தையும் பலமுறை உருவாக்கி, பாதுகாத்து, அழித்துச் செய்யும் லீலையில் ஈடுபட்டிருந்தான். அதைத் திரும்பித் திரும்பி ஓர் அறிவிலி போல அவன் செய்துகொண்டு இருக்கும் போது அவனுக்கு ஒருமுறை அலுப்பு தட்டவே, அவன் புத்துணர்வு பெறும் நோக்கத்தோடு கானல் நீர் நிறைந்த குளம் ஒன்றில் மூழ்கி எழுந்து, ஆகாயத் தாமரை மலர்களைப் பறித்துத் தன் தலையில் சூட்டிக்கொண்டான். நான் அவனைப் பார்த்திருக்கிறேன்; பளபளக்கும் கண்ணாடித் துண்டுகளாலும், முத்துச் சிப்பிகளாலும் கோர்க்கப்பட்ட நான்கு சரங்கள்

கொண்ட மணி மாலை ஒன்றை உனக்கு பரிசாக அளிக்க அவன் விரைவில் இங்கு வருவான்.

அதைக் கேட்ட அந்தக் குழந்தை கதையை உண்மை என்றே நம்பி, மிக்க மகிழ்ச்சியும் அடைந்தது. அதைப் போலத்தான் இந்த உலகத்தை உண்மை என்று நம்பும் முட்டாள்களின் நிலையும்.

141-148. சீடன்: இந்தக் கதை நாம் காண வந்ததை எப்படி விளக்குகிறது?
குரு : இந்தக் கதையில் வரும் குழந்தையைப் போல இருப்பவன் தான் உலகத்தின் உண்மையைப் பற்றி அறியாதவன். கதையைச் சொல்லும் ஆயா தான் அனைத்தையும் படைத்தவன் இறைவன் என்று கூறும் சாஸ்திரங்கள். மலடியின் மகனாக வரும் அரசன் தான் மாயையால் உருவாக்கப்படும் இறைவன். அவனது மூன்று உடல்கள் தான் மாயையின் முக்குணங்கள். அவன் அந்த உடல்களை எடுக்கும் போது அவனை பிரம்மா, விஷ்ணு, அல்லது ருத்ரன் என்று அறிகிறோம். மஞ்சள் உடல் கொண்ட அரசன் தான் பிரபஞ்சம் முழுவதிலுமே ஒரு பிணைக்கயிறாக பரவி நிற்கும் பிரம்மன்; அவனது பரந்த உணர்வில் உருவாகுவது தான் கதையில் வரும் ஆகாய மாளிகை; அதுதான் எப்போதும் இருப்பதாகக் காணப்படும் மாயை. பதினான்கு ராஜபாதைகள் எனப்படுவது ஈரேழு பதினான்கு உலகங்கள்; வண்ண மலர்ப் பூங்காக்கள் தான் காடுகள்; மாட மாளிகைகள், கூட கோபுரங்கள் தான் மலைப் பிரதேசங்கள்; சூரியனும், சந்திரனும் தான் நகரை ஒளிர்விக்கும் இரு விளக்குகள்; மணிகளால் அலங்கரிக்கப்பட்ட ஏரிகள் தான் ஆறுகள் அனைத்தும் ஓடிக் கலக்கும் கடல்கள்.

149-155. மேலே, இடையே, கீழே உள்ள சமவெளிகளில் கட்டப்பட்டுள்ள வீடுகள் தான் முறையே தேவர்கள், மனிதர்கள், மற்றும் விலங்குகள் ஆவார்கள்; மூன்று வெண்ணிறத் தூண்கள் தான் உடலில் இருக்கும் எலும்புக் கூடுகள்; பூசப்பட்ட சுண்ணாம்புச் சுவர் தான் உடலைப் போர்த்தியிருக்கும் தோல்; கருப்பு நிறத்தில் உள்ள கூரை தான் தலை மேல் உள்ள ரோமம்; ஒன்பது வாயில்கள் தான் நம் உடலில் இருக்கும் நவத் துவாரங்கள்; ஐந்து விளக்குகள் தான் நமது ஐம்பொறிகள், புலன்கள்; காக்கும் பூதம் தான் “நான்” என நினைக்கும் அகந்தை.

மலடித் தாயான மாயையின் மைந்தனான அந்த அரசன் உடல்களாகிய வீடுகளைக் கட்டிவிட்டு, அவைகள் ஒவ்வொன்றிலும் ஜீவனாகப் புகுந்து, மாயத் தோற்றமான அகந்தையுடன் கை கோத்துக்கொண்டு, இலக்கு என்று எதையும் கொள்ளாது இயங்குகிறான்.

156-160. அரசன் கருநிற உடல் எடுக்கும்போது, “விராட்” எனப்படும் விஷ்ணுவாக இயங்கி உலகைக் கட்டிக்காத்து வருகிறான். அவனே வெண்ணிற உடல் எடுக்கும்போது, அனைவருள்ளும் உறையும் ருத்ரனாக இயங்கி உலகை அழித்து தன்னுள் இழுத்து வைத்துக்கொள்கிறான். இவ்வாறாக அவன் தொடர்ந்து நடத்தும் விளையாட்டு லீலைகளைச் செய்து அதில் இன்புற்று இருக்கிறான். கானல் நீரில் குளித்துவிட்டு புத்துணர்வோடு வருகிறான் என்பது தான் அவனது மகிழ்ச்சியின் வெளிப்பாடு. அவனது கர்வமே அவனது சர்வ வல்லமையின் வெளிப்பாடு. ஆகாய மலர்கள் தான் எங்கும் பரவியிருந்து, எப்போதும் செயல்படும் அவனது குணங்கள். சொர்க்கமும், நரகமுமே அவன் அணிந்திருக்கும் சிலம்புகள். நான்கு சரங்கள் கொண்ட பளபளக்கும் மணிமாலை என்பதுதான் அவன் அளிக்கவிருக்கும் முக்தி என்பதன் நான்கு நிலைகளான சாலோக்கியம், சாமீப்பியம், சாரூப்பியம், மற்றும் சாயுஜ்ஜியம் ஆகும். அவைகளே தரத்திலும், நிலைப்பாடுகளிலும், மற்றும் வல்லமையிலும் அனைவரையும் சரிநிகர் சமானமாக்கி, இறுதியில் ஒருவனது சுயரூபத்தையும் காட்டும் நிலைகள். பரிசுகளை அளிக்கப்போகும் அரசனது வருகையை எதிர்பார்த்து இருப்பது என்பதே உருவ வழிபாட்டு முறையும், அவ்வாறு வழிபட்டு வேண்டுவோர்க்கு வரப் போகும் விளைவுகளும் என்பதாகும்.

இதைப் போலவே சாஸ்திரங்களைக் கண்மூடித் தனமாகப் பின்பற்றும் அறிவிலிகளும், காணும் உலகத்தை உண்மையென நம்பி தங்கள் அறியாமையால் மயங்குகின்றனர்.

161. சீடன்: சொர்க்கமோ, நரகமோ அல்லது முக்தியின் நான்கு நிலைகளுமோ, அனைத்துமே உண்மையல்ல என்னும்போது, எதற்காக முக்தியை நாடுவதற்கும், நரகத்தைத் தவிர்ப்பதற்கும், சொர்க்கத்தை விரும்புவதற்குமான வழிகளைப் பற்றி சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன?

162-164. குரு : ஒரு குழந்தை வயிற்று வலியால் துடிக்கும்போது, அதற்கான மருந்து மிளகு என்பதையும், அது குழந்தைக்குப் பிடிக்காது என்பதையும் அறிந்த அதன் தாய் அந்த மிளகின் மேல் குழந்தை மிகவும் விரும்பும் தேனை நன்கு தடவி, அந்த மிளகை குழந்தைக்கு ஊட்டுவாள். அதைப் போலவே அறியாமையில் மயங்கி உலக அனுபவங்களில் ஈடுபட்டுத் துடிக்கும் ஒருவனுக்கு, அவனது உண்மை நிலையை உணரவைக்கும் பொருட்டு, உலக இன்பங்களில் அவனுக்கு இருக்கும் ஈடுபாட்டையும், புரிந்துகொள்வதற்குக் கடினமாக இருக்கும் பரமார்த்திக உண்மை நிலையை அவன் தவிர்ப்பதையும் நன்கு புரிந்துகொண்ட சாஸ்திரங்கள் அவன் மேல் இரக்கம் கொண்டு, இறுதியான சச்சிதானந்த நிலையைப் பற்றி

முதலிலேயே விவரிக்காமல், பேரின்பமயமான சொர்க்கம் போன்ற நல்லுரைகளைக் கூறி அவனை வழிக்குக் கொண்டுவர முயல்கின்றன.

165. சீடன்: இன்பமயமான இந்திரலோகங்களைப் பற்றிக் கூறுவது அவனை எவ்வாறு பரமார்த்திக அத்வைத நிலையை நாட வைக்க முடியும்?
குரு : தர்ம வழிகளில் நடப்பதால் சொர்க்கம் கிட்டும்; விஷ்ணுவின் மேல் பக்தி கொள்வதும், சாஸ்திர சம்பிரதாயங்களின் படி வாழ்வதால் முக்தியின் நான்கு படிகள் ஒவ்வொன்றையும் அடைந்து கடக்க முடியும் என்பதை ஒருவன் தெரிந்துகொள்ளும்போது, அவனுக்கு விருப்பமான தர்ம வழி ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதன்படி நடக்க முயல்கிறான். அவ்வாறு அவன் ஒரு தர்மவானாக பல ஜன்மங்களில் வாழ்ந்து வருவதால் அவனது மனம் உலக இன்ப வழிகளில் செல்வதில் இருந்து விடுபட்டு, அத்வைத பரம்பொருளைக் காணும் வழிக்குத் திரும்புகிறது.

166. சீடன்: குருவே! சொர்க்கமோ, நரகமோ இல்லை என்று ஒத்துக்கொள்ளும் போது, சாஸ்திரங்கள் பலமுறை கூறும் இறைவனும் இறுதியில் இல்லை என்பதை எப்படி விளக்கிச் சொல்வது?

167: குரு : இறைவனின் புகழை ஏற்றிச் சொல்லும் பகுதிகள் எல்லாவற்றிற்கும் பின்னுரையாக இறைவன் என்பது மாயையாலும், ஜீவன் என்பது அறியாமையாலும் உருவானவைகளே என்றும் கூறப்பட்டிருக்கிறது.
சீடன்: வெவ்வேறு விதமான விளக்கங்களுக்குத் தேவை இருக்கும் வகையில் உள்ள சாஸ்திரங்களின் பல கூற்றுக்கள் ஏன் ஒன்றுக்கொன்று முரண்பட்டு நிற்கின்றன?
குரு : நல்ல செயல்கள், சாஸ்திரங்கள் சொல்படி வாழ்தல், பக்தி என்றிவ்வாரான தனது சொந்த முயற்சிகள் மூலமே ஒருவன் தனது எண்ணங்களையும், மனதையும் புனிதமாக்கிக் கொள்ளவேண்டும் என்பதே சாஸ்திரங்களின் நோக்கம். அவனை அந்த வழியில் செல்ல வைக்க, முன்பு சொல்லப்பட்டது எல்லாமே ஆனந்தம் கொடுக்கும் என்று சொல்வதை ஓர் உபாயமாகவே கொண்டுள்ளார்கள். தன்மையால் உணர்வற்று இருக்கும் பூதப் பொருட்கள் எதுவும் தானாகவே எந்த விதமான பலன்களையும் கொடுக்க இயலாது. அதனால் அனைத்து சக்திகளையும் கொண்ட இறைவன் ஒவ்வொரு கர்மத்திற்கும் உண்டான பலன்களை அருள்வதாகக் கூறப்படுகிறது. இவ்வாறாகத்தான் இறைவன் இந்த ஆட்டத்திற்குள் புகுகிறார். ஜீவன், இறைவன், விழிப்பு நிலை என்ற அனைத்தும் உண்மையல்ல என்று சாஸ்திரங்களே பின்பு கூறும்.

168. உறக்கத்தில் வரும் கனவில் காணப்படும் ஒருவன் எவ்வளவு உண்மையோ, அவ்வளவே இறைவன் என்ற உருவாக்கத்தின் உண்மையும். இறைவன் என்ற உருவகமும், அறியாமையால் தன்னை ஜீவன் என்று நினைப்பதும், உறக்கத்தில் கனவில் காணப்படுபவனும் ஆகிய அனைவரும் ஒரே தரத்தினர்களே.

169-174. சீடன்: மாயையால் உருவானது இறைவன் என்று சாஸ்திரங்கள் கூறும்போது, எவ்வாறு அவனை அறியாமையால் உருவானவன் என்று சொல்லலாம்?

குரு : ஒரு தனி மரம் அல்லது காடு என்பது போல ஒருவனின் அறியாமை ஒருமையாகவோ அல்லது பன்மையாகவோ இருந்து செயல்படலாம். அவ்வாறாக பிரபஞ்சத்தில் இருக்கும் அனைத்து அறியாமைகளின் ஒட்டுமொத்த உருவகமே மாயை எனப்படுகிறது. அந்த மாயையில் இருந்து உருவாகும் இறைவன் பிரபஞ்சத்தின் விழிப்பு நிலையில் ஒரு “விராட்” புருஷனாகச் செயல்படுகிறான். பிரபஞ்சத்தின் கனவு நிலையில் “ஹிரண்யகர்பன்” ஆகவும், ஆழ்ந்த உறக்க நிலையில் “உள்ளத்துள் உறைபவன்” ஆகவும் அவனே செயல்படுகிறான். அவன் எங்கும் இருப்பவன்; எல்லாவித ஆற்றல்களும் கொண்டவன். படைப்புகளை உருவாக்கும் “மனம்” என்பதில் தொடங்கி, அனைத்து சீவராசிகளுக்கு உள்ளும் உறைபவன் என்பதில் முடிவடையும் ஆற்றல் வரை அனைத்துமே அவனது சம்சாரம் எனப்படுகிறது. ஒருவனின் தனிப்பட்ட அறியாமை சாதாரண அறியாமை எனப்படுகிறது. அதன் விளைவாக எழும் ஜீவாத்மா நனவு நிலையில் “விஸ்வன்” ஆகவும், கனவு நிலையில் “தைஜசன்” ஆகவும், ஆழ்ந்த உறக்க நிலையில் “பிரக்ஞன்” ஆகவும் செயல்படுகிறான். அவனுடைய அறிவும், ஆற்றலும் அளவிற்கு அப்பாற்பட்டது. அவனே கர்த்தாவாகவும், கர்மத்தின் பலனை அனுபவிப்பவனாகவும் இருக்கிறான். அவனது சம்சார பந்தமானது அவனுடைய விழிப்பு நிலைச் செயல்பாடுகளில் தொடங்கி, அவனது இறுதி முக்தி நிலை வரை தொடர்கிறது. இவ்வாறாக இறைவன், ஜீவன், மற்றும் உலகம் என்ற அனைத்துமே மாயத் தோற்றங்கள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

175-179. சீடன்: குருவே! கயிற்றைப் பற்றிய அறியாமை ஒரு பாம்பைப் போல மட்டுமே தோற்றத்தைக் கொடுக்கலாம் என்பது போல, தன்னைப் பற்றிய அறியாமை தான் ஜீவன் என்றொரு மாயத்தை உருவாக்கலாம். ஆனால் அதுவே எவ்வாறு இறைவன் என்றும் உலகம் என்றும் ஆகிய பொய்த் தோற்றங்களை அளிக்க முடியும்?

குரு : அறியாமையைப் பல பகுதிகளாகப் பிரிக்க இயலாது. ஒரே சமயத்தில் அது மூன்று பொய்த் தோற்றங்களையும் ஒட்டுமொத்தமாக உருவாக்கும். நனவு, கனவு நிலைகளில்

ஜீவாத்மாவாக உணரப்படும் வேளையிலேயே இறைவன், மற்றும் உலகமும் காணப்படுகிறது. தான் ஜீவன் என்னும் உணர்வு மறையும்போது மற்றவைகளும் தானாகவே மறைந்து போகின்றன. நமது நனவு மற்றும் கனவு நிலைகளில் நமக்குக் கிடைக்கும் அனுபவங்கள், நமது ஆழ்நிலைத் தூக்கம், மயக்க நிலை, இறப்பு, அல்லது சமாதி நிலைகளில் காணாமல் போவது என்றெல்லாமே அதற்கான சான்றாகும்.

அது தவிர, நமது உண்மை நிலையைப் பற்றிய தெளிவான அறிவை நாம் அடையும்போது, ஜீவன் என்ற உணர்வோடு ஒட்டுமொத்தமாக மற்றவைகளும் அந்த இறுதி நிலையில் காணாமல் போகின்றன. அவ்வாறான அறியாமை அடியோடு மறைந்து, அத்துடன் மற்ற பொய்த் தோற்றங்களும் மறைந்து, சச்சிதானந்த சொரூபமாய் விளங்கும் ஞானிகளுக்கு ஒன்றேயான அத்வைத உண்மைப் பொருள் மட்டுமே நேரடி அனுபவமாக இருக்கும். அதனால் மூன்றாகக் காணப்படும் ஜீவன், உலகம், இறைவன் என்ற பொய்த் தோற்றங்களுக்கு மூல காரணமாக இருப்பது தன்னைப் பற்றிய அறியாமையே.

180. சீடன்: குருவே! இறைவன் அறியாமையால் காணப்படும் மாயத் தோற்றம் என்றால் அவர் அப்படியே அல்லவா இருக்கவேண்டும்? ஆனால் அவரோ பிரபஞ்சத்தின் வித்தாகவும், நம்மைப் படைக்கும் கடவுளாகவும் காணப்படுகிறார். அதனால் இறைவனையும், உலகத்தையும் மாயத் தோற்றங்களாகச் சித்தரிக்கப்படுவதை எனது அறிவு ஏற்றுக்கொள்ள மறுக்கிறது. இறைவனை நாம் உருவாக்கினோம் என்பதைவிட இறைவன் நம்மை உருவாக்கினார் என்பதே சரியாகத் தோன்றுகிறது. இரண்டிற்கும் வேற்றுமை இருக்கிறது அல்லவா?

181-183. குரு : இல்லை. கனவு காணும் ஒருவன் அவனது கனவில் எப்போதோ இறந்துபோன அவனது தந்தையைக் காண்கிறான். அவ்வாறு காணப்படும் தந்தை அவன் தன்னுடைய கனவில் தானே உருவாக்கிய ஒரு மாயத் தோற்றம் தான் என்றாலும், அப்போது காணப்படுவது அவன் தந்தை என்பதையும், தான் அவரது மகன் என்பதையும் உணர்வதோடு, அவரது சொத்துக்கள் தனக்கு வந்து சேர்ந்துவிட்டன என்றும் நினைக்கிறான். அந்தச் சொத்தும் அவனது கனவில் உருவானவைகளே. இவ்வாறாக மனிதர்களையும், பொருட்களையும் மாயமாக உருவாக்குவதோடு, அவைகளுக்கு இடையில் உறவையும் உருவாக்கி, அவைகளில் மற்றவை முன்பு வந்தன, தான் பின்னர் வந்தவன் என்பதையும் நினைவில் கொள்கிறான். அதைப் போன்றதே இறைவன், உலகம், மற்றும் ஜீவன் என்ற பொருட்களும் அதன் தொடர்புகளும். அது இல்லாததை இருப்பதாகக் காட்டும் மாயையின் லீலையே அன்றி வேறெதுவும் இல்லை.

சீடன்: மாயைக்கு அத்தகைய சக்தி எப்படி வந்தது?

குரு : இதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது? ஒரு சாதாரண மந்திரவாதி இல்லாத ஒரு நகரத்தை ஆகாயத்தில் வரவழைப்பதைப் பார். ஏன், நீயே உனது கனவில் இல்லாத உலகம் ஒன்றை உருவாக்குகின்றாய். இவ்வாறு சாதாரண ஆற்றல்கள் உள்ளவர்களே அத்தகைய மாயங்களை உருவாக்க முடிகிறது என்றால், பிரபஞ்சத்தையே உருவாக்கவல்ல மாயையால் என்னதான் செய்ய முடியாது? முடிவாகக் கூறவேண்டியது என்னவென்றால் இறைவன், ஜீவன், உலகம் என்ற அனைத்துமே ஒருவனது உண்மையான ஆத்ம சொரூபத்தின் மேல் அவனது அறியாமையால் காணப்படும் மாயத் தோற்றங்களே.

ஆகவே இனி நாம் இருக்கும் ஒன்று இல்லாத ஒன்றாகத் தோன்றுவதை நீக்கும் வழிகளைக் கூர்ந்து ஆராயவேண்டும்.

## 2. அபவாதம் : வேறாகக் காணப்படும் காட்சியை நீக்குவது

1. சீடன்: அறியாமை என்பதற்கு ஒரு தொடக்கம் இல்லை என்று கூறப்படுவதால், அதற்கு ஒரு முடிவும் இல்லை என்றுதான் நாம் கொள்ளமுடியும். அவ்வாறு ஒரு தொடக்கமே இல்லாத அறியாமையை நாம் எவ்வாறு அகற்ற முடியும்? கருணைக் கடலான குருவாகிய தாங்களே எனக்கு இது பற்றி மேலும் விளக்க வேண்டும்.

2. குரு : ஆம், குழந்தாய்! நீ ஓர் அறிவாளி; பல நுண்ணிய கருத்துக்களையும் உன்னால் புரிந்துகொள்ள முடிகிறது. நீ சரியாகத்தான் சொல்கிறாய்; அறியாமைக்குத் தொடக்கம் இல்லை என்பது உண்மையானாலும், அதற்கு முடிவு என்று ஒன்று இருக்கிறது. அறிவின் தொடக்கமே அறியாமையின் முடிவு என்று கூறப்படுகிறது. எவ்வாறு இரவின் இருளை சூரியோதயம் விரட்டுகிறதோ, அவ்வாறே அறியாமை எனும் அந்தகாரத்தை அறிவின் ஒளி ஒரு முடிவுக்குக் கொண்டுவருகிறது.

3-4. குழப்பம் எதுவும் வராமல் தடுப்பதற்காக, உலகில் உள்ள அனைத்துப் பொருட்களையும் அவைகளின் காரணம் (हेतु), இயல்பு (स्वभाव), பாதிப்பு (कार्य), எல்லை (अवधि), மற்றும் பலன் (फल) என்ற ஐந்து வகைகளில் அலசி ஆராய்ந்து, அவைகளின் குண விசேஷங்களைப் பற்றி அறிந்துகொள்ளலாம். ஆனால் அனைத்தையும் கடந்து உள்ள பொருளாய் தனித்தே நிற்கும் பிரம்மத்தைத் தவிர்த்து, அந்த பிரம்மம் இருப்பதால் மட்டுமே அறியப்படுகிற மாயை உள்ளிட்ட மற்ற பொருட்கள் யாவுமே அந்த பிரம்மத்தைப் போலத் தன்னிச்சையாக இருப்பதாகத் தவறாக அறியப்பட்டாலும், அவை அனைத்தையும் மேலே கூறியபடி வகைப்படுத்தி நன்கு அறிந்துகொள்ள முடியும்.

5. அவைகள் அனைத்திலும், மாயை என்ற ஒன்றுக்கு மட்டுமே பிரம்மத்தைத் தவிர வேறு முன்னோடிக் காரணம் எதுவும் கிடையாது என்பதால் அது பிரம்மத்தால் ஒளிர்விக்கப்பட்டு, எப்போது தொடங்கியது என்பதும் தெரியாமல், எப்போதும் தானாகவே ஒளி வீசிக்கொண்டு இருப்பது போலவும் காணப்படுகிறது. ஜீவராசிகளின் பிறப்பிற்கு முன்பாக அவை தோன்றுவதற்கான காரண-காரியங்கள் எதுவும் இல்லாதபோதும், மாயை இருப்பதாகக் காணப்படுவதால் அது தானே தானாக இருந்தாகவேண்டும்.

6. சீடன்: இவ்வாறு தாங்கள் கூறுவதற்கு ஏதாவது அத்தாட்சி இருக்கிறதா?

குரு : இருக்கிறது, அவை வசிஷ்டரின் கூற்றுக்களாக இருக்கின்றன. எவ்வாறு நீரில் குமிழிகள் தானாகவே உற்பத்தியாகின்றனவோ அவ்வாறே அனைத்து சக்திகளையும் உள்ளடக்கிய பிரம்மத்தில் நாமங்களும், உருவங்களும் தோன்றுவதற்கான சக்தியும் இயற்கையாகவே வெளிப்படுகிறது என்று வசிஷ்டர் கூறுகிறார்.

7-9. *சீடன்*: மாயை இருப்பதற்கு ஒரு காரணம் இல்லாமல் இருக்கமுடியாது. எவ்வாறு களிமண் ஒரு குயவனின் உதவி இல்லாமல் ஒரு பானையாக உருவெடுக்க முடியாதோ, அதேபோல பிரம்மத்தில் உறைந்துள்ள சக்தியானது இறைவனின் விருப்பம் இல்லாது வெளிப்பட முடியாது.

குரு : ஊழிக்காலத்தில் இருப்பது பிரம்மம் மட்டுமே; அப்போது இறைவனும் கிடையாது. அதனால் அவரது விருப்பம் என்று சொல்வதற்கும் அங்கு ஏதும் இல்லை. முன்பு தோன்றியவைகள் அனைத்துமே ஊழிக்காலத்தில் மறைந்து இருக்கும் என்றால் முன்பு இருந்த ஜீவர்கள், பிரபஞ்சம், மற்றும் இறைவனும் அவ்வாறு மறைந்தே இருக்கவேண்டும். மறைந்துள்ள இறைவனால் எவ்வாறு ஒரு விருப்பத்தை வெளிப்படுத்தமுடியும்? அப்போது நடப்பது இப்படியாகத்தான் இருக்கமுடியும். தூக்கத்தில் உள்ள சக்தியால் ஒருவனுக்குக் கனவுகள் மலர்வது போல, மாயையில் உறைந்து நிற்கும் சக்தியே இறைவனாகவும், அவரது விருப்பமாகவும், பிரபஞ்சம் மற்றும் அதில் உள்ள ஜீவர்களாகவும் பல விதங்களில் வெளிப்படுகிறது. அதாவது இறைவனும் மாயையால் உருவாவதால் இறைவனே அவரது தோற்றத்திற்குக் காரணமாக அமைய முடியாது. அதனால் மாயைக்கு முன்னோடிக் காரணம் என்று எதுவும் கிடையாது. ஊழிக்காலத்தில் விருப்புகள் எதுவும் இல்லாத, மாறுதல்கள் எதுவும் காணாத சுத்த பரப்பிரம்மம் ஒன்றே தங்கி நிற்கிறது. ஊழியின் முடிவில் நானாவிதத் தோற்றங்கள் தலைப்படும் சமயம் பரப்பிரம்மத்தில் மறைந்து நிற்கும் மாயையே மனமாக வெளிப்படுகிறது. அந்த மனத்தின் விருத்தியால் ஒரு மந்திரவாதியின் மாயக்காட்சிகள் போல இறைவன், உலகங்கள், ஜீவர்கள் என்ற பலவிதத் தோற்றங்கள் காணப்படுகின்றன. அதாவது மாயை உள்ளுக்குள் உறைந்து நிற்கும்போது அது ஊழிக்காலம் எனவும், அதுவே வெளிப்படும்போது உலகத் தோற்றங்கள் எனவும் ஆகிறது. இவ்வாறு தானாகவே மாயை மறைவதும், வெளிப்படுவதாகவுமாக மாறி மாறி நிகழ்வதால் அதற்கு ஒரு தொடக்கம் இல்லை என்றாகிறது. அதனால் அதற்கு ஒரு முன்னோடிக் காரணமும் கிடையாது என்றே கூறப்படுகிறது.

10-11. *சீடன்*: மாயையின் இயல்புதான் என்ன?

குரு : அது விளக்க முடியாத ஒன்று. அவ்வாறு ஒன்று இருப்பதை பின்னர் மறுத்து நீக்குவதால், அது உண்மையில் இல்லாத ஒன்றாகும். ஆனாலும் அதை அனுபவத்தில் உணர்வதால் அதை இல்லை என்றும் மறுப்பதற்கில்லை. இருக்கிறது, இல்லை என்ற இரு எதிர்மறைகளின் கலவை அது என்றும் அதைப்பற்றிச் சொல்வதற்கில்லை. அதனால் ஆன்றோர்கள் அதை “அனிர்வசனீயம்” என்று கூறி அதன் விளக்க முடியாத தன்மையைப் பற்றிக் குறிப்பிடுவார்கள்.

சீடன்: அப்படியானால் எது உள்ளது, மற்றும் எது இல்லாதது?

குரு : மாயைக்கு அடித்தளமாக இருக்கும் சுத்த சைதன்யமான பரப்பிரம்மம் ஒன்றே உள்ளது. காணப்படுவது போலத் தோன்றும் உலகமும், அதில் பல்வேறு நாமங்களும் உருவங்களும் கொண்டு விளங்கும் அனைத்தும் இல்லாதவைகளே.

சீடன்: அவ்வாறானால் மாயையைப் பற்றி எப்படித்தான் விளக்குவது?

குரு : மேலே கூறப்பட்டுள்ள இரண்டு நிலைகளிலும் இல்லாதது மாயை. உண்மையில் இருக்கும் அடித்தளமான பிரம்மத்தில் இருந்தும் அது வேறானது; இருப்பது போலக் காணப்படும் மாயத் தோற்றங்களில் இருந்தும் அது வேறானது.

சீடன்: இதை விளக்கமாகச் சொல்லுங்கள்.

12-17. எரியும் தீயை ஓர் அடித்தளமாக எடுத்துக்கொள். அதிலிருந்து தீப்பொறிகள் பட்டுத் தெறிக்கின்றன. அவை தீயின் இன்னுமொரு வடிவம் போலத்தான். தீப்பொறிகள் தீயில் காணப்படுவதில்லை என்றாலும் அதில் இருந்து வந்தவைதான். அதைக் கவனிக்கும்போது பொறிகளை உருவாக்கும் சக்தி தீக்கு இருப்பதை நாம் உணர்கிறோம்.

களிமண் மற்றுமொரு அடித்தளம்; அதைக்கொண்டு ஒரு வெற்றிடத்தைச் சுற்றி வளைத்து சுவர் போல ஒன்றை எழுப்பி அதற்கு ஒரு கழுத்தும், திறந்திருக்கும் வாய் ஒன்றையும் உருவாக்கி அதைப் பானை என்கிறோம். அதைக் கவனித்தால் களிமண்ணிற்கோ, பானைக்கோ இல்லாத வேறொரு சக்தி அங்கு இருப்பதை உணர்கிறோம்.

நீர் இன்னுமொரு அடித்தளம்; அதில் குமிழிகள் உற்பத்தியாவதைக் காண்கிறோம். அவை இரண்டிற்கும் இல்லாத வேறொரு சக்தி அங்கு விளங்குவதை அதில் இருந்தும் நாம் உணர்கிறோம்.

அடித்தளமான பாம்பின் முட்டையில் இருந்து பாம்புக் குட்டி வருவதைப் பார்த்தால் முட்டைக்கும், குட்டிக்கும் இல்லாத ஒரு சக்தி அங்கு நிலவுவதை உணர்கிறோம்.

அடித்தளமாக இருக்கும் ஒரு விதையில் இருந்துதான் செடி ஒன்று முளைப்பதைப் பார்க்கிறோம். அங்கும் அவை இரண்டிற்கும் இல்லாத ஒரு சக்தியை நாம் பார்க்கிறோம்.

ஆழ்ந்த உறக்கத்தில் எந்தச் சலனமும் இல்லாது இருக்கும் ஒரு ஜீவன் என்ற அடித்தளத்தில் இருந்து அவனுக்குச் சில கனவுகள் வருகின்றன. அவைகள் அவ்வாறு வருவதற்கான சக்தி அந்த ஜீவனிடமும் இல்லை, கனவுகளிடமும் இல்லை என்பதை அவன் உறக்கத்தில் இருந்து விடுபட்டு விழிப்பு நிலைக்கு வந்தபின் உணர்கிறான்.

அவைகளைப் போலவே பரப்பிரம்மத்தில் உறைந்து மறைந்திருக்கும் சக்தி ஒன்றே உலகம் என்றதொரு மாயத்தை விரிக்கிறது. அதாவது எங்கும், எப்போதும் இருக்கும் பிரம்மம்தான் எல்லாவற்றிற்கும் ஓர் அடித்தளம். அதன்மேல் உருவாகிக் காணப்படுவதுதான் உலகம் என்கிற மாயக்காட்சி. ஆனாலும் அதற்கான சக்தி பிரம்மத்திலும் இல்லை, உலகத்திலும் இல்லை. அதனால் அவை இரண்டையும் கடந்து அது இருக்க வேண்டும். அது இப்படிப்பட்டதென்று வரையறுக்க முடியாது என்றாலும் அது இருக்கிறது. இவ்வாறு அது நமது அறிவுக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது. அதனாலேயே அந்த மாயையின் இயல்பு விளக்கப்பட முடியாததாக இருக்கிறது.

18-20. சீடன்: சரி, அதன் பாதிப்புதான் என்ன?

குரு : தனது மறைக்கும் மற்றும் வெளிப்படுத்தும் தன்மைகளால், அது உலகம், ஜீவன் மற்றும் இறைவனாகிய மாயக் காட்சிகளை இருக்கும் ஒரே வஸ்துவான பிரம்மத்தின் மேல் ஏற்றிக் காட்டும் குணத்தைக் கொண்டிருக்கிறது.

சீடன்: அது எப்படி?

குரு : உள்ளுக்குள் உறைந்து நிற்கும் மாயையின் சக்தி மனமாக வெளிப்படும்போது, அதுவரை தன்னுள் உறங்கிய குணங்கள் எல்லாவற்றையும் விதையில் இருந்து வெளிப்படும் செடியின் கிளைகளைப் படபடவென்று படர்ந்து பெரிதாக்கி ஒரு மரம் போல வளர்த்து, உலகம் எனும் மாயையைத் தாங்கி நிற்கிறது. மனம் தன்னுள் அடங்கி இருந்த குணங்களோடு ஓர் ஆட்டம் ஆடி, பலப்பல எண்ணங்களாக வளர்த்து, உலகத்தை உருவாக்கிக் காட்டுவதால் அதுவும் கனவில் காணப்படும் ஒரு மாயக்காட்சி போலத்தான் விளங்குகிறது. இரவில் காண்பது கனவு என்றால் இப்போது நாம் காணும் உலகம், ஜீவன் மற்றும் இறைவனாகிய மாயக்காட்சிகள் எல்லாமே ஒரு பகல் கனவில் வருவது போலத்தான் ஆகும்.

சீடன்: தயவுசெய்து அவைகளின் மாயத் தன்மையை விளக்கிச் சொல்லுங்கள்.

குரு : உலகம் என்பது நாம் காணும் ஒரு பொருள் ஆகும்; நமது மனத்தின் அசைவுகளால்தான் நாம் அதைப் பார்க்கிறோம். அந்த உலகில் ஜீவர்களும், இறைவனும் அடங்குவார்கள். உலகம் எவ்வளவுக்கு எவ்வளவு உண்மையோ அதே அளவிற்குத்தான் அதில் இருப்பவர்களது உண்மைத் தன்மையும் இருக்கும். பிரபஞ்சம் முழுவதுமே ஒரு வண்ண

ஓவியமாக சுவரில் வரையப்பட்டிருக்கிறது என்று வைத்துக்கொண்டால் ஜீவர்களும், இறைவனும் அந்த ஓவியத்தில் அங்கங்களாகத் தெரிவார்கள். அப்போது அவர்களது உண்மைத் தன்மை அந்த ஓவியத்தின் உண்மைத் தன்மை அளவே இருக்க முடியும்.

21-24. பிரபஞ்சமே மனத்தின் உருவாக்கம் என்பதால் ஜீவர்களும், இறைவனுமே அந்த உருவாக்கத்தின் ஒரு பகுதியாகத்தான் இருக்க முடியும். அதனால் அவர்களும் ஒரு மனத்தின் உருவாக்கங்களே தவிர வேறெதுவுமாக இருக்க முடியாது. ஜீவன்களும், இறைவனும் மாயையினால் உதித்த தோற்றங்கள் என்றே வேத மந்திரங்களும் குறிப்பிடுகின்றன. மறைந்துள்ள சக்தி மாயமாக நான், நீ, அவன், அவள், அது, எனது மகன், என் சொத்துக்கள் என்று இப்படியாக நானாவிதமாய் மனத்தின் மூலமாக வெளிப்படுகின்றன என்று வசிஷ்டரும் தனது ஸ்மிருதியில் கூறுகிறார்.

25-27. சீடன்: உலகம், ஜீவன் மற்றும் இறைவன் என்று ஸ்மிருதியில் எங்கு கூறப்பட்டிருக்கிறது?

குரு : ஸ்மிருதியில் வரும் "ஸோஹமிதம் என்ற சொல்லில் 'ஸோ' (அவன்) என்பதன் மூலம் கண்ணுக்குத் தெரியாத இறைவனையும், 'அஹம்' (நான்) என்றதன் மூலம் அகந்தையின் வடிவாக வளையவரும் ஜீவனையும், 'இதம்' (இது) மூலம் காணப்படும் பொருட்களைக் கொண்ட உலகத்தையும் குறித்துச் சொல்லப்பட்டுள்ளது. வேதங்களில் சொல்லப்பட்டதாலும், நமது அறிவாற்றல் மற்றும் அனுபவம் மூலமும் இறைவன், ஜீவன் மற்றும் உலகம் ஆகிய மூன்றுமே மனத்தின் வெளிப்பாடுகளே என்று நன்கு புலப்படுகிறது.

28-29. சீடன்: அறிவார்ந்த விளக்கங்களும், அனுபவங்களும் மேலே விவரிக்கப்பட்டுள்ளதை எப்படி ஆதரிக்கின்றன?

குரு : நமது விழிப்பு, மற்றும் கனவு நிலைகளில் செயல்பட்டுக்கொண்டிருக்கும் மனம் எழுந்ததும், அதுவரை மறைந்திருந்த குணங்களெல்லாம் மீண்டும் உயிர்பெற்று எழுவதால் உலகம், ஜீவன், இறைவன் என்றனைத்தும் செயல்படத் துவங்குகின்றன. அதேபோல ஆழ்நிலை உறக்கம், மற்றும் நினைவு தப்பும் மயக்க நிலைகளில் அவை மறுபடியும் முன்போலவே மறைந்து போகின்றன. இது எவருக்கும் நேரும் சாதாரண அனுபவங்களே. அவ்வாறு மறைந்து, மீண்டும் துளிர்க்கும் குணங்களை ஒருவன் ஆன்மிக அறிவால் ஆராய்ந்து ஒட்டுமொத்தமாக வேரறுக்கும்போது உலகமோ, ஜீவனோ, இறைவனோ எதுவுமே எப்போதும் தோன்றாது ஒழியும். இவ்வாறாக உலகம், ஜீவன், இறைவன் என்றதொரு மாயையைக் கடந்து அதீத பரப்பிரம்ம நிலையில் எப்போதுமே நிலைத்து நிற்கும் அரும்

பெரும் ஞானிகளுக்கு ஏற்படும் அசாதாரண அனுபவங்களும் மேலே கூறப்பட்டுள்ளதை பறைசாற்றுகின்றன. அதனால், காணப்படும் எல்லாம் மனத்தின் மாய்மாலங்களே என்று கூறப்படுகின்றன. அவ்வாறு நிகழ்வதே மாயையின் பாதிப்புகள் ஆகும்.

30-32. சீடன்: மாயையின் லீலைகளுக்கு ஓர் எல்லை இல்லையா?

குரு : வேதங்களின் சாரங்களான மகாவாக்கியங்களை நன்கு அலசி, ஆராய்ந்து அவற்றின் பொருளை தீர்க்கமாக உணர்வதால் பெறப்படும் அறிவே அதன் எல்லை. ஏனென்றால் மாயை என்பது அறியாமையின் விளைவே; அறியாமை என்பது ஆன்ம விசாரம் செய்யாததால் தொடரும் நிலை. ஆன்ம விசாரம் செய்யச்செய்ய உண்மையான அறிவு வளர்வதால் அறியாமை தானே அகலும்.

இப்போது கூறுவதை கவனித்துக் கேள். நமது முந்தைய செயல்களின் விளைவாக வருவதே நமது உடல் உபாதைகள். நமது தவறான உணவுப் பழக்கத்தால் வியாதிகள் மறையாது நீடிப்பதோடு, அதே பழக்கங்கள் தொடரத் தொடர வியாதிகளின் பாதிப்பும் அதிகமாகிறது. அல்லது, இந்த உதாரணத்தைக் கவனி. தீர விசாரியாது இருப்பதால், கயிறு என்பதைப் பற்றிய அறியாமையே காணப்படுவது பாம்பு என்ற தோற்றத்தை உண்டாக்கி, அதனால் விளையக்கூடிய பலவித மயக்கங்களை வரவழைக்கின்றன. இந்த உதாரணங்கள் காட்டுவதுபோலவே அனாதியாகவும், இயற்கையாகவும் மாயை இருப்பது எவருக்குமே நன்கு தெரிந்தாலும், ஒருவன் தனது உண்மை நிலையைப் பற்றி விசாரம் செய்யாமல் இருப்பதால், அந்த மாயை ஓர் உலகை உருவாக்குவதோடு மட்டுமல்லாமல், அதைப் பூதாகாரமாக்கியும் அவனுக்குக் காட்டுகிறது.

33-35. ஆன்ம விசாரம் தொடங்கியதுமே, அதைச் செய்யாதவரை பருத்துக் கொழுத்து வளர்ந்திருந்த மாயை, அதற்கான ஊட்டச் சக்தி குறைந்து போனதால், படிப்படியாக வாடி, வதங்கி, சுருங்கிப் போகவே, அதன் லீலைகளான உலகம் முதலான தோற்றங்களும் அதனுடன் மறையத் தொடங்குகின்றன. அது இங்கே எப்படி இருக்க முடியும் என்றதான விசாரணை இல்லாமல் அறியாமை மிகுந்து இருந்ததால், வளைந்து நெளிந்து இருக்கும் கயிற்றை ஒரு பாம்பாகத் தவறாகக் கருதுவது, அதைப் பற்றிய தீவிர சிந்தனை வரும்போது எவ்வாறு உடனே ஒதுக்கித் தள்ளப்படுகிறதோ அதேபோல, தனது உண்மை நிலை பற்றிய கேள்வி கேட்டு அடையப்பெறும் ஆன்ம ஞானம் வளர வளர, அஞ்ஞானத்தால் உருவாகி நிலைத்து நிற்கும் மாயையும் மறைந்து ஒழியும். எவ்வாறு தீவிர சிந்தனைக்கு முன்பாக கயிறு பாம்பாகத் தெரியும் காட்சியும், அந்த மதி மயக்கமும் வலுப்பெற்று இருந்தும், விசாரணைக்குப் பின்னர் காண்பது கயிறே என்கிற தெளிவும் பிறக்கிறதோ, அவ்வாறே மாயையும் அதன்

தாக்கங்களான உலகம் முதலானவைகளும் ஆன்ம விசாரத்திற்கு முன்பு இருந்தாலும், அது தொடங்கிய பின்பு எப்போதும் உண்மையில் இருப்பது பிரம்மம் ஒன்றே என்கிற பேரறிவு மலர்கிறது.

36-38. சீடன்: இருக்கும் ஒரே பொருள் எவ்வாறு இரண்டு வழிகளில் தோற்றம் அளிக்க முடியும்?

குரு : இரண்டற்ற ஒன்றாகவும், தூயதாகவும் விளங்கும் பரப்பிரம்மம் ஆன்ம விசாரத்திற்கு முன்பு உலகம் முதலானவைகளாகக் காட்சி அளித்தாலும் விசாரத்தின் விளைவாக தனது உண்மை சொரூபத்தையே இறுதியில் காட்டுகிறது.

எவ்வாறு தீர யோசிக்கும் முன்பாக களிமண் பானையாகத் தெரிந்தாலும், பின்னர் அது களிமண்ணாகவே உணரப்படுகிறதோ, அல்லது நன்கு சிந்திக்கும் முன்பு தங்கம் ஆபரணமாகத் தெரிந்தாலும், பின்னர் அது தங்கமாகவே கருதப்படுகிறதோ, அதேபோலத்தான் பிரம்மத்தில் எழும் மாறுபாடுகளும் காணப்படுகிறது. தீர்க்கமான ஆன்ம விசாரத்திற்குப் பிறகு பிரம்மம் இரண்டற்ற ஒன்றாகவும், எதனாலும் களங்கமடையாது, முன்போ பின்போ எப்போதுமே மாறுபாடு காணாத ஒன்றாவும் உணரப்படுகிறது. அந்தச் சுத்தப் பிரம்மத்தில் மாயையோ, அதன் சாயல்களான உலகமோ எதுவுமே காணப்படுவதில்லை. அதை உணர்வதே அறிய வேண்டியவற்றில் எல்லாம் மகத்தான அறிவான பேரறிவாகும்; அது அறியாமையின் முடிவும் ஆகும். அதுவே மாயையின் முடிவான எல்லையும் ஆகும்.

39. சீடன்: அப்படியானால் மாயை இருப்பதன் பலன்தான் என்ன?

குரு : எந்தப் பலனையுமே தராது இறுதியில் ஒன்றும் இல்லாது போகும் மாயையே மாயையின் பலன். முயலின் கொம்புகள் என்பது ஒரு சொல்லாடலே தவிர அது போன்ற பொருள் ஏதும் உண்மையில் இல்லை. அதைப் போலவே மாயை என்பதும் வெறும் சொல்லே தவிர அவ்வாறு ஏதும் இல்லை. முற்றும் உணர்ந்த முனிவர்கள் கண்டறிந்த உண்மை அதுவே.

40-43. சீடன்: அவ்வாறானால் அனைவரும் இந்த உண்மையை ஒத்துக்கொள்ள வேண்டியதுதானே?

குரு : அதை அறியாத மனிதர்கள்தான் அது இருப்பதாக நம்புகின்றனர். அதைப் பற்றிச் சற்று சிந்திப்பவர்கள் அதை விளக்க இயலாதது என்றே குறிப்பிடுவார்கள். முற்றும் உணர்ந்த முனிவர்களோ அதை முயலின் கொம்புகள் என்றே விளக்குவார்கள். இவ்வாறாக மக்கள்

அதை இந்த மூன்று வழிகளில் விவரிப்பார்கள். அவரவர்களும் அதை இப்படியாகத் தங்கள் பார்வைக்கு ஏற்றவாறு கூறுவார்கள்.

சீடன்: அறியாமையில் மிதக்கும் மனிதர்கள் அது உண்மையிலேயே இருப்பதாக ஏன் கருதுகின்றனர்?

குரு : குழந்தை ஒன்றிடம் பேய் உண்மையிலேயே இருப்பதாக ஒரு பொய் சொன்னால், குழந்தை அதை அப்படியே நம்புகிறது. அதைப் போலவே ஏதும் அறியாத பாமர மக்களும் மாயை என்ற விஷயம் ஒன்று இருப்பதை நம்புகின்றனர். வேத சாஸ்திரங்கள் காட்டும் வழிப்படி சென்று உலகின் நிலையில்லாத் தன்மையைப் பற்றிச் சிந்தித்து, உண்மையில் இருக்கும் பிரம்மத்தின் தன்மையையும் பற்றி விசாரிக்கும் சாதகர்கள் மாயை என்று சொல்லப்படுவது இவ்விரண்டிலும் சேராதபடி இருப்பதாலும், அதன் தன்மை புரிந்துகொள்ள முடியாதபடி இருப்பதாலும் அதை “அனிர்வசனீயம்” அல்லது விளக்க இயலாதது என்பார்கள். ஆனால் ஆன்ம விசாரத்தில் நல்ல முன்னேற்றம் கண்டு, இருக்கும் உண்மையை நன்கு தெளிந்து, தங்கள் அனுபவத்தில் அதை உணர்ந்த முனிவர்களோ “மகளால் சிதையில் இடப்பட்ட இறந்த ஒரு தாயார் எவ்வாறு கருகிச் சாம்பல் ஆகிறாளோ, அதேபோல பேரறிவால் பொசுக்கப்பட்ட மாயையும் எப்போதுமே இல்லாத பொருளாக ஆகிறது” என்றே விளக்குவார்கள்.

44-46. சீடன்: மகளால் சிதையில் இடப்பட்ட இறந்த ஒரு தாயாரின் சாம்பலுடன் மாயை எவ்வாறு ஒப்பிடப்பட முடியும்?

குரு : ஆன்ம விசாரம் தீவிரம் அடைய அடைய, நெருப்பில் பூத்த நீறு போல மாயையின் சாயம் வெளுக்க வெளுக்க அது இருந்த இடத்தில் அறிவு வலுக்கத் தொடங்கும். இவ்வாறாக மாயையே அறிவுக்குப் பிறப்பிடம் ஆவதால், அறிவே மாயையின் மகள் என்று சித்தரிக்கப்படுகிறது. விசாரம் செய்யப்படாத நிலையில் வலுத்துக் கொழுத்து இருந்த மாயை, விசாரத்தின் பயணத்தில் வலுவை இழப்பதால் தனது இறுதி நாட்களைத் தேடிச் செல்கிறது. இவ்வாறாக அறிவை வளர்த்து மாயை தன் அழிவைத் தேடிக்கொள்கிறது. அதாவது மகளான அறிவு தன் தாயான மாயைக்குத் தீ மூட்டி அவளது சாம்பலுக்கு வழி வகுக்கிறாள்.

சீடன்: எவ்வாறு பெற்றோரின் வழி வந்தவர்கள் தங்களது பெற்றோரையே கொல்வதற்கு முடியும்?

குரு : ஒரு மூங்கில் காட்டில் உள்ள மரங்கள் பலத்த காற்றில் அசைவதால் ஒன்றுக்கொன்று உரசி அதனால் எழும்பும் தீயால் தங்களைத் தோற்றுவித்த மரங்களையே அழித்து விடுகின்றன. அதைப் போலவே மாயையில் இருந்து உதித்த அறிவு மாயையையே அழித்துச் சாம்பலாக்கி விடுகிறது. முயல் கொம்புகள் என்பது போல மாயை வெறும் பெயரோடு

நின்றுவிடுகிறது. அதனாலேயே முற்றும் உணர்ந்த முனிவர்கள் மாயை என்று உண்மையில் எதுவுமே கிடையாது என்கின்றனர். அதன் பெயர் மாயம் என்ற சொல்லில் இருந்து உருவாகி வந்ததால், அதன் பெயரே அதனுடைய இல்லாத்தன்மையைக் குறிக்கிறது. அதற்கு மாயை என்பதைத் தவிர “அவித்யை” என்றும் இன்னுமொரு பெயர் உண்டு. ‘அறியாமை’ அல்லது ‘இல்லாத ஒன்று’ என்பதுதான் அதன் அர்த்தங்கள். மாயம் என்பதும் (या मा सा माया) என்ற விவரத்துடன் அதையே குறித்து, ஓர் எதிர்மறைப் பொருளையே தருகிறது. அதன் பெயரின் தன்மையைப் போலவே, எந்தப் பலனையும் தராது இறுதியில் இல்லாது போவதே மாயையின் பலன் ஆகும்.

47-49. சீடன்: மாயை இறுதியில் பேரறிவுக்கு வழி வகுப்பதால் ஒன்றும் தராது போகிறது என்று எப்படிச் சொல்ல முடியும்?

குரு : மாயை தனது உரு மாற்றத்தால் அறிவாக ஆகிறது என்றால் அவ்வாறு அடையப்பட்ட அறிவு உண்மை என்றால்தானே மாயையும் உண்மை என்றாகும்? அந்த அறிவே உண்மையல்ல என்கிற போது மாயையும் உண்மையல்ல என்றே ஆகிறது.

சீடன்: அறிவு உண்மையல்ல என்று எப்படிக் கூறமுடியும்?

குரு : உரசிக்கொண்டிருந்த மரங்களால் உருவாகிய தீ மரங்களை அழித்துவிட்டுத் தானும் இறுதியில் மறைகிறது. நீரில் கரைத்த தோத்தாம்பொடி நீரில் இருந்த மாசுக்களை அகற்றிவிட்டு அந்த மாசுக்களுடன் தானும் நீரின் அடியில் தேங்கி நிற்கிறது. அதைப்போலவே அறிவும் அறியாமையை அகற்றிவிட்டு தானும் அதனுடன் மறைகிறது. அவ்வாறு அது மறைவதால் மாயையின் பலனும் உண்மையில் இல்லாத ஒன்றாக ஆகிறது.

50-52. சீடன்: இறுதியில் அறிவும் மறைகிறது என்றால் அறியாமையால் விளைந்துள்ள சம்சாரத்தை எவ்வாறு நீக்குவது?

குரு : அறியாமையால் காணப்படும் சம்சாரமும் அறிவைப் போலவே உண்மையில் இல்லாத ஒரு பொருளாகும். மாயமான ஒன்றை நீக்குவதற்கு மாயமான இன்னொன்றே உபாயமாகும்.

சீடன்: அதை எப்படிச் செய்வது?

53. குரு : கனவில் வரும் ஒருவனின் பசியைப் போக்குவதற்கு ஒரு கனவு உணவே போதும். உணவும் பசியைப் போலவே உண்மையில் இல்லை என்றாலும், அங்கு எழுந்த தேவை பூர்த்தி ஆகிவிடுகிறது அல்லவா? அதைப் போலவே அறிவும் உண்மையில் இல்லை என்றாலும் அதற்கு அங்கு ஒரு தேவை இருக்கிறது. சம்சாரத்தில் கட்டுப்பட்டு இருப்பது என்பதும், அதில் இருந்து விடுதலை பெறுவது என்பதும் அறியாமையால் விளைந்த உண்மைக்குப் புறம்பான

எண்ணங்களே. கயிறு பாம்பாகத் தோன்றுவதும் பொய்யே, அந்தத் தோற்றம் மறைகிறது என்பதும் பொய்யே. அதைப் போலவே முன்பு அறியாமையால் கட்டுப்பட்டு இருந்தது என்பதும், பின்பு அறிவு வந்ததும் விடுதலை ஆகிறது என்பதும் பிரம்மத்தைப் பொருத்தவரை ஒரு பொய்யே.

54-55. முடிவாகச் சொல்லப்படுவது என்னவென்றால் அதைத் தவிர வேறு உண்டு என்பதான பேதங்கள் எதுவும் இல்லாது எப்போதும் ஒன்றாகவே இருக்கும் பிரம்மமே, இருப்பன எல்லாவற்றுள்ளும் இருக்கும் ஒரே உண்மை. மற்ற அனைத்துமே பொய்; அவை எதுவும் எப்போதும் இல்லாதவைகளே. ஸ்ருதிகளின் கூற்றுப்படி, “எதுவும் ஆக்கப்படுவதும் இல்லை; அழிக்கப்படுவதும் இல்லை. பந்தங்கள் என்று ஏதும் இல்லை; பந்தத்தில் இருந்து விடுதலை என்றும் ஏதும் இல்லை. எவரும் கட்டுப்பட்டும் இருக்கவில்லை; அதில் இருந்து விடுபட விரும்புகிறார்கள் என்பதும் இல்லை. அதனால் சாதனை செய்பவரும் இல்லை; சாதிக்க விரும்புவாரும் இல்லை; சாதனை புரிந்ததால் விடுதலை பெற்றவர் என்பதுவும் இல்லை. இதுவே பரமார்த்திக உண்மை”. உண்மை ஒன்று இருக்க வேறாகக் காணப்படும் காட்சியை நீக்குவது என்பது மாயையையும், அதன் பாதிப்புகளையும் கடந்து உள்ளத்தே இருக்கும் உண்மையை உணர்வது என்பதே. உடலில் உயிர் இருக்கும்போதே அதை உணர்வதை ஜீவன் முக்தி அல்லது விடுதலை எனப்படுகிறது.

56. இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளதைக் கூர்ந்து கவனித்துப் புரிந்துகொள்ளும் சீடனே அறியாமையால் வேறாகத் தெரியும் காட்சியை நீக்குவதற்கு உபாயமான ஆன்ம விசாரத்தைப் பற்றி ஆர்வத்துடன் தெரிந்துகொள்ளும் முமுக்ஷுவாக இருக்க முடியும். அத்தகைய விசாரத்திற்குத் தகுதி பெற்றவன் ஒருவனுக்கு இருக்க வேண்டிய நான்கு குணாம்சங்கள் அடுத்து வரும் பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளன. விசாரம் செய்ய வேண்டிய முறைகள் அந்தப் பகுதியில் விளக்கமாக எடுத்துரைக்கப்படும்.

ஒரு நல்ல சாதகன் என்பவன், இந்த இரண்டு அத்தியாயங்களிலும் கூறப்பட்டுள்ளதை கவனமாகப் படித்து அறிந்துகொண்ட பின்னரே, மேற்கொண்டு இந்த நூலைப் படிக்கவேண்டும்.

# 3. சாதனை: அபவாதக் காட்சிகளை நீக்குவதற்கான வழிகள்

1. "சத்-சித்-ஆனந்தமாக விளங்கும் அந்தப் பரப்பிரம்மத்திற்கு எவ்வாறு சம்சார பந்தம் இருக்க முடியும்" என்ற கேள்விக்கு ஞானிகளின் பதில் இதுதான்: "வெளிப்படாமல் உறைந்து நிற்கும் பிரம்மத்தின் சக்தியே மாயை என்றால், அதுவே வெளிப்பட்டு தலைப்படும்போது அதையே மனம் என்று கூறுகிறோம். மாயையின் அந்த நிலையான மனம் புரிந்துகொள்ள முடியாதபடியும், ஒருவனுடைய சம்சார அனுபவங்களின் வித்தாகவும் விளங்குகிறது".
சீடன்: மனம் விவரிக்கப்பட முடியாத பொருள் என்று யார் கூறியிருக்கிறார்கள்?

2-3. குரு : இராமருக்கு வசிஷ்டர் அவ்வாறு சொல்லியிருக்கிறார். இரண்டற்று ஒன்றாக விளங்கும் பரப்பிரம்மத்தில், உண்மையில் இல்லாத உணவற்ற தன்மையில் இருந்தும், உண்மையாய் இருக்கும் அறிவிற்கும் வேறான பாவம் (நோக்கம்) எனப்படுவது சகல சீவராசிகளையும் தோற்றுவிக்கும் நிலையில் இருக்கிறது. அப்போது அதுவரை உறைந்து மறைந்து இருந்தவைகளை அது பலப்பல வடிவங்களிலும், நாமங்களிலும் வெளிப்படுத்தி உணர்வு கொண்டவைகளாகவும், உணர்வற்றவைகளாகவும், மேலும் அவைகளைக் கலந்து வெவ்வேறு அளவில் உணர்கின்ற பொருட்களாகவும் உருவாக்குகிறது. ஆனாலும் தன்னைப் பொருத்தவரை உணர்வு உள்ளதா இல்லையா என்று அறிய முடியாதபடி மறைத்துக்கொண்டு, எங்கும் எதிலும் நிலையாக நில்லாத மனமாகத் தன்னைக் காட்டிக்கொள்கிறது. அதனாலேயே அது இன்ன தன்மையது என்று விவரிக்க முடியாத ஒன்றாக இருக்கிறது.

4. தான் எந்த மாறுபாடுகளையும் அடையாது போனாலும், மனத்தோடு தொடர்புடையதாக பிரம்மம் தவறாகக் காணப்படும்போது அதுவும் மாறுதல்களை அடைவதாகவே தெரிகிறது.
சீடன்: அது எப்படி?
குரு : மது பானங்கள் அருந்தியதால் மயக்கத்தில் இருக்கும் ஓர் அந்தணன் எவ்வாறு தன் வழி தவறி வித்தியாசமாக நடந்துகொள்வானோ அது போல, மனத்துடன் தொடர்பு கொண்டுள்ளதாகக் காணப்படும் பிரம்மம், அதனது தன்மையில் இருந்து மாறாவிட்டாலும், சம்சாரத்தில் உழலும் ஜீவனாக மாற்றம் அடைந்துள்ளதாகக் காணப்படுகிறது. அதனால் பிரம்மத்தின் சம்சார பந்தம் என்பது மனத்தின் கட்டுகளே அன்றி வேறெதுவும் இல்லை. இவ்வாறாக வேதங்கள் கூறுகின்றன.

5. மனமே சம்சாரம் ஆகிறது என்பதால் அதை நாம் தீவிரமாக விசாரித்து அறியவேண்டும். ஒருவனைச் சுற்றியுள்ள வஸ்துக்களின் தன்மைக்கு ஏற்ப அவனது மனமும் தன்னை மாற்றிக்கொண்டே போவதால், அவனது தன்மையும் அதே மாற்றங்களை அடைவது போலக் காணப்படுகிறது. இந்த ரகசியமான விஷயம் மைத்ரியினீய உபநிஷதத்தில் கூறப்பட்டுள்ளது. அதன் உண்மையை நமது சுக, துக்க அனுபவங்களின் மூலம் நாமும் கண்கூடாகக் காண்கிறோம்.

6-7. சீடன்: அது எவ்வாறு நமது அனுபவங்களின் மூலம் நிரூபணம் ஆகிறது?
குரு : நமது ஆழ்ந்த உறக்கத்தில் மனம் அடங்கி இருப்பதால், பிரம்மத்தில் எந்த மாறுதல்களும் காண்பதில்லை; அப்போது சம்சாரமும் தெரிவதில்லை. ஆனால் நமது கனவு, மற்றும் நனவு நிலைகளில் மனம் வெளிப்படுகிறது; அப்போது பிரம்மம் மாறுதல் காண்பது போலவும், அதனால் சம்சார பந்தங்களில் உழல்வது போலவும் தெரிகிறது. இவை அனைவர்க்கும் ஏற்படும் அனுபவங்களே. நாம் கேட்டவை, மற்றும் படித்தவைகளில் இருந்தும், நமது தர்க்க ஞானத்தாலும், அனுபவங்கள் மூலமும் மனமே சம்சாரமாக நம் முன் விரிகிறது என்பது கண்கூடாகத் தெரிகிறது. இவ்வாறு அனைவர்க்கும் தெள்ளத் தெளிவாகத் தெரிகின்ற உண்மையை எவ்வாறு மறுக்க முடியும்?

8-9. சீடன்: மனத்தோடு உள்ள பிணைப்புகளே பிரம்மத்தை சம்சாரக் கடலில் வீழ்த்துகிறது என்பது எவ்வாறு நடக்கிறது?
குரு : இந்த நூலின் “ஒன்று வேறொன்றாகக் காணப்படுவது” என்னும் முதல் அத்தியாயத்திலேயே, தன்னை “இது”வாகவும் “அது”வாகவும் சதா சிந்தித்துக்கொண்டிருக்கும் மனது “நான்” என்றும் “இது” என்றும் ஆகிய இரண்டு நிலைகளில் சஞ்சரிக்கிறது என்று கூறப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு நிலைகளில் “நான்” என்கிற ஒரேயொரு எண்ணத்தை மட்டுமே தழுவிக்கொண்டு “நான்-நிலை” நிற்கிறது. ஆனால் அவ்வப்போது எழும் “சத்வ-ரஜச-தாமச” எனப்படுகிற “தூய-செயல்மிக்க-மந்த” குணங்களுக்கு ஏற்ப “இது-நிலை” வெவ்வேறு நிலைகளை மேற்கொள்ளுகிறது.
சீடன்: இவ்வாறான நிலைகள் இருப்பதை முன்பே யாராவது கூறியிருக்கிறார்களா?

10-11. குரு : இவ்வாறான சத்வ-ரஜச-தாமச குணங்கள் மனத்திற்கு இருக்கின்றன என்றும், அதற்குத் தகுந்தாற்போல் மனதின் தன்மைகள் மாறுகின்றன என்றும் ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள் கூறியிருக்கிறார். அவைகளின் விளைவாக பற்றின்மை, சாந்தம், நல்லெண்ணம் போன்றவைகள் சத்வ நிலையிலும், ஆசை, கோபம், பேராசை, பயம், முயற்சி செய்தல்

போன்றவைகள் ரஜஸ நிலையிலும், சோம்பல், குழப்பம், மந்தம் போன்ற தன்மைகள் தாமச நிலையிலும் வெளிப்படுகின்றன.

12-14. இயற்கையில் எந்த மாறுபாடும் காணாத சுத்த, சுயம் பிரகாசமான பேரறிவாகிய பிரம்மம் பலவித தன்மைகளுடன் இருக்கும் மனத்துடன் கூடும்போது அவைகளால் பாதிக்கப்பட்டது போலத் தனது குணத்தை வெளிப்படுத்துகிறது.

சீடன்: அது எவ்வாறு சாத்தியம் ஆகும்?

குரு : இயற்கையில் தண்ணீர் குளிர்ந்ததாகவும், சுவையற்றதாகவும் இருக்கிறது என்பதை நீ அறிவாய். ஆனாலும் தான் சேரும் பொருட்களின் தன்மையால் அது எவ்வாறு சூடாகவோ, தித்திப்பாகவோ, கசப்பாகவோ, புளிப்பாகவோ மாறக்கூடுமோ அவ்வாறே சுத்த சைதன்யமான சச்சிதானந்த ஆன்மாவும் "நான்-நிலை"யோடு கலக்கும்போது அகந்தை வடிவாக உருமாறுகிறது. எவ்வாறு குளிர்ந்த நீர் உஷ்ணத்தால் சுடுநீர் ஆகிறதோ, அதே போல பேரின்பமயமான ஆன்மாவும் "நான்" எனும் எண்ணத்தோடு கூடியதன் விளைவாக துன்பம் மிகுந்த அகந்தையாக உருவெடுக்கிறது. முதலில் சுவையற்றதாய் விளங்கிய நீர் தனது கலவைகளால் இனிப்பு, கசப்பு, புளிப்பு போன்ற சுவைகளை எவ்வாறு அடைகிறதோ, அதேபோல மனத்தின் "இது-நிலை"யாக பற்றின்மை, சாந்தம், நல்லெண்ணம், ஆசை, கோபம், பேராசை, பயம், முயற்சிப்பது, சோம்பல், குழப்பம், மந்தம் போன்ற எந்த குணங்கள் மனத்தை ஆண்டுகொண்டு இருக்கிறதோ, அந்த குணங்களால் பரிசுத்தமான ஆத்மா பாதிக்கப்படுவதுபோலக் காணப்படுகிறது.

15. பிராணன் எனப்படும் உயிர்ச் சக்தியுடன் இணைந்திருக்கும் ஆன்மாவே பிராணன், மனம், புத்தி, உலகம் முதலான கரணங்களாகவும், மற்றும் ஆசை, கோபம், பற்றின்மை முதலான தன்மைகளாகவும் வெளிப்படுகிறது என்றே மறைகள் கூறுகின்றன.

16. ஆகையால் மனத்துடன் இணைந்திருக்கும் ஆன்மாவே ஜீவனாக மாறியுள்ளது போலக் காணப்பட்டு, அந்த மாற்றத்தால் அது ஒரு முடிவேயில்லாத சம்சாரத் துக்கத்தில் ஆழ்ந்துள்ளது போலவும் நான், நீ, அவன், அவள், அது, எனது, உன்னது போன்ற எண்ணற்ற மயக்கங்களில் மயங்குவது போலவும் காணப்படுகிறது.

17. சீடன்: இப்போது ஆன்மாவிற்குச் சம்சார பந்தம் வாய்த்துள்ளதால், அதிலிருந்து அதை எவ்வாறு விடுவிப்பது?

குரு : மனத்தை ஒரேயடியாக அடக்கி அதனை அழித்தால் சம்சாரத்தை வேரோடு சாய்த்து விடலாம். அவ்வாறு செய்யாதவரை யுகங்கள் பல கழிந்தாலும் சம்சாரத்திற்கு ஒரு முடிவே இருக்காது.

18. சீடன் : மனோ நிக்கிரஹத்தைத் தவிர சம்சாரத்தை ஒழிக்கும் வழி வேறு எதுவுமே கிடையாதா?

குரு : ஆம், வேறு வழி எதுவுமே கிடையாது. வேதங்களின் உதவியாலோ, சாஸ்திரங்கள் கூறும் வழி நடப்பதாலோ, ஹோம-யக்ஞங்கள் செய்வதாலோ, கர்மங்கள் ஆற்றுவதாலோ, சபதங்கள் மேற்கொள்ளுவதாலோ, தானங்கள் வழங்குவதாலோ, தந்திர மந்திரங்கள் ஜெபிப்பதாலோ, இறைவனை வணங்குவதாலோ இவ்வாறான வழிகள் எதனாலும் சம்சாரத்தை ஒழிக்க முடியாது. மனோநாசம் ஒன்றே அதற்கான வழி; வேறெதனாலும் முடியாது.

19. சீடன்: அறிவு ஒன்றால் மட்டுமே சம்சார பந்தம் ஒழியும் என்று மறைகள் கூறுகிறபோது, மனோ நிக்கிரஹத்தால் மட்டுமே அது சாத்தியம் என்று தாங்கள் எவ்வாறு கூற முடியும்?

குரு : மனத்தை அழித்தல் என்பதைத்தான் மறைகள் அறிவு பெறுதல், முக்தி அடைதல் என்றெல்லாம் பல வகையில் கூறுகின்றன.

சீடன்: யாராவது அவ்வாறு சொல்லி இருக்கிறார்களா?

20-27. குரு : வசிஷ்ட முனிவர் அவ்வாறு சொல்லியிருக்கிறார். பழகப் பழக சஞ்சலம் இல்லாமல் மனம் ஒரு முனைப்பாக நிற்கிறபோது மயக்கங்கள் தரும் சம்சாரம் அடியோடு மறைகிறது. அமுதம் பெறுவதற்காக மந்திர மலையால் பாற்கடலைக் கடையும்போது அங்கு கலக்கங்கள் மிகுந்து இருந்தாலும், எல்லாம் கடைந்து முடித்த பின் மலையை எடுக்கும்போது அங்கு தோன்றும் அமைதியைப்போல, மனம் சஞ்சலம் இல்லாது இறுதியில் அமைதியாக நிற்கும்போது சம்சாரமும் அங்கு காணப்படாது ஒழியும்.

சீடன்: அலைகின்ற மனத்தை நிறுத்துகிற வழி என்ன?

குரு : தனக்கு விருப்பமானவைகள் அனைத்தையும் துறந்து, பற்றற்று இருந்து, தன் சாதக முயற்சியில் தீவிரமாக இருந்தால் மனத்தை ஒரூமுகமாக நிறுத்துவதில் வெற்றி காணலாம். அவ்வாறு மனம் அடங்கினால் ஒழிய முக்தி கிடைப்பது இயலாது. ஞான விசாரத்தால் கிடைக்கப்பெற்ற அறிவின் துணையால், பிரம்மத்தைத் தவிர்த்துக் காணப்படும் எந்தப் பொருளும் உண்மையல்ல என்று முன்னர் மயக்கத்தில் இருந்த மனத்திற்கு ஒரு தெளிவு பிறப்பதால், அவ்வாறான பொருட்கள் நிறைந்த உலகமும் உண்மையல்ல என்று அதனை

அடியோடு மறுப்பதால் மட்டுமே, பேரறிவுடன் கூடிய பேரின்பத்தை அடையமுடியும். அவ்வாறு இல்லாததால் விளையக்கூடிய ஓர் அமைதியற்ற மனத்துடன் இருக்கும் அறிவிலி ஒருவன் சாஸ்திரங்கள் கூறும் எந்த வழிகளைப் பின்பற்றினாலும், அவனால் முன்னேற்றமும் காணமுடியாது; அவனுக்கு முக்தியும் கிட்டாது.

யோகப் பயிற்சிகளின் மூலம் மறைந்திருக்கும் வாசனைகளை அழித்ததனால் புனிதமானதாகவும், எந்த மாதிரியான காற்று வீசினாலும் ஒரு கண்ணாடி ஜாடிக்குள் ஆடாது அசங்காது நேராக நின்று ஒளிவிடும் தீபம் போன்று, ஒரே சிந்தை கொண்டதாகவும் நிற்கிற மனமே தன் வலிவும், பொலிவும் இழந்து ஒழிந்துபோனதாகக் கருதப்படும். அவ்வாறான மனோநாசமே, அடைவதற்குள் உத்தமமான சாதனையாகும். முக்தி என்பது மனம் அவ்வாறு இயக்கமில்லாது நிற்றல் என்பதே வேதங்களின் முடிவான கருத்தாகும்.

மிகுதியான செல்வம், நிறைவாக இருக்கும் உறவுகளும் நண்பர்களும், தானே ஆற்றும் பலவிதமான பணிகள், புனிதத் தலப் பயணங்களும் அங்கு தங்கி வசிப்பதும், புனித நீர்களில் மூழ்கி நீராடுதல், இருப்பனவற்றுள் கடினமான உபவாசங்களை மேற்கொள்வது இவ்வாறான எதுவும் தர இயலாத முக்திப் பயனைத் தர வல்லது மனோநாசம் ஒன்றே. இவ்வாறாக மனத்தை ஒதுக்கித் தள்ளுதலே முக்திக்கான வழி என்று பல மறைநூல்களும் அறிவிக்கின்றன. சம்சாரம் தோன்றுவதன் மூல காரணமே மனம் என்றும், அதனாலேயே பல விதமான தொல்லைகளுக்கும் ஒருவன் ஆளாகிறான் என்பதால், மனோநாசமே முக்தி அடைவதற்கான உபாயம் என்ற ஒரே தாரக மந்திரமே யோக வாசிஷ்டம் என்ற நூலின் பல பகுதிகளிலும் பலமுறை கூறப்பட்டிருக்கிறது.

28. புனிதமான அறிவுரைகளைப் பற்றிய அறிவும், அதைப் பற்றிச் சிந்திப்பதால் பெறப்படும் தெளிவும், அதன்படி நடப்பதால் நமக்கு ஏற்படும் அனுபவங்கள் மூலம் மனத்தை ஒட்டுமொத்தமாக அழிப்பதே சம்சாரத்தையும், அதனால் விளையும் தொல்லைகளையும் விலக்கும் ஒரே வழி. அவ்வாறு செய்யவில்லை என்றால் எப்படி நமக்குத் தொடர்ந்து வரும் பிறப்புகளையும், இறப்புகளையும் நம்மால் நிறுத்த முடியும்? அந்த மரண-ஜனனங்களால் எவ்வாறு அமைதியும், விடுதலையும் நமக்குக் கிட்டும்? கிட்டவே கிட்டாது. ஒருவனது கனவில் காணப்படும் ஒரு புலியால் அவனுக்கு ஏற்பட்ட பயம் போவதற்கும், அந்தக் கனவு ஒரு முடிவுக்கு வருவதற்கும், கனவு காணும் அவன் தன் உறக்கத்தில் இருந்து விழித்து எழுந்தே ஆகவேண்டும். அதேபோல ஒருவன் தன் மனத்தின் மயக்கங்களில் இருந்து வெளியே வரவில்லையென்றால் அவனது சம்சார பந்தங்களும் தொடர்ந்துகொண்டே இருக்கும்.

அதனால் மனோநாசம் அடையவேண்டும். அதுவே அவனது வாழ்வு பூரணம் அடைந்ததன் அறிகுறியாக இருக்கும்.

29-30. சீடன்: மனோநிக்ரஹத்தை அடைவது எப்படி?
குரு : சாங்கிய முறையைப் பின்பற்றித்தான். கேள்வி கேட்டுப் பெறக்கூடிய அறிவுடன் கூடிய ஆன்ம விசாரமே சாங்கிய முறை என்று சொல்லப்படும். மனம் துளிர்த்ததற்கு வேராக இருந்தது அந்த அறிவு இல்லாதபோது இருந்த அறியாமையே என்பதால், அறிவுடன் கூடிய ஆன்ம விசாரம் தொடங்கியதும் மனம் அழியத் துவங்குகிறது.
சீடன்: அது எப்படி நடக்கிறது என்பதை சற்று விளக்கமாகக் கூறுங்களேன்.
குரு : மறைகளில் கூறியுள்ளதுபடி, ஆன்ம விசாரத்தில் சிரவணம் (கேட்டல்), மனனம் (சிந்தித்தல்), நிதித்யாசனம் (பயில்தல்), மற்றும் சமாதி ( அமைதி நிலை நிற்றல்) என்றனைத்தும் நிகழ்கின்றன. இவ்வாறு விசாரம் செய்வதால் மட்டுமே மனோநாசத்தை அடைய முடியும்.

31-32. அதற்குப் பதிலான மாற்று வழியும் ஒன்று இருக்கிறது. அதற்கு யோக முறை என்று பெயர்.
சீடன்: யோகம் என்றால் என்ன?
குரு : யோகம் என்பது குணங்கள் அற்ற சுத்த ஆன்மாவைத் தியானிப்பது ஆகும்.
சீடன்: இந்த மாற்று வழி எங்கு சொல்லப்பட்டிருக்கிறது? அந்த முறைப்படி செய்வது எப்படி?
குரு : சாங்கிய முறைப்படி அடையக்கூடியதை யோக முறையிலும் அடையலாம் என்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஸ்ரீமத் பகவத் கீதையில் கூறியிருக்கிறார். இந்த இரண்டு வழிகளில் எதில் சென்றாலும், இறுதியில் அடையக்கூடிய பயன் ஒன்றே என்பதை உணர்ந்தவரே முற்றும் அறிந்த ஞானியாக இருக்க முடியும்.

33-34. சீடன்: இரண்டு வழிகளால் வரும் இரண்டு முடிவுகளும் எவ்வாறு ஒரே விதமாக இருக்க முடியும்?
குரு : இரண்டு வழிகளின் எல்லையும் ஒன்றாகவே இருப்பதால் இரண்டுமே மனோநாசத்தில் முடிகின்றன. அதுவே சமாதி நிலை அல்லது பேரமைதியுடன் கூடிய பேரின்பப் பெருநிலை. சமாதி நிலையில் ஒருவனுக்குக் கிட்டுவதே பேரறிவு எனப்படுகிறது. எந்த வழியில் சென்றாலும் அதுவே முடிவு.
சீடன்: எவ்வழிச் சென்றாலும் ஒரே முடிவு என்றால் அது ஒரேயொரு வழியின் பயன் தான் என்கிறபோது எதற்காக இரண்டு வழிகள் சொல்லப்பட்டிருக்கின்றன?

குரு : உலகில் உள்ள சாதகர்கள் ஒரே மாதிரி இல்லாது வெவ்வேறு அளவிற்கே முன்னேறியவர்களாக இருக்கிறார்கள். வெவ்வேறு நிலையில் இருக்கும் அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்காகவே பகவான் இரண்டு வழிகளைக் காண்பித்திருக்கிறார்.

35. சீடன்: ஆத்ம விசார (சாங்கிய) வழியைப் பின்பற்றுவதற்கு எவரெவர் தகுதி பெற்றவர்களாக இருக்கிறார்கள்?
குரு : அதற்கான வழியில் நன்கு தேர்ந்தவர்களே அதைப் பின்பற்றி அதில் வெற்றி காண முடியும்; மற்றவர்களால் அது இயலாது.

36-37. சீடன்: இந்த வழியில் செல்ல எவ்வாறான சாதனைகளைச் செய்திருக்க வேண்டும்?
குரு : உண்மையாக உள்ளவற்றில் இருந்து உண்மையல்லாதவற்றைப் பிரித்துத் தெரிந்துகொள்வது, இம்மையிலோ மறுமையிலோ வரும் இன்பங்களை அனுபவிக்கும் எண்ணங்கள் ஏதும் இல்லாது இருப்பது, கர்மங்கள் எதுவும் இல்லாது இருப்பது, முக்தியில் தீவிர நாட்டம் கொண்டு இருப்பது என்றிவ்வாரான திறமைகள் சாதகனுக்கு அவசியம் என்று அறிந்தோர் கூறுவர். இந்த நான்கு திறமைகளும் சாதகனுக்கு இல்லாது போனால் அவன் எவ்வளவுதான் முயன்றாலும் அவனால் முயற்சியில் வெற்றி காண இயலாது. அதனால் இந்த நான்கும் ஒருவன் விசார வழியைத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கும் முன்பாக இருக்க வேண்டிய முக்கியத் தேவைகள்.

38. எல்லாவற்றுக்கும் முன்பாக இந்த நான்கு சாதனைகளின் வெவ்வேறு குணங்கள் பற்றி சாதகன் அறிந்திருக்க வேண்டும். முன்பே கூறியுள்ளபடி இந்த நான்கு சாதனைகளின் காரணம், இயல்பு (தன்மை), பாதிப்பு (காரியம்), எல்லை (வரையறை), மற்றும் பலன் என்ற ஐந்து அம்சங்களின் விவரங்களை இனி காண்போம்.

39-44. புனிதம் அடைந்த ஒரு மனத்தில்தான் விவேகம் பிறக்க முடியும். காணும் பிரம்மம் ஒன்றே சத்தியம், காணப்படும் மற்றவை யாவும் மாயத் தோற்றங்கள் என்று பிரித்து அறியும் தன்மை வேத வாக்கியங்களின் மூலம் ஒருவனிடம் வலுவடைந்து இருப்பதே விவேகம் எனும் குணத்தின் **இயல்பு.** எப்போதும் அந்த உண்மை ஒருவனது நினைவில் இருப்பதே அதன் **பாதிப்பு.** சிறிதும் மாறாத அந்த உண்மை நன்கு நிலைநாட்டப்பட்டு ஒருவனது உள்ளத்தில் வேரூன்றிருப்பதே அதன் முடிவான **எல்லை.** உலகம் என்றுமே பொய்மையானது என்ற ஆழ்ந்த கருத்தினால் விளையும் **பயனே** வைராக்கியம் எனப்படும் பற்றின்மை. அதன் விளைவால் உலகத்தில் உள்ள எதனிடமும் எவ்விதப் பற்றும் கொள்ளாது, உலகத்தையே

வெறுத்து ஒதுக்குவதுதான் அதனுடைய **இயல்பு**. எவ்வாறு ஒருவன் தான் வெளியேற்றிய உணவை வெறுப்பானோ அதேபோல உலக இன்பங்களை வெறுப்பதே அதன் **பாதிப்பு**. அதனால் இம்மை, மறுமைக்கான சுகங்கள் அனைத்தையும் வெளியேற்றப்பட்ட வாந்தி போலவோ, அல்லது நரகத்தில் கொளுத்தும் தீயைப் போலவோ வெறுத்து நீக்குவதே அதன் **எல்லை**யான முடிவு.

அஷ்டாங்க யோகத்தில் எட்டு நிலைகள் உள்ளன. அவை சுயக் கட்டுப்பாடு (யம), நல்லொழுக்கம் (நியம), நேரான நிலையில் இருத்தல் (ஆசன), மூச்சுக் கட்டுப்பாடு (பிராணாயாம), ஐம்புலன் அடக்கம் (பிரத்யாஹார), உண்மையே உருவான உள்ளம் (தாரண), தியானம் (தியான), பரிபூரண அமைதி (சமாதி) என்பன ஆகும். இந்த யோக நிலைகளைக் கடந்தால் கர்மம் எனப்படும் செயல்பாடுகள் தானே நிற்கும். மனத்தைக் கட்டுக்குள் வைத்திருத்தலே அதன் **இயல்பு**. உலகியல் கர்மங்களில் இருந்து விடுதலை அளிப்பதே அதன் **பலன்**. கர்மங்கள் ஏதும் இல்லாததால் உறக்கத்தில் உள்ளது போல உலகைப் பற்றிய நினைவே இல்லாது இருப்பது அதன் **எல்லை**. ஞானிகளின் சத்சங்கத்தை நாடுவதால் முமுக்ஷுத்வம் எனப்படும் முக்தியை விரும்பும் நிலை அப்போது தொடங்குகிறது. அவ்வாறான முக்தியை நாடுதலே அதன் **இயல்பு**. ஒரு குருவை நாடி அவரது வழிகளைப் பின்பற்றுவதே அதன் **பலன்**. தனக்கு விதிக்கப்பட்டுள்ள நித்ய கர்மாக்களின் மேல் இருந்த பற்றுதல் அற்றுப்போவதும், அதுவரை தான் கற்று, பின்பற்றிய வேத சாஸ்திரங்களையும், முறைகளையும் அதற்குப் பின் கைவிடுதலும் அதன் **எல்லை** ஆகும்.

மேலே கூறியவாறு அதனதன் எல்லைகளை எட்டிவிட்டால், அதுவரை பழகியிருந்த சாதனை முறைகள் சரியாகத் தொடர்ந்திருக்கின்றன என்பதே அதன் பொருள்.

45-47. இந்தச் சாதனையின் எல்லா நிலைகளையும் முழுமையாகக் கடக்காது, ஒருசில நிலைகளில் மட்டுமே பரிபூரணத்துவம் கிட்டியிருந்தால் ஒருவன் தனது மரணத்திற்குப் பிறகு தேவலோகம் செல்கிறான். ஆனால் எல்லா நிலைகளிலுமே அவன் முழுமையான பூரணத்துவம் அடைந்திருந்தால் அந்த ஆளுமை அவனை ஆன்ம விசாரத்திற்கு இட்டுச் செல்லும் தகுதியை அவனுக்கு அளிக்கும். *இவ்வாறாக அனைத்து நிலைகளிலும் ஒருவன் சாதனைகளை ஒழுங்காகச் செய்திருந்தால் மட்டுமே ஆன்ம விசாரத்திற்கான தகுதியை அவன் அடைய முடியும்; இல்லையென்றால் அது சாத்தியம் இல்லை.* அந்த வெவ்வேறு நிலைகளில் ஏதேனும் ஒரு நிலையில் மட்டும் பூரணத்துவம் அடையாதிருந்தாலும், அது ஆன்ம

விசாரத்திற்கு ஒரு பெரும் தடையாக நிற்கும். இதைப் பற்றி நாம் இப்போது மேலும் அலசுவோம்.

48-49. பற்றின்மை முதலான குணங்கள் இல்லாமல், உள்ளது-இல்லாதது போன்றவைகளைப் பகுத்து அறியும் தன்மை ஒருவனுக்கு மிக நன்றாகவே இருந்தாலும், அது மட்டுமே ஆன்ம விசாரத்திற்கான வழியில் அவனுக்கு இருக்கும் தடைகளை அகற்ற இயலாது. வேதாந்த சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்தவர்கள் என்று எவ்வளவு நபர்களை நாம் பார்க்கிறோம்! அவர்களுக்கு அந்தப் பாண்டித்தியம் நன்கு இருக்குமே தவிர, பற்றின்மை போன்ற குணங்களை அவர்கள் வளர்த்திருக்க மாட்டார்கள். அதனால் அவர்கள் ஆன்ம விசாரத்தைத் தொடங்கும் தகுதி அற்றவர்களாக இருப்பார்கள். இதனால் நாம் அறிவது என்னவென்றால் வைராக்கியம் இல்லாத விவேகத்தினால் மட்டுமே விசாரம் கைகூடாது என்பதே.

50-51. சீடன்: வேதாந்தக் கருத்துக்களை நன்கு ஆழ்ந்து அறிந்த மேதைகளே எப்படி ஆன்ம விசாரத்தில் வெற்றி காணாது போனார்கள்?

குரு : வேதாந்தத்தை நன்கு கற்று, அதில் பாண்டித்யமும் அடைந்து, அவர்கள் மற்றவர்களுக்கு அதை நன்கு விளக்கிப் புரிய வைத்தாலும், தங்கள் அளவில் அவர்கள் பற்றின்மையை அடையவில்லை. அதனால் தாங்கள் கற்றதை அவர்கள் தங்களது வாழும் நெறியாகக்கொண்டு வாழவில்லை.

சீடன்: அப்படி வேறென்னதான் அவர்கள் செய்தார்கள்?

குரு : வேதாந்தக் கருத்துக்களாகச் சொல்லப்பட்டதை அவர்கள் ஒரு கிளியைப்போல திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கருத்துக்கள் காட்டிய வழிப்படி அவர்கள் தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொள்ளவில்லை.

சீடன்: வேதாந்தம் என்ன கற்றுக் கொடுக்கிறது?

குரு : வேதாந்தம் நமக்குக் கற்றுக் கொடுப்பது இவைகளைத்தான்: அத்வைத பிரம்மத்தைத் தவிர்த்துக் காணப்படும் அனைத்தும் துயரங்களைத் தரும் என்பதால், இன்ப உணர்வு தரக் கூடியது என்பதற்காக எந்தப் பொருளையும் நாடாதிருப்பது; விருப்போ வெறுப்போ எதுவும் இல்லாது இருப்பது; நான், நீ, அவன், அவள், அது, எனது, உனது என்பவைகளின் மூலமான அகந்தை உணர்வை ஒட்டுமொத்தமாகத் துண்டித்து வைப்பது; "நான்" "எனது" என்ற எண்ணங்களற்று இருப்பது; அனல்-குளிர், துன்பம்-இன்பம் போன்ற இரட்டைகளைப் பற்றிப் பொருட்படுத்தாமல் வாழ்வது; காண்பது அனைத்தும் ஒன்றே என்பதால் அவைகளில் எந்த வேறுபாடுகளையும் காணாது இருப்பது; பிரம்மத்தைத் தவிர வேறு எதையும் காணாது

இருப்பது; அந்த அத்வைத பிரம்மத்தில் திளைக்கும் ஆனந்தம் ஒன்றை மட்டுமே எப்போதும் அனுபவித்துக்கொண்டு இருப்பது.

வேதாந்தத்தைக் கற்றறிந்து அதில் நன்கு தேர்ந்தாலும், பற்றின்மை ஒருவருக்கு வளரவில்லை என்றால் இன்பங்களைத் துய்த்து அனுபவிக்கத் துடிக்கும் அவரது ஆசை சிறிதும் அழியாது. அப்போது இன்பங்கள் தரும் வழிகளைத் துறக்கும் மனோபாவம் வளராது என்பதால் அதை அனுபவிக்கும் ஆசையும் அவனிடம் இருந்து மறையாது. ஆசைகளைக் கட்டுப்படுத்தாததனால் ஆர்வம், கோபம் முதலானவைகள் வளரும்; உடல் காணப்படுவதால் தோன்றும் பொய்யான "நான்" என்னும் அகந்தை துளிர்க்கும்; நான்-நீ என்ற பல உடல்கள் காணப்படுவதால் 'நான்' 'எனது' என்ற எண்ணங்களும் வலுக்கும்; இன்ப-துன்பங்கள் போன்ற இரட்டைகளும், இருப்பதாகக் காணப்படும்; பொய்த் தோற்றங்களும் எவையும் மறையாது நிற்கும். ஆகவே ஒருவன் எவ்வளவுதான் கற்றுத் தேர்ந்திருந்தாலும், கற்றவைகளைத் தனது வாழ்க்கையில் பயன்படுத்தவில்லை என்றால் அவன் உண்மையில் கல்லாதவனே. அதனால் அவன் ஒரு கிளிப்பிள்ளையைப் போலப் பிரம்மம் ஒன்றே உண்மை, மற்ற அனைத்தும் பொய்யே என்ற கருத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே இருப்பான்.

சீடன்: அவன் ஏன் அப்படி இருக்கிறான்?

குரு : எவ்வாறு ஒரு நாய்க்கு குப்பையைக் கிளறுவதில் நாட்டம் இருக்கிறதோ, அதே போல அவனும் வெளியே தெரியும் பொருட்களில் நாட்டம் கொண்டுள்ளவனாக இருக்கிறான் என்று அவனுடைய நிலையை கற்று உணர்ந்த பெரியோர்கள் விவரிப்பார்கள். எப்போதும் வேதாந்தக் கருத்துக்களிலேயே அவன் மூழ்கி இருந்து, அதைப் பற்றிப் படித்துக்கொண்டும், மற்றவர்களுக்குச் சொல்லிக்கொண்டும் இருந்தாலும் அவன் ஒரு சாதாரண நாயை விட மேன்மையானவன் அல்ல.

52. சாஸ்திரங்களை நன்கு கற்று, அந்த விவரங்களைக் கரைத்துக் குடித்தவர்களாய் இருக்கும் அவர்கள் தங்களுக்கு எல்லாம் தெரியும் என்ற கர்வம் கொண்டு, அனைத்தும் அறிந்தவர்கள் என்பதனால் தாங்கள் அனைத்து மரியாதைகளுக்கும் உரியவர்களாகவும், விருப்பும் வெறுப்பும் கொண்டிருப்பதால் சமூகத்தில் மதிப்பு மிக்கவர்களாக இருப்பதாகவும் எண்ணிக்கொண்டு தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்பவர்களாய் இருப்பார்கள். அவ்வாறு இருக்கும் அவர்கள் உண்மையிலேயே கனமான பொதி மூட்டை ஒன்றை தொலை தூரம் தூக்கிச் செல்லப் பயன்படும் கழுதைகள் போன்றவர்கள்தான். பிரம்மத்தைப் பற்றி

எண்ணும்போது அத்தகையவர்களைப் பற்றிச் சிறிதுகூட நினைக்க வேண்டாம். இவ்வாறே ராமருக்கு அறிவுரைகள் தரும்போது வசிஷ்டர் கூறியிருக்கிறார்.

53. சீடன்: சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்தவர்களில் எவரேனும் அவ்வாறு கற்றவைகளைத் தங்கள் வாழ்க்கையில் பயன்படுத்தாது இருந்திருக்கிறார்களா?

குரு : ஓ! பல பேர் உண்டு. அவ்வாறு இருந்த பலரை நாம் புராணங்களில் கூட படித்திருக்கிறோம். பிரம்ம சர்மா என்ற பிராமணன் ஒருவர் இருந்தார். அவர் வேதம் மற்றும் வேதாந்தங்களில் நல்ல தேர்ச்சி பெற்றவர் என்பதோடு பல கலைகளிலும் வல்லவர். அவை அனைத்தையும் மற்றவர்களுக்குக் கற்றுத் தருவாரே அன்றி அவை எதையும் தன் வாழ்க்கையில் பயிலவேயில்லை. விருப்பு, வெறுப்பு நிறைந்தவராயும் தனது பேராசையைத் தணிக்கும் வகையில் தகாதவைகளைச் செய்தும், தனது ஆசைகளுக்கு ஏற்ப வாழ்க்கையை அனுபவித்தவராகவும் வாழ்ந்த அவர், இறந்தபின் நரகத்திற்குச் சென்றார். அவரைப் போலவே வாழ்ந்த பலரும் அதைப் போலவே நரகத்திற்குச் சென்றனர்.

வீண் பெருமையாலும், பொறாமையாலும் ஆட்கொள்ளப்பட்டவர்களாய் நன்கு கற்ற பல பண்டிதர்களும் உலகில் வாழ்வதை நாம் பார்க்கிறோம். வேதாந்த அறிவு ஒருவருக்கு இருப்பதால் அவருக்கு உள்ளது, இல்லாதது எனப் பிரித்துப் பார்க்கும் விவேகம் கிட்டும். அத்துடன் ஒருவருக்கு பற்றின்மையாகிய வைராக்கியமும் வளராது போனால் அதனால் எந்தப் பயனும் இருக்காது; அது அவரை ஆன்ம விசாரத்திற்கு இட்டுப் போகாது.

54-56. சீடன்: விவேகமும் வைராக்கியமும் கூடினால் அது வேண்டிய முடிவைத் தரும் அல்லவா?

குரு : இல்லை, அத்துடன் எவன் ஒருவனுக்குக் கர்மங்கள் நிற்காது தொடர்கிறதோ அப்போது இவ்விரண்டும் கூடுவதால் மட்டுமே அவனுக்கு முக்திக்கான வழி சித்திக்காது. கர்மங்கள் நிற்காத நிலையில் ஆன்ம விசாரத்திற்கான ஆர்வமே கிட்டாது என்னும்போது முடிவான நிலையை அவன் எப்படி எட்ட முடியும்?

சீடன்: வைராக்கியம் மிகுந்து உள்ள ஒருவனுக்கு ஆன்ம விசாரத்தில் நாட்டம் வராது போனால் அவன் என்ன செய்வான்?

குரு : பற்றற்ற அவனுக்குக் கர்மங்கள் நில்லாது தொடர்வதால், அவன் வேண்டுகிற அமைதி அவனுக்குக் கிட்டாது. ஆசைகள் அற்ற நிலையில் அவனுக்கு வீடு, வாசல், கலைகள் போன்ற உலகியல் இன்பங்களில் நாட்டம் வராது மனத்தில் ஒரு விரக்தி ஏற்படும். அத்தகைய நிலையில் அவன் அவை அனைத்தையும் துறந்து தனிமையை நாடி, நாட்டை விட்டு, காடு

சென்று தேவையற்ற ஜபம், தியானம் போன்ற எளிமையான செயல்களில் ஈடுபடுவான். சிகித்வஜன் என்ற அரசனே இந்த நிலைக்குச் சரியான உதாரணமாகச் சொல்லப்படுகிறான்.

57-59. சீடன்: அப்படியென்றால் விவேகம், வைராக்கியத்துடன் செயல்கள் அற்ற நிலையே ஒருவனுக்கு முக்தி தருமா?

குரு : இல்லை, பற்றற்ற அந்த நிலையிலும் அவனுக்கு முக்தி காண வேண்டும் என்ற வேட்கை இருந்தாலொழிய அவனுக்கு ஆன்ம விசாரம் செய்யும் நாட்டம் கிட்டாது.

சீடன்: அப்போது அவன் என்னதான் செய்வான்?

குரு : ஆசைகளும் ஒழிந்து, அமைதி நிலையிலும் இருக்கும் அவன் மேற்கொண்டு எதையும் செய்யத் தோன்றாமல் ஒருவித அலட்சிய மனோபாவத்துடன் இருப்பான்.

சீடன்: இவ்வாறான மூன்று வித குணங்களையும் கொண்டு, ஆன்ம விசாரத்திலும் ஈடுபடாமல் இருந்தவர்கள் யாரேனும் உண்டா?

குரு : உண்டு. பூஜை, ஜபம் போன்ற எளிமையான செயல்கள் என்றாலே பற்றின்மை உள்ளதைக் காட்டுகிறது. அவ்வாறு இருக்கும் தபஸ்விகளுக்கு மனம் குவிந்து ஒருமைப்படுகிறது. ஆனாலும் அவர்கள் ஆன்ம விசாரத்தில் ஈடுபடுவதில்லை.

சீடன்: அப்புறம் அவர்கள் என்னதான் செய்கிறார்கள்?

குரு : புறச் செயல்களில் வெறுப்புகொண்டு, தங்களது குவிந்த மனத்தோடு இருக்கும் அவர்கள் ஆழ்நிலைத் தூக்கத்தில் உள்ளது போன்ற தனது இயக்கத்தை நிறுத்தும் தியானம் போன்ற எளிமையான செயல்களில் ஈடுபடுவார்களே அல்லாது ஆன்ம விசாரத்தில் ஈடுபடமாட்டார்கள். இதற்கு சரபங்க மகரிஷி ஓர் உதாரணமாகக் காட்டப்பட்டு, அவர் இறந்த பின் தேவலோகம் அடைந்தார் என்றும் ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கும்.

சீடன்: தேவலோகம் அடைவதும் விசாரத்தின் பலன்களில் ஒன்றுதானே?

குரு : இல்லை. ஆன்ம விசாரம் முக்தியில் முடிய வேண்டும். அது ஒன்றே தொடரும் பிறப்பு-இறப்பு சூழல்களில் இருந்து ஒருவனை விடுவிக்கும். ஓரிடத்தில் இருந்து வேறிடம் செல்வது விடுதலை அல்ல. சரபங்க ரிஷி ஆன்ம விசாரத்தில் ஈடுபடவில்லை என்றும், அவரால் அது முடியவில்லை என்பதும்தான் அவருக்கு நேர்ந்ததில் இருந்து நமக்குத் தெரிகிறது. அதனால் மேலே சொல்லப்பட்ட விவேகம், வைராக்கியம், செயலின்மை, முக்தியில் நாட்டம் என்ற நான்கு சாதனைகளும் ஆன்ம விசாரத்தில் ஈடுபடுவதற்கான அத்தியாவசியத் தேவைகள்.

60-61. மற்ற மூன்று குணங்களும் இல்லாதபோது, விடுதலை வேண்டும் என்ற ஓர் ஆர்வம் மட்டும் ஒருவனுக்கு இருந்தால் அது போதாது. அவ்வாறான நாட்டம் தீவிரமாக இருக்கும்போது அவனால் விசாரத்தைத் தொடங்க முடியும். ஆனால் மற்ற குணங்களும்

இல்லாத நிலையில், அவன் அந்த முயற்சியில் தோல்வியே காண்பான். அவனது நிலை ஒரு முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போலத்தான். உயர்ந்த மரத்தில் அது இருப்பதால் அவனால் அதை அடைய முடியாது; இறுதியில் அவன் அடைவது துன்பமே. இதற்குப் பதிலாக அவன் ஒரு தேர்ந்த குருவிடம் சரணடைந்து, அவரது வழிகாட்டுதலின்படி நடந்து சாதனையில் முன்னேறலாம்.

சீடன்: சாதகன் ஒருவனுக்குத் தேவையான குணங்கள் இல்லாதபோதும் அவன் முக்திக்குத் தீவிர முயற்சி செய்தால் அவனுக்கு எப்போதும் துன்பமே விளையும் என்று கூறுவதற்கு ஏதேனும் அத்தாட்சி இருக்கிறதா?

62. குரு : எவரெவர் உலக சுகபோகங்களில் பற்று கொண்டிருந்தபோதும் ஆன்ம விசாரத்தில் ஈடுபட ஆர்வம் கொள்வார்களோ, அவர்கள் சம்சாரம் எனும் நச்சுப் பாம்பால் கடிபட்டு, அந்த விஷம் தலைக்கேறியது போல செய்வதறியாது தவிப்பார்கள் என்று சூத சம்ஹிதையில் கூறப்பட்டிருக்கிறது. அத்தாட்சி இதுவே. நான்கு குணங்களும் வேண்டும் என்பதோடு அவை முழுமையாகவும் இருக்க வேண்டும் என்று கூறுவதில் ஸ்ருதிகள், தர்க்க-நியாயம் மற்றும் அனுபவம் மூன்றுமே ஒத்துப் போகின்றன. இருக்க வேண்டிய குணங்களில் ஒன்று கூட ஏறக்குறைய இருந்தாலும் ஆன்ம விசாரம் எதிர்பார்த்த பலன் அளிக்காது என்பது மட்டும் அல்லாமல், எந்த விகிதாசாரத்தில் அவை இருந்தனவோ அதற்கேற்ப, ஒருவனது மரணத்திற்குப் பின், அவன் வெவ்வேறு நிலைகளை அடைவான். ஆனால் எல்லா குணங்களும் முழுமையாக இருப்பின் ஆன்ம விசாரம் முழுப் பயனைத் தரும்.

63-69. சீடன்: அப்படியானால் ஆன்ம விசாரத்திற்கு முழுத் தகுதி பெற்றவர் யார்?
குரு : நான்கு குணங்களும் முழுமையாக அமையப்பெற்றவர்கள் மட்டுமே அதற்குத் தகுதியானவர்கள். அவர்களைத் தவிர ஏனையோர்களில் அவர்கள் வேதங்கள், மற்றும் சாஸ்திரங்களை நன்கு கற்றிருந்தாலும் அல்லது வேறு வகையில் நன்கு அறியப்பட்டவர்களாக இருந்தாலும், எளிமையான தவ வாழ்க்கை வாழ்பவர்கள் ஆனாலும், உபவாசம் முதலான நெறிகளைத் தளரவிடாது கடைப்பிடிப்பவர்கள் என்றாலும், மந்திரங்களை ஜபிப்பவர்களாக இருந்தாலும், வேறு பல வழிபாடுகளைப் புரிபவர்கள் ஆனாலும், அளவில் மிகப் பெரிய தான தர்மங்கள் கொடுப்பவர்களாக இருந்தாலும், ஓரிடம் நில்லாது தீர்த்தம்-மூர்த்தம் என்று பல புண்ணியத் தலங்கள் செல்பவர்கள் ஆயினும் இவர்களில் எவருமே ஆன்ம விசாரத்திற்கான தகுதியைப் பெற்றவர்கள் அல்ல. முறையாகத்

தீட்சை பெறாதவர்கள் வேத கர்மாக்களை எவ்வாறு செய்ய முடியாதோ, அதே போல தகுதி அற்றவர்கள் விசாரம் செய்ய முடியாது.

சீடன்: நன்கு கற்றறிந்த பண்டிதர்களுக்கு மேற்சொன்ன தகுதிகள் இல்லாது போனால், அவர்களும் விசாரத்திற்கான தகுதியை இழந்தவர்கள்தானா?

குரு : எல்லாப் புனித நூல்களையும் கரைத்துக் குடித்த மகானாக ஒருவர் இருந்தாலும் அல்லது அவைகளைப் பற்றிய வாசனையே அறியாதவர்கள் ஆனாலும், மேற்சொன்ன நான்கு தகுதிகளையும் பெற்றுள்ள ஒருவரே ஆன்ம விசாரத்திற்கான தகுதியுள்ளவர் ஆகிறார். "எவரது மனம் ஒரு நடுநிலையில் நிற்கிறதோ, எவரது புலன்கள் கட்டுப்பட்டு நிற்கின்றனவோ, எவர் செயல்பாடுகள் அற்று இருக்கிறாரோ, எவருக்குச் சகிப்புத்தன்மை மிகுந்து காணப்படுகிறதோ" அவரே விசாரத்திற்குத் தகுதியானவர் என்று மறைகளும் அறிவிக்கின்றன. அதனால் அந்த நான்கு குணங்களைக் கொண்டவர்களைத் தவிர மற்றவர்கள் எவரும் தகுதியற்றவர்கள் என்று இவற்றிலிருந்து நாம் அறிந்துகொள்கிறோம்.

70. சீடன்: தகுதியுள்ள பலரிடையே ஏதேனும் பாகுபாடுகள் கண்டு கூறப்பட்டிருக்கிறதா?

குரு: ஒருவர் சார்ந்திருக்கும் சாதி, ஒருவர் வாழ்வில் அடைந்திருக்கும் ஆஸ்ரமம் அல்லது நிலை போன்ற எந்த அம்சங்களைப் பொருத்தும் அவர் ஆன்ம விசாரத்திற்குத் தகுதியானவரா என்று எடை போடப்படுவதில்லை. ஒருவர் படித்தவராகவோ, பண்டிதராகவோ, பாமரராகவோ, குழந்தையாகவோ, இளைஞராகவோ, வயோதிகராகவோ, பிரம்மச்சாரியாகவோ, குடும்பத்தினராகவோ, தபஸ்வியாகவோ, சன்யாசியாகவோ, பிராமணராகவோ, க்ஷத்திரியராகவோ, வைசியராகவோ, சூத்திரராகவோ, சண்டாளராகவோ, ஆணாகவோ, பெண்ணாகவோ எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம்; ஆனால் அவர் ஓர் ஆன்ம சாதகராக ஆவதற்கு மேற்சொன்ன நான்கு தகுதிகளையும் பெற்றிருக்கவேண்டும். வேதங்களும், சாஸ்திரங்களும் இந்த அம்சம் ஒன்றையே வலியுறுத்திச் சொல்கின்றன.

71. இது எப்படி சாத்தியமாகும்? சாஸ்திரங்கள் கற்ற பண்டிதர் ஒருவரை ஒதுக்கிவிட்டு பாமரர்களையோ, பெண்களையோ, சண்டாளர்களையோ எவ்வாறு தகுதியுடையவர்கள் என்று கூற முடியும்? அவர் மற்றவர்களை விடத் தகுதி படைத்தவர்தானே. சாஸ்திர அறிவு மட்டுமே இருப்பது ஒரு தகுதியல்ல, சாஸ்திரங்கள் கூறும் வழியைப் பின்பற்றி நடப்பது ஒரு தகுதி என்று கூறுகிறீர்கள். எவராலும் ஒன்றைத் தெரிந்துகொள்ளாமல் அதைப் பின்பற்ற முடியாது. எவ்வாறு ஒன்றுமே அறியாத ஒரு பாமரன் அறிவு சார்ந்த ஒரு தகுதியை அடைய முடியும்?

குரு : இதற்குப் பதில் அளிக்கும் முறையாக நான் ஒரு கேள்வி கேட்கிறேன்; நீ அதற்குப் பதில் கூறு - எவ்வாறு நன்கு கற்ற ஒருவன் தன்னைத் தகுதியுள்ளவனாக ஆக்கிக் கொள்கிறான்?

சீடன்: சாஸ்திரங்கள் கற்றவனுக்குச் சுயலாபத்திற்காகக் கர்மம் தொடர்வது கூடாது என்று தெரியும்; அதனால் அவன் செய்வதெல்லாம் இறைவனுக்கே என்று அர்ப்பணித்துச் செய்வான். அதனால் அவனது மனம் சுத்தி அடையும். காலப்போக்கில் அவனுக்கு வைராக்கியம், பற்றின்மை என்று விசாரம் புரிதற்கு ஏதுவான எல்லாமே வந்து கூடும். இப்போது நீங்கள் சொல்லுங்கள் - எவ்வாறு பாமரனுக்கு அத்தகைய தகுதி வந்து சேர முடியும்?

குரு : அவனாலும் அது முடியும். இதுவரைக்கும் அவன் கற்றுக்கொள்ளாது இருந்திருக்கலாம். ஆனால் அவன் தனது முந்தைய பிறவிகளில் சாஸ்திரக் கருத்துக்களை எல்லாம் கற்றுக்கொண்டு, அதனால் அவனது கர்ம பலன்களை இறைவனுக்கு என்று அர்ப்பணித்து, அதன் விளைவால் தூய மனத்தினனாய் இருந்ததால், அவனுக்கு இப்போது விசாரம் செய்வதற்கான அனைத்துத் தகுதிகளும் வாய்க்கக்கூடும்.

72. சீடன்: பாமரன் விஷயத்தில், அவன் முன்பு செய்த சாதனைகளின் சுவடுகள் மறைந்து உறைந்ததாக நின்று இப்போதைய பிறவியில் வெளிப்படுமானால், அவன் முன்பு கற்ற விஷய ஞானங்களும் இப்பிறவியில் ஏன் வெளிப்படவில்லை?

குரு : அவனது முந்தைய கர்மங்களில் சில தற்போது அவனது புலமை வெளிப்படுவதை மட்டும் மறைத்திருக்கலாம்.

சீடன்: கற்றதை மட்டும் மறைத்தது கற்றதால் அடைந்த சாதனைகளை ஏன் மறைக்கவில்லை?

குரு : கற்றதை மறைத்தாலும், கற்றதால் பெற்ற பலன்களான சாதனைகளை மறைக்க முடியாது. அதனால் அவன் விசாரம் செய்யும் தகுதியை இழக்க முடியாது.

73. சீடன்: கற்றது மறைந்தது போல, அதனால் விளைந்த நான்கு வித சாதனைகளும் மறைந்திருந்தால் பாமரனின் நிலை என்னவாகும்?

குரு : சாதனைகள் மறைந்து வெளிப்படாது போகுமானால், சாதனைகள் அற்ற பண்டிதனுக்கு நேர்ந்த கதியே பாமரனுக்கும் நேர்ந்து, இருவரும் விசாரத்தைத் தொடங்குவதற்குத் தகுதியற்றவர்களாகவே ஆவார்கள். அதாவது இருவரும் சமநிலையிலேயே நிற்பார்கள்.

74-76. சீடன்: இல்லை, இது சாத்தியம் இல்லை. தற்போதைக்குத் தகுதி இல்லாமல் போனாலும், பண்டிதனுக்கு என்ன செய்யவேண்டும் என்பது இப்போதே நன்கு

தெரியுமாதலால், அவன் அந்த வழிமுறைகளின் படி பயின்று சாதனைகள் செய்து விசாரத்திற்குத் தகுதி பெறலாம். ஆனால் பாமரனோ அவனது முந்தைய பிறவிகளில் எல்லாம் பயின்றும் சாதனைகளை முடிக்காது தோற்றுப் போனவன். அவனுக்கு இப்பிறவியில் முந்தைய பயிற்சிகளும் மறந்திருக்கும்; அவனால் சாதனைகளையும் இப்போது முடிக்க முடியாது என்னும்போது பாமரனால் என்னதான் செய்யமுடியும்? அவனால் விசாரத்திற்கான தகுதியை எப்படிப் பெறமுடியும்?

குரு : அது அப்படி இல்லை. ஆன்ம வேட்கை மிகுந்து உள்ள பாமரன் ஒருவன் தகுதி வாய்ந்த குருவை நாடி, அவரிடம் அடைக்கலம் புகுந்து, சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள அனைத்தையும் கற்றுக்கொண்டு ஆன்ம விசாரத்திற்கான பயிற்சிகளை மேற்கொண்டு, இறுதியில் சாதனைகளைப் பூர்த்தி செய்யலாம். சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள எதனையும் அறியாத, ஆனால் மேலுலகப் பதவி வேண்டி ஆசைப்படும் சாதாரண மனிதன் ஒருவன் எவ்வாறு ஒரு குருவை நாடி, அவரைப் பூஜித்து, அவருக்கு வேண்டிய பணிவிடைகள் எல்லாம் செய்து, ஒழுக்கத்துடன் வாழ்ந்து இறுதியில் தான் விரும்பியதை அடைவானோ, அவ்வாறே ஒரு குருவை நாடி முயற்சிக்கும் பாமரன் ஒருவனுக்கும், அனைத்தும் அறிந்த ஒரு பண்டிதனுக்கு நிகழ்வது போலவே, சாதனைகளில் வெற்றி கிடைக்கும்.

77-78. சீடன்: மதச் சடங்குகள் பயிலும் ஒருவனுக்கு அவனது கர்ம சிரத்தைக்கு ஏற்றபடியே பலன்கள் கிடைக்கின்றன. பரமார்த்திகப் பேருண்மையை நாடிச் செல்லும் ஒருவன் அதில் தீவிரமாக இருந்தால் மட்டுமே அவனது குருவின் வழிகாட்டுதல் அவனுக்குப் பயன் தரும். வேண்டிய தீவிரம் ஒருவனுக்கு இல்லையென்றால் அது எப்படிப் பயனைக் கொடுக்கும்?

குரு : ஆற்றப்படும் கர்மத்தின் பலன்களை அனுபவிப்பதற்கு அதன் கர்த்தாவின் தீவிரம் எவ்வாறு ஒரு முக்கிய அம்சமாக இருக்கிறதோ, அதே போல ஒரு பண்டிதன் அல்லது ஒரு குருவின் சீடன் பயில்கின்ற சாதனைகளின் தீவிரத்திற்கு ஏற்றவாறே அவைகளின் பலன்களும் அமைகின்றன. தீவிரம் இல்லாது போனால் கர்மமோ, சாதனையோ வெற்றிகரமாக முடியாது. பண்டிதனோ பாமரனோ எவரானாலும் அவரவர் சிரத்தைக்கு ஏற்பவே கர்மத்தின் பலன்களை அவர்கள் அனுபவிக்க முடியும். வேதங்கள் அல்லது குருவைப் பொருத்தவரை, எந்த விஷயங்கள் ஆனாலும் சிரத்தை இல்லாதவரைப் பற்றி மேற்கொண்டு பேசுவதற்கு எதுவுமே இல்லை.

79. விசாரத்திற்கு வேண்டிய தகுதியை இதுவரை அடையாத பண்டிதனோ, பாமரனோ அவைகளை இனிமேலாவது அடைந்து முக்தியை நாடிச் செல்ல வேண்டும் என்ற ஆர்வம் கொண்டிருந்தால், அவர்கள் அதற்கான சாதனை வழிகளைத் தீவிரத்துடன் பயில்வதற்கு

உடனடியாகத் தொடங்கி, அதில் வெற்றி காணவேண்டும். அதன் பின்னரே அவர்கள் ஆன்ம விசாரத்திற்கானத் தகுதியைப் பெறுவார்கள். அதனால் பண்டிதனுக்கும், பாமரனுக்கும் இடையே எந்தவிதமான வித்தியாசமும் காணமுடியாது.

80. சீடன்: அப்படியானால், ஆன்ம விசாரத்திற்கான தகுதியைப் பொருத்தமட்டும், ஒரு பண்டிதன் பாமரனிடம் இருந்து எவ்வாறு வேறுபடுகிறான்?
குரு : கற்றுக்கொள்ள வேண்டியவைகளில் மட்டுமே அவர்கள் இருவரும் வேறுபடுகிறார்கள்; சாதனை வழிகளிலோ அல்லது விசாரத்திலோ அல்ல.

81-82. சீடன்: இல்லை, அது அப்படி இருக்க முடியாது. கற்பது என்பது சாதனை வழிகளைப் பாதிக்காது என்றாலும், அது கற்றறிந்த பண்டிதருக்கு ஆன்ம விசாரத்தில் சாதகமாகத்தானே இருக்க முடியும்.
குரு : அது அப்படி இல்லை. சாஸ்திரங்களைப் பற்றிய அறிவு ஆன்ம விசாரத்திற்கான வழி அல்ல. வைராக்கியம் போன்றவைகளே அதற்கான வழி. அவைகளே ஆன்ம விசாரத்திற்கான தகுதியை அளிக்கிறதே தவிர, சாஸ்திர ஞானம் ஒரு பொருட்டே அல்ல. அதனால் விசார மார்க்கத்தில் பண்டிதராய் இருப்பது பாமரனாய் இருப்பதை விட எந்த விதத்திலும் கூடுதல் நன்மை பயப்பது அல்ல.

83-85. சீடன்: வைராக்கியம் போன்றவைகளே ஆன்ம விசாரத்திற்கான தகுதியை அளிக்கிறது என்றே வைத்துக்கொண்டாலும், அதற்குத் தேவையான சாதனைகள் இருந்தும் அவைகளின் உதவியால் சாஸ்திரங்கள் கூறும் வழியைப் பின்பற்றித்தானே விசாரத்தைத் தொடரவேண்டும். அதனால் சாஸ்திர ஞானம் வெற்றிகரமான விசாரத்தைத் தொடங்குவதற்கு இன்றியமையாத ஓர் அம்சம் அல்லவா?
குரு: அறிவற்ற பேச்சு அது! ஆன்ம ஞானம் அடைவதற்கு சாஸ்திர ஞானம் அவசியமே இல்லை. ஆன்மாவை அறிவதற்கு எவராவது அதை சாஸ்திரங்களில் தேடுகிறார்களா? நிச்சயமாக இல்லை.
சீடன்: ஆன்மாவைப் பற்றி முன்னதாகவே அறிந்திருந்தாலொழிய அதைப் பற்றித் தெரிந்துகொள்ள சாஸ்திரங்களின் துணை தேவையில்லை. ஆனால் சாதகன் தனது உண்மை நிலையை அறியாதவொரு மயக்கத்தில் இருக்கிறான். அவ்வாறான பாமரன் ஒருவன் ஆன்மாவைப் பற்றிய விளக்கங்கள் தரும் சாஸ்திர அறிவு இல்லாமல் ஆன்மாவை எவ்வாறு உணர முடியும்? அவனால் அது முடியாது என்பதால் அவன் ஆன்மாவைப் பற்றி அறிந்துகொள்வதற்கு சாஸ்திர ஞானம் ஒரு முன்னணித் தேவை என்றாகிறது.

குரு : அது உண்மையென்றால் ஆன்மாவைப் பற்றிய அறிவும், வேதங்கள் கூறும் சொர்க்கம் போல, இன்னுமொரு விளக்கம் என்றாகும். அதாவது ஒருவனின் நேரடி அனுபவமாக இல்லாது அது ஒரு மறைமுகமான விளக்கம் போல இருக்கும். அந்த அறிவு படித்து, கேட்டுப் பெறும் அறிவு போல அமையுமே அல்லாது ஒருவனது சொந்த அனுபவமாக இருக்காது. நான்கு கைகளைக் கொண்ட பகவான் விஷ்ணுவைப் பற்றிய நமது அறிவு ஒரு நேரடியான அனுபவமாக இல்லாது படித்து அறியப்பட்ட மறைமுகமான அறிவாக இருப்பது போலவும், இந்த உலகில் நமக்கு சொர்க்கத்தைப் பற்றிய அறிவு நிச்சயமாக ஒரு மறைமுக அறிவாக இருப்பது போலவும், சாஸ்திரங்களின் மூலம் பெறப்படும் பிரம்மம் அல்லது ஆன்மாவைப் பற்றிய அறிவும் ஒரு மறைமுக அறிவாக மட்டுமே இருக்க முடியும். அதாவது ஒருவன் எந்த அளவிற்கு அறியாமையோடு இருந்தானோ அந்த நிலையிலேயே அவனது மறைமுகமாக பெறப்பட்ட அறிவும் அவனை விட்டுவைக்கும். அனுபவத்தால் பெறப்படும் அறிவே உண்மையானதாகவும், உபயோகம் உள்ளதாகவும் விளங்கும். பிரம்மம் எனப்படுவது அனுபவபூர்வமாக உணரப்பட வேண்டியதே தவிர, பேசப்பட்டோ கேட்கப்பட்டோ அறியப்படுவது அல்ல.

86-88. *சீடன்: அவ்வாறு யாராவது கூறியிருக்கிறார்களா?*

குரு : "தியான தீபிகா" என்னும் நூலில் ஸ்ரீ வித்யாரண்யஸ்வாமி கூறியிருக்கிறார். சாஸ்திரங்கள் கூறுவது போல நான்கு கைகளையும், சங்கு சக்ரம் முதலானவைகளையும் கொண்ட விஷ்ணு என்னும் உருவகத்தைப் பற்றிய நமது அறிவு மறைமுகமானதே தவிர நாம் நேரிடையாக அனுபவித்துத் தெரிந்து கொள்வது என்பது சாத்தியம் அல்ல. உருவத்தைப் பற்றிய அந்த விளக்கம் நாம் விஷ்ணுவைப் பூஜிக்க உதவுகிறதே தவிர, அந்த உருவத்தை நம்மால் நேரிடையாகக் காணமுடியாது. அதேபோல சாஸ்திரங்கள் பிரம்மத்தைப் பற்றி சத்-சித்-ஆனந்தம் என்று கூறும் விளக்கமும் நமக்கு ஒரு மறைமுகமான அறிவைத் தருமே ஒழிய அது பற்றிய அனுபவத்தைத் தர முடியாது; அறிவும் அனுபவமும் ஒன்றல்ல. ஏனென்றால் பஞ்ச கோசங்களைச் சாட்சியாகப் பார்த்துக்கொண்டு இருந்து, ஒவ்வொருவரும் தனிப்பட்ட அளவில் தன்னைத் தானாக உணரவைக்கும் மூலத்தையே பிரம்மம் என்று கூறுகிறோம். அதை ஒருவன் தன் அனுபவத்தில் உணரவில்லை என்றால் பிரம்மத்தைப் பற்றிய மேலெழுந்த வாரியான அறிவு மட்டுமே அவனுக்கு சாஸ்திரங்கள் மூலம் கிடைத்திருக்கிறது என்றுதான் அர்த்தம். அவ்வாறு பெறப்படுவது மறைமுக அறிவே.

*சீடன்: விஷ்ணுவோ, சொர்க்கமோ ஆத்மாவிற்கு வெளியே இருப்பதால் அவை வஸ்துக்களாக அறியப்படுகின்றன. ஆனால் என்றும் இருக்கும் ஆன்மா தானாகவே*

இருப்பதாலும், அதைப் பற்றிய அறிவு ஒருவேளை புதியதாகவே அடையப்பட்டிருந்தாலும் கூட, அது நேராகப் பெறப்பட்டதாக இருக்கும். அது மறைமுகமாக அடையப்பட்டது அல்ல.
குரு : ஒவ்வொருவனின் உள்ளிருப்பது பிரம்மமே என்ற பொருளைத் தரும் வாக்கியமான “தத் தவம் அஸி” என்பதை வேதாந்தம் நமக்கு நேரிடையாகவும், இயல்பாகவும் எடுத்துரைத்தாலும், அந்த ஆத்மாவை நாம் உண்மையில் உணர்வதற்கான வழி ஆன்ம விசாரம் ஒன்றே. சாஸ்திர ஞானம் அதைப் பற்றிய மறைமுக அறிவை மட்டுமே கொடுக்கும் என்பதால் அது போதுமானது அல்ல. ஆன்ம விசாரம் செய்வதால் அதை நாம் நேரடி அனுபவத்தில் உணரமுடியும் என்பதால் அதுவே சரியான வழி.

89-90. அவ்வாறே வசிஷ்ட முனிவரும் கூறியிருக்கிறார். சாஸ்திரங்களைக் கற்பது, குருவை நாடுவது, உபதேசம் பெறுவது என்பதெல்லாமே வழிவழி வந்த முறைகளே அன்றி அந்த முயற்சிகள் எதுவுமே சாதகனுக்கு ஆன்மாவைப் பற்றிய நேரடி அனுபவத்தைக் கொடுக்கும் வழிகள் அல்ல. விசாரம் செய்யும் சாதகனின் மனம் தூய்மையாக இருக்க வேண்டும் என்பது ஒன்றே முக்கியமே அன்றி சாஸ்திரமோ, குருவோ அல்ல. ஒருவனது தீவிர விசாரத்தினால் மட்டுமே ஆன்மாவை உணர முடியும்; அதற்கு வேறு வழிகள் எதுவும் கிடையாது. எல்லா சாஸ்திரங்களும் இந்த உண்மையை ஒத்துக்கொள்கின்றன.

91. பிரம்மத்தை உணர்வதற்கு ஆன்ம விசாரம் செய்வதன்றி வேறு உபாயங்கள் கிடையாது என்றும், வேதாந்த அறிவு கூடக் கை கொடுக்காது என்றும் இதுவரை நாம் பார்த்ததில் இருந்து தெளிவாக அறிகிறோம்.

92. சீடன்: சாஸ்திரங்களை நன்கு ஆராய்ந்து கற்றறிந்த பின்பே பிரம்மத்தை உணர வேண்டும். ஏனென்றால் ஆன்ம விசாரம் என்பதே சாஸ்திரங்களைப் பற்றிய நுண்ணறிவுதானே?

93. குரு : நமது உடல், ஐம்புலன்கள் இவற்றின் மூலம் நம் உள்ளிருந்து “நான்” என்னும் எண்ணம் எழுகிறது. இந்த நான் அல்லது ஆன்மா என்ன என்பதை அறிவதற்கு ஐந்து கோசங்களுக்குள் அடங்கியுள்ள “நான்” எனும் நமது இருப்பை ஒருமுகப்படுத்திய மனத்தால் உண்முகமாக நம்மை நோக்குவதே ஆன்ம விசாரம். வேத மந்திரங்களை ஓதியோ, அல்லது அந்த வார்த்தைகளின் அர்த்தங்களைப் புரிந்துகொள்வதற்காக அதை ஆய்ந்து படித்தோ ஆன்மாவை அறிந்துகொள்ள முயற்சிப்பது ஆன்ம விசாரம் அல்ல. ஒன்றாகக் குவிந்து, உள்நோக்கிய மனத்தால் ஆன்மாவின் தன்மையை ஆய்ந்து உணர்வதே ஆன்ம விசாரம்.

94-96. சீடன்: சாஸ்திரங்களைப் படிப்பதன் மூலமோ, அவை கூறுவதைப் புரிந்துகொள்வதன் மூலமோ ஆன்மாவை உணர முடியாதா?

குரு : இல்லை. ஏனென்றால் நனவு, கனவு, மற்றும் ஆழ்நிலை உறக்க நிலைகளை முறையே அனுபவிக்கும் பூத, நுண்ணிய, காரண உடல்களில் இருந்து வேறுபட்டு ஆன்மா சத்-சித்-ஆனந்த மயமாக எப்போதும் இருக்கிறது. வாய் முதலான கரணங்களைப் பயன்படுத்தி ஜெபிக்கப்படும் சாஸ்திர மந்திரங்களாலும், சொல் அலங்காரம், இலக்கணம், தர்க்கம் முதலானவைகளால் வேதங்களை ஆராய்ந்து அவைகளின் பொருளை துல்லியமாக உணர்ந்துகொள்வதாலும் நம்முள் இருக்கும் ஆன்மாவை அறிந்துகொள்ள முடியாது.

சீடன்: அவ்வாறானால் ஆன்மாவை எப்படி அறிந்துகொள்வது?

குரு : நம்மைச் சூழ்ந்துள்ள ஐந்து கோசங்களின் தன்மைகளை மனத்தால் அறிந்துகொண்டு, அவைகள் இன்னின்ன வகை என்று அவைகளை அனுபவத்தில் உணர்ந்து, ஒவ்வொன்றையும் "நான் இதுவல்ல, இதுவல்ல" என்று ஒதுக்கித் தள்ளியதால் பண்பட்டு, நுண்ணியதாக வளர்ந்த மனத்தின் மூலம், ஐந்து கோசங்களுக்கும் அப்பால் இருந்து அவைகளைச் சாட்சியாகப் பார்த்துக்கொண்டிருக்கும் பேருணர்வே ஆன்மா என்பதை அனுபவத்தில் உணர்வதே ஆன்ம விசாரத்தின் முழுமையான மார்க்கம். ஆகவே ஆன்மாவை வெளியே காணமுடியாது. அது ஐந்து கோசங்களுக்குள் அடங்கி உள்ளாழ்ந்து மறைந்து இருப்பது. ஆன்மாவை உணர்வதற்கு, எப்போதுமே வெளியே பார்த்துக்கொண்டிருக்கும் மனம், புத்தியாகிய கரணங்களை உள்ளே திருப்பி ஆன்மாவைக் காணச் செய்யவேண்டுமே அல்லாது, அதை வெளியே சாஸ்திரங்களில் தேட முடியாது. புத்தி சுவாதீனத்துடன் இருக்கும் எவனாவது தனது வீட்டில் தொலைந்துபோன பொருள் ஒன்றைக் காட்டில் போய் தேடுவானோ? பொருள் எங்கே தொலைந்ததோ அங்கேதான் அதைத் தேட வேண்டும். அதைப் போலவே ஐந்து கோசங்களுக்குள் உள்ளாழ்ந்து, காணப்படாது இருக்கும் ஆன்மாவை அவைகளின் உள்ளே தேட வேண்டுமே அல்லாமல் சாஸ்திரங்களில் தேட முடியாது. ஆன்மா இருக்கும் இடம் சாஸ்திரங்களின் நடுவே அல்ல.

97. சீடன்: உண்மையே, ஆன்மாவை சாஸ்திரங்களில் காணமுடியாது. சாஸ்திரங்களில் இருந்து ஐந்து கோசங்களின் தன்மைகளைப் பற்றி அறிந்து, அவைகளைத் தனது புத்தியால் விசாரித்து மேலும் அறிந்து, அவை ஒவ்வொன்றையும் களைந்து எறிந்து ஆன்மாவை நாடி ஒரு பண்டிதன் செல்ல முடியும். ஆனால் ஆன்மாவையோ, கோசங்களையோ பற்றி ஏதும் அறியாத பாமரன் விசார மார்க்கம் செல்வதற்கு என்னதான் செய்ய முடியும்?

குரு : பண்டிதன் எவ்வாறு நூல்களில் இருந்து கற்றுக்கொள்கிறானோ அதேபோல பாமரன் தன் குருவிடம் இருந்து அனைத்தையும் அறிந்துகொள்கிறான். அதன் பின் தொடர வேண்டிய ஆன்ம விசாரம் இருவருக்கும் ஒன்றே.

98-99. சீடன்: அப்படியானால் குரு எனப்படுபவர் பாமரனுக்குத் தேவை, ஆனால் பண்டிதனுக்கு அவசியம் இல்லை என்றாகிறதா?
குரு : **பண்டிதனோ, பாமரனோ இருவருமே குரு இல்லாமல் வெற்றி காணமுடியாது.** ஆதி காலத்தில் இருந்தே, குரு இல்லாது ஆன்மாவை உணரமுடியாத, ஆனால் சாஸ்திரங்களில் கரை கண்ட பண்டிதர்களும் முக்தி மார்க்கத்தில் பயணிப்பதற்காக குருவைத் தேடிக் கண்டுபிடித்தார்கள்; நாரதர் சனத்குமாரரிடமும், இந்திரன் பிரம்மனிடமும், சுகர் ஜனக மஹராஜ் இடமும் அடிபணிந்தார்கள். **குருவைத் தேடிச் சென்றடைந்த எவரிடமும் குரு கருணை காட்டவில்லையென்றால் அவருக்கு முக்தி கிட்டாது.**

100-101. சீடன்: குருவின் அருளாசியால் மட்டுமே முக்தி அடைந்தவர் என்று பாமரர்களில் யாரேனும் ஒருவராவது  இருக்கிறாரா?
குரு : இருக்கிறார். யாக்ஞ்யவல்கிய மகரிஷி தன் மனைவி மைத்ரேயியின் முக்திக்கு அவ்வாறு உதவினார். லீலா, சௌடாலா என்றிவ்வாரான சாஸ்திர அறிவு ஏதுமில்லாத பல பெண்மணிகள் ஜீவன் முக்தியையே அடைந்திருக்கின்றனர். அதாவது சாஸ்திர ஞானம் இல்லாதவர்களும் ஆன்ம ஞானம் பெறத் தகுதி பெற்றவர்கள்தான்.

102-108. என்றும் இருப்பதிலிருந்து இல்லாததைப் பிரித்து உணரும் தன்மையான விவேகத்தால் தீ, வாந்தி, விஷம் போன்றவைகளைத் தவிர்க்கும் குணம் வளர்வது போல, இம்மை மறுமைகளில் இன்பம் தரும் உலகியல் நாட்டங்களை வெறுத்து ஒதுக்கும் வைராக்கியம் என்ற தன்மைகளை அடைந்தவர்களே ஆன்ம ஞானம் பெறத் தகுதியுடையவர்கள் ஆகிறார்கள் என்று இதுவரை நாம் பார்த்ததில் இருந்து நன்கு புரிந்து கொண்டிருக்கலாம். அத்தகைய தன்மை வாய்த்தவர்கள் தினப்படி செயல்களில் இருந்து ஒதுங்கி ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும் ஒருவனைப்போல அமைதியில் இருந்தும், தன்னைச் சுற்றியுள்ளவர்களின் உடல் உபாதைகள், மன உளைச்சல்கள், வலிகள் போன்றவற்றைக் கண்டு அதில் மனம் தாளாமல், அதனால் தனது உடலே தீ வாய்ப்பட்டுத் தவிப்பதுபோல உணர்வதால், தன்னால் ஒரு நிமிஷம் கூட அதைத் தாங்க முடியாத நிலைக்கு வந்து, அதனால் தான் நிம்மதி இல்லாமல் இருப்பதை அறிந்து “எப்போது இதில் இருந்து எனக்கு நிம்மதி

கிடைக்கும்? என்ன செய்தால் எனக்கு இதில் இருந்து விடுதலை கிடைக்கும்?" என்று ஏங்கும் நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள்.

இவ்வாறான தன்மைகளும், அதனால் வரும் நிலைகளும் ஒருவன் தாங்கக்கூடிய அளவிற்கு (**எல்லை**) வந்து முழுமை பெற்றால் அவன் இருப்பவர்களிலேயே தேர்ந்த ஆன்ம சாதகன் ஆகிறான். அதற்கு அடுத்த நிலையில் உள்ள நல்ல சாதகனுக்கு இவைகள் ஓரளவிற்கு வந்து அவனை விசாரத்தில் ஊக்குவிக்கும் (**பாதிப்பு**) அளவிற்கு நேர்கிறது. அதற்கு அடுத்த நடுத்தர நிலையில் உள்ள சாதகனுக்கு அவைகள் விசாரத்தின் தன்மையை (**இயல்பு**) உணரும் அளவிற்கு வந்தமைகின்றன. அதற்கும் கீழே உள்ள தொடக்க நிலையில் உள்ள சாதகனுக்கு அவைகள் விசாரத்தைப் பற்றி நினைக்க வைக்கும் (**காரணம்**) அளவிற்கே வளர்ந்திருக்கும். இந்த நான்கு நிலைகளும் ஆன்ம விசாரப் பயணத்தில் ஒரு சாதகன் அடைந்துள்ள வெற்றியின் அளவைக் குறிக்கின்றன.

109. ஒரு தேர்ந்த சாதகனுக்கு ஆன்ம விசாரத்தில் முழுமையான வெற்றி உடனே கிடைக்கிறது. அடுத்து வரும் நல்ல சாதகனுக்கு இன்னும் சிறிது காலத்திற்குப் பின் வெற்றி வருகிறது. நடுத்தர நிலை சாதகனுக்கு வெற்றி நீண்ட காலத்திற்குப் பின்புதான் வரும். ஒரு நீண்ட காலப் பயிற்சி, மற்றும் தீவிரப் பயிற்சிக்குப் பின்பே தொடக்க நிலை சாதகனுக்கு வெற்றிப்பாதையில் முன்னேற்றம் கிடைக்கும்.

110-112. கடைசி இரண்டு நிலைகளில் இருக்கும் சாதகர்களுக்கு இருக்கும் மனக் குழப்பங்களே அவர்கள் விசாரம் செய்வதற்குத் தடையாக இருக்கின்றன. அவர்களது மனங்கள் யோகம் போன்ற பயிற்சிகளில் அவர்கள் ஈடுபடுவதற்குத் துணையாக இருக்கின்றனவே தவிர ஆன்ம விசாரத்தில் ஈடுபடும் அளவிற்கு இல்லை. ஆனால் முதல் இரண்டு நிலை சாதகர்களும் யோகப் பயிற்சிகளை மேற்கொள்வதை விட ஆன்ம விசாரத்தைப் பயின்று, அதனால் நன்கு பயன் பெறும் நிலையில் இருக்கிறார்கள்.

113-114. "தியான தீபிகா" என்னும் நூலில் ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள் இவ்வாறு கூறுகிறார்: "மனக் குழப்பங்கள் உள்ள சாதகர்கள் ஆன்ம விசாரம் செய்து எவ்விதப் பயனையும் அடைய முடியாது. அவர்களது மனத்தைப் பற்றிய தவறான எண்ணங்களைத் தகர்ப்பதற்கு, அவர்களுக்கு முதலில் யோகப் பயிற்சி தேவையாகிறது. நல்ல தகுதி பெற்ற சாதகர்களின் மனங்கள் குவிந்த நிலையில் ஒருமைப்பட்டு நிற்கின்றன. ஆனாலும் அவர்களது அறியாமையின் மறைக்கும் தன்மையே அவர்கள் ஆன்ம தரிசனம் பெறுவதற்கு ஒரு கடைசித் தடையாக நிற்கிறது. அதிலிருந்து விழித்தெழுவது ஒன்றே அவர்களுடைய கடைசி

முயற்சியாக எஞ்சி நிற்கிறது. விசாரமே அவர்கள் விழித்தெழுவதற்கான உபாயம் என்பதால் அவர்கள் விசாரம் செய்வதற்குத் தகுதி பெற்றவர்களாக இருக்கிறார்கள்.

115-118. எந்தவித அலட்டலும் இல்லாத காலத்தில் நீண்ட, நிதானமான, தீவிர, ஆழ்ந்த, கவனமான பயிற்சியின் மூலமே யோக முறைகள் பயன் தரும்.

சீடன்: இதையெல்லாம் ஒருவன் ஏன் கவனத்துடன் செய்யவேண்டும்?

குரு : ஆன்மாவை நாடி மனத்தை உண்முகமாகத் திருப்பும்போது, மனத்தின் சஞ்சலம் அதிகரித்து சாதகனின் ஐம்புலன்கள் வழியாக அவனை உலகில் உள்ள பொருட்களை நாட வைக்கிறது. அவன் விசாரத்தில் எவ்வளவு தீவிரமாகவும், அதைப் பற்றி நன்கு அறிந்தவனாகவும் இருந்தாலும், அவனது மனத்தின் சஞ்சாரம் அதிகரித்தும், அதில் உறுதியாகவும், கண்மூடித்தனமாக எதையாவது பின்பற்றிக்கொண்டும் இருந்து, கட்டுக்குள் அடங்காததாகவும் இருக்கும். இயல்பாகவே அலைபாயும் மனமாக இருப்பதால், அது எந்தப் பொருள் ஒன்றையும் பற்றிக்கொண்டு அத்துடன் நிற்காது, இங்குமங்கும் அலைந்துகொண்டு, கீழே காணப்படும் பொருட்களுடன் சில சமயத்திலும், ஆனால் நொடியில் பறந்து உயரத்தில் இருக்கும் வேறெதனுடனும் கலந்து ஒரு குரங்கைப் போலத் தாவி அலைந்துகொண்டே இருக்கும். அதை ஓரிடத்தில் நிற்க வைக்க முடியாது. அதனாலேயே ஒருவன் கவனமாக இருக்க வேண்டும்.

119-121. “ஓ, கிருஷ்ணா! எப்போதுமே மனம் ஓரிடத்தில் நில்லாது அலை பாய்ந்துகொண்டு, ஒருவனைப் பாடாய்ப் படுத்துவதாகவும், கட்டுக்குள் அடங்காத வலிமை கொண்டதாகவும் இருக்கிறதல்லவா? மனத்தை அடக்குவதை விட ஒருவன் காற்றைக் கூடத் தன் முஷ்டியில் பிடித்து வைத்துக்கொள்வது எளிதாக இருக்கும்” என்று அர்ஜுனன் கிருஷ்ணரிடம் சொல்வதாக ஸ்ரீமத் பகவத் கீதையில் வருகிறது.

யோக வாசிஷ்டம் எனும் நூலில் ஸ்ரீ ராமர் வசிஷ்ட முனிவரிடம் கூறுகிறார்: “ஓ, குருவே! மனத்தை அடக்குவது கடினம் அல்லவா? மனத்தை அடக்குவதற்குப் பதில், அதையும் விட வேகமாக, ஒருவன் ஏழு கடல்களின் நீரை எளிதாகப் பருகிவிடலாம், மேரு மலையை அலாக்காகத் தூக்கி விடலாம், அல்லது கொழுந்துவிட்டு எரியும் நெருப்பை முழுங்கி விடலாம்”. இவ்வாறாக ராமரும், அர்ஜுனனும் கூறுவதைத் தவிர, நமது அனுபவத்தில் நாமே காண்பது போல, ஒருவன் எவ்வளவுதான் வலிமை மற்றும் திறமை கொண்டவனாக இருந்தபோதிலும் மனத்தை அடக்குவது என்பது அவனுக்கு மிகுந்த சிரமமான காரியமே.

122-124. சீடன்: மனத்தை அடக்குவது அவ்வளவு கடினம் என்றால் ஒருவன் எவ்வாறு யோகப் பயிற்சிகளை மேற்கொள்ள முடியும்?

குரு : வைராக்கியம் மற்றும் தொடர்ந்த கடும் பயிற்சிகளை மேற்கொண்டே மனத்தைக் கட்டுக்குள் வைக்க முடியும். அதையேதான் கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனிடமும், வசிஷ்ட மகாமுனி ராமரிடமும் கூறினார்கள். “குந்தியின் மைந்தனே! மனம் அலை பாய்கிறது என்பதிலும், அதைக் கட்டுப்படுத்துவது கடினம் என்பதிலும் எவ்விதச் சந்தேகமும் இல்லை. ஆனாலும் வைராக்கியம் மற்றும் கடும் பயிற்சிகளினால் மனத்தைக் கட்டுப்படுத்த முடியும்” என்று ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார். “ஓ ராமா! மனத்தைக் கட்டி வைப்பது கஷ்டம் என்றாலும் கைகளைப் பிசைந்துகொண்டோ, பற்களை நறநறவென்று கடித்துக்கொண்டோ நிற்காமல் புலன்களையும், அவயவங்களையும் கட்டுப்படுத்தி வைராக்கியத்தாலும், முயற்சியாலும் மனத்தை வெல்ல வேண்டும். அது ஒருவனின் மனோதிடத்தால் மட்டுமே முடியும்” என்று வசிஷ்டர் ராமரிடம் கூறுகிறார்.

அதனால் அதை அடைவதற்கு சீரிய முயற்சி அவசியம் வேண்டும் என்றாகிறது.

125-127. நமக்குள் எப்போதும் வசித்துக்கொண்டிருக்கும் மனம் எனப்படும் தேனீ, நம் பேரானந்த இதயக் கமலத்தின் அதிமதுரத் தேனை விடுத்து, புலன்களை புறத்தே திருப்பி நமக்கு வெளியே ஒலியாகவும், தொடு உணர்வாகவும், உருவாகவும், சுவையாகவும், மணமாகவும் இருக்கும் மகரந்தத் தூளை விரும்பி அதில் சிக்கிக்கொண்டு இறுதியில் துயரத்தையே அடைகிறது. வைராக்கியத்தால் புலன்கள் அடக்கி வைக்கப்பட்டு, மனமும் உள்நோக்கி இருந்தாலும், அது உள்ளே இருந்துகொண்டே கடந்ததை அசை போட்டுகொண்டும், நிகழ்வதை நினைத்துக்கொண்டும், நடக்கப் போவதை எதிர்பார்த்துக்கொண்டும் ஆகாயக் கோட்டைகளை கட்டிக்கொண்டு இருக்கும்.

சீடன்: அவ்வாறு தொடரும் அதன் நுண்ணிய செயல்களை எப்படி நிறுத்துவது? மனதை எப்படி முழுவதுமாக கட்டுக்குள் கொண்டுவருவது?

குரு : வெளியே செயல்களை நிறுத்தியும், உள்ளே மனத்தை அடக்கியும், மனமாகிய தேனீயை இதயக் கமலத்தின் அதிமதுரத் தேனை - அதாவது ஆத்மாவின் பேரானந்தத்தைப் - பருகச் செய்யவேண்டும்.

128. சீடன்: இந்த யோக முறையைப் பற்றிச் சொல்லுங்கள்.

குரு : முக்தி வேண்டும் என்ற பேராவலில் ஒரு குருவை நாடி, அவரை அடைந்து, எங்கும் நிறைந்து நிற்கும் பரப்பிரம்மமே சத்-சித்-ஆனந்தமாக இருப்பது பற்றி அவர் கூறும் அருள் வாக்கினைக் கேட்டு, விஷ்ணு கடவுளாக இருக்கிறார் என்பதைக் கேட்டு அறிவது போல,

அவர் மூலம் பிரம்மத்தை மறைமுகமாக அறிந்துகொண்டு, அந்தப் பிரம்மத்தைப் பற்றி மட்டுமே ஒருமனதாக சிந்தித்து, மனத்தை வேறெந்த விசாரத்திலும் ஈடுபட வைக்காது, குணங்கள் ஏதுமற்ற, வேறெதுவாகவும் இல்லாது இருக்கும் ஒன்றான சத்-சித்-ஆனந்தத்தைப் பற்றியே தியானித்துக்கொண்டு இருப்பதுதான் யோகம். இவ்வாறு விடாது பயிற்சி செய்தால் மனம் முதலில் அமைதி அடைந்து, பின்னர் மெதுவாக சமாதி நிலையை அடையும். அந்தச் சமாதி நிலையில் மனம் பேரானந்தத்தில் திளைக்கும்.

129-130. சீடன்: வேறெவராவது இவ்வாறு கூறியிருக்கிறார்களா?

குரு : ஆமாம், பகவான் இவ்வாறு கூறியிருக்கிறார்: மனத்தை அடக்கி, அதை ஆன்மாவின்கண் திருப்பி சதா சர்வ காலமும் இருக்கும் யோகி மனவமைதி அடைந்து, இறுதியில் முக்தியின் பேரின்ப வடிவமான என்னையே அடைகிறான். எப்போதும் யோக நிலையில் இருக்கும் யோகியின் மனமானது, சுற்றிச் சூழ்ந்திருக்கும் காற்றால் சிறிதும் பாதிக்கப்படாமல் காக்கப்பட்டிருக்கும் தீபச் சுடர் எவ்வாறு ஆடாது அசங்காது நேராக நிற்குமோ, அவ்வாறே இருந்து சமாதி நிலைக்கு அழைத்துச் செல்லப்படும்.

131-133. அதைப் போலவே, விசாரம் மூலமும் மனம் நிச்சயமாக சாந்தி அடைந்து சமாதி நிலையை அடையும்.

சீடன்: அந்த விசாரத்தைச் செய்வது எப்படி?

குரு : முதலில் சச்சிதானந்தம் என்றும் பிரம்மம் என்றும் கூறப்படுகிற ஆன்மாவின் தன்மையைப் பற்றி குருவிடம் கேட்டு மறைமுகமாக அறிந்துகொள்ள வேண்டும். பின்பு அந்த உபதேசம் காட்டுகிற வழிப்படி சென்றும், தன் அறிவார்ந்த சிந்தனையாலும் தூய அறிவான ஆன்மாவைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டும். அந்த ஆன்மா அல்லாத உலகியல் பொருட்களையும், தன்னுணர்வு என்றேதும் இல்லாத அகந்தையையும் பற்றி நன்கு ஆய்ந்து அறிந்துகொண்ட பின், ஆன்மா மற்றும் ஆன்மாவல்லாதவைகளின் வேற்றுமைகளை அனுபவத்தில் நன்கு உணரவேண்டும். அதன் பின் செய்யப்படுகிற தியானத்தால், தான் அல்லாத பொருட்களை எல்லாம் நீக்கி, அப்போதும் சிறிதே எஞ்சியிருக்கும் மனத்தின் இறுதிப் பகுதியையும் அந்த ஆன்மாவில் சேர்த்து, தானாகிய ஆன்மாவில் மூழ்கித் திளைப்பதே அந்தப் பேரானந்தப் பெருங்கடலை அனுபவித்து உணர்வதாகும். அந்த விவரங்களைப் பற்றி இங்கு ஒரு கோடியே காண்பிக்கப்பட்டிருக்கிறது. சாஸ்திரங்கள் அதைப் பற்றிய முழு விவரங்களையும் தருகின்றன.

134. சாதனை வழிகளைப் பற்றிக் கூறும் இந்த அத்தியாயம் மனத்தை அடக்கும் உபாயமாக விசாரம் மற்றும் யோகம் ஆகிய இரண்டு வழிகளைப் பற்றி விவரிக்கிறது. எவரும் தன் தகுதி நிலையை எடை போட்டு அதற்கேற்ப இருக்கும் இந்த இரண்டு வழிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

135. தற்போது தனக்கு உள்ள தகுதி என்ன, மேலும் எது வேண்டும் என்று எண்ணும் தீவிர சாதகன் தன் கூர்த்த மதியால் அவைகளைப் பற்றி ஆராய உதவும் வகையில் இந்த அத்தியாயம் எழுதப்பட்டிருக்கிறது. இதனால் பயன் பெறும் அந்தச் சாதகன் தான் வேண்டுவதை அறிந்துகொண்டு, இந்த இரண்டு வழிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து இறுதியில் தன் முயற்சியில் வெற்றி காணும் வரை முன்னேற வேண்டும்.

(VERIFY the insertions in Chap.4 Page 64 Slokas 56-58)

## 4. ச்ரவணம்: ஆன்மாவைப் பற்றிக் கேட்டறிவது

1. முந்தைய அத்தியாயத்தில் விசாரத்திற்கான முழுத்தகுதி பெறாதவர்களுக்குப் பொருத்தமானது யோக வழிகளே என்று பார்த்தோம். இந்த அத்தியாயத்தில் எளிதான முயற்சிகளுடன் முக்தியை அடையும் ஆன்ம விசார வழிகளைப் பற்றி விவரமாகக் கவனிப்போம்.

2-4. சீடன்: இந்த விசார வழிதான் என்ன?

குரு: ச்ரவணம், மனனம், நிதித்யாசனம், மற்றும் சமாதி என்ற நான்கு நிலைகளைக் கொண்டது விசார மார்க்கம் என்று சாஸ்திரங்களிலே கூறப்பட்டிருக்கிறது. அவையாவன முறையே உண்மையைக் கேட்டல், கேட்டதைப் பற்றி மேலும் அறிதல், அந்த உண்மை ஒன்றையே தியானித்தல், இறுதியில் பேரின்பப் பெருநிலையை அடைதல் என்றாகும். வேதங்களும் அவ்வாறே அதைப் பற்றி இப்படியாகக் கூறுகின்றன: “அன்பிற்கு உரியவனே! ஆன்மாவைப் பற்றிக் குருவிடம் கேட்கவேண்டும், அதைப் பற்றித் தீவிரமாகச் சிந்திக்க வேண்டும், மேலும் அது ஒன்றையே தியானிக்க வேண்டும்”. அருள் நிறைந்த பேரமைதியில் ஆன்மாவை உணரவேண்டும் என்று இன்னுமொரு இடத்தில் கூறப்பட்டிருக்கிறது. அதையே மறுபடியும் கூறும் வகையில், “வாக்யவிருத்தி” என்ற தனது படைப்பில் ஸ்ரீ சங்கராச்சாரியார் “தானே பிரம்மம்” என்ற வேத மகா வாக்கியத்தின் பொருளை ஒருவன் தன்னில் முற்றுமாக

உணரும்வரை, சிரவணம் முதலான பயிற்சிகளை மேற்கொள்ள வேண்டியது அவசியம் என்கிறார்.

5-7. விசாரமே பேரறிவுக்கான பாதை என்றும், அது உள்ளதைப் பற்றிக் கேட்டறிந்து, அதையே சிந்தித்து, மேலும் அது ஒன்றையே தியானிப்பது என்றும் "சித்ர தீபிகா" எனும் நூலில் ஶ்ரீ வித்யாரண்யா சுவாமிகள் கூறுகிறார். மேலும் அதைப் பற்றிக் கூறுகையில், இருப்பது பிரம்மம் ஒன்றே, மற்றவை எதுவும் அல்ல என்பதை நன்கு உணர்வதால் வருகின்ற பேரின்ப நிலையில் இருக்கும் அறிவே அதன் **இயல்பு** என்றும், அதுவரை தன்னோடு கூடியிருந்த "நான்" எனும் அகந்தை அத்துடன் ஒரு முடிவுக்கு வந்து இனிமேலும் அது தலையெடுக்காது இருப்பது அதன் **பாதிப்பு** என்றும், அறியாமை நிலவும்போது காணப்பட்ட உடலோடு உறுதியாகவும், எவ்விதச் சந்தேகம் இல்லாமலும், அதில் பிழை ஏதும் இல்லை என்ற இறுமாப்புடனும் "நான் உடலே" என்று தன்னை அடையாளம் கண்டுகொண்டிருந்த நிலை போய் அதே உறுதியோடு "நான் ஆன்மாவே" என்று அறிந்துகொண்டு அந்த நிலையில் நிற்றலே அதன் **எல்லை** என்றும், அதனால் வரும் முக்தியே அதன் **பலன்** என்றும் அவர் கூறுவார். ச்ரவணம் முதலானவைகளே ஆன்ம விசாரம் என்பதையே இவை எல்லாவற்றில் இருந்தும் நாம் அறிந்துகொள்கிறோம்.

8-10. பரமார்த்திக உண்மையைப் பற்றிக் கேட்டு, சிந்தித்து, தியானித்து சமாதி நிலையில் நிற்பதே ஆன்மாவை நாடி அடையும் வழி. முன் சொல்லப்பட்ட நான்கு சாதனைகளான விவேகம், வைராக்கியம், கர்மம் ஒழிதல் மற்றும் முக்தியை நாடல் என்பன அதன் காரணங்கள். இவைகளில் எந்தச் சாதனை எந்த நிலையில் கைகொடுக்கும் என்பதை பின்னர் விவரமாக அதற்கான சமயங்களில் காணலாம். தற்போது ச்ரவணம் பற்றிய விவரங்களைக் காண்போம்.

குரு : வேதங்கள் அத்வைத பரப்பிரம்மத்தை உணர்வதைப் பற்றி மட்டுமே கூறுகின்றன என்பதில் ச்ரவணத்திற்கு உரிய பங்கை அதன் ஆறு அம்சங்களின் வழியால் நிரூபணம் செய்யலாம்.

11-12. முதலில் ஐந்து வழிகளைப் பார்ப்போம். முக்தி காண வேண்டும் என்ற வேட்கையாகிய காரணமே ச்ரவணத்தைச் செய்ய வைக்கிறது. எப்போதும் பிரம்மத்தைப் பற்றியே ஒருவனை நினைக்க வைப்பது அதன் இயல்பு. அறியாமையால் விளையும் மறைக்கும் தன்மையால் "பிரம்மம் என்று ஏதும் இல்லை" என்று வளர்ந்த எண்ணத்தை

அடியோடு அழிப்பது அதன் பாதிப்பு. அந்த மறைக்கும் தன்மை இனிமேலும் வருவதைத் தடுப்பது அதன் எல்லை. உறுதியான மறைமுக அறிவைத் தருவது அதன் பலன்.

13. சீடன்: முக்தி காண வேண்டும் என்ற எண்ணமே ச்ரவணத்திற்கான காரணம் என்று எப்படிக் கூற முடியும்?
குரு : "சீவராசிகள் தோன்றுவதற்கும் முன்பாக உள்ள ஊழிக்காலத்தில் அத்வைத பரப்பிரம்மம் ஒன்றே உள்ளது" என்றே மறைகள் கூறுகின்றன. அந்தப் பேருண்மை ஒன்றையே ஆன்மா என்றும் சொல்கிறோம். எவருக்கு முக்தியடைந்து ஆன்மாவில் நிலைகொள்ள வேண்டும் என்ற விருப்பம் இருக்குமோ அவர் மட்டுமே அதைப் பற்றி அறிவதற்கான நாட்டம் கொண்டு, அதைப் பற்றி மேலும் கேட்பதற்கான முயற்சியை மேற்கொள்வார். அவைகளைத் தவிர வேறு யாருக்கும் அவ்வாறு கேட்பதில் நாட்டம் வராது. அதனால் முக்தி காண வேண்டும் என்ற எண்ணமே ஆன்ம விசாரத்தின் முதல் படியாகிய ச்ரவணத்திற்கான ஒரு மிக முக்கியக் காரணமாக அமைகிறது.

14. சீடன்: அத்வைத பரப்பிரம்மத்தைப் பற்றி எப்போதும் கேட்டுக்கொண்டு இருப்பதே ச்ரவணத்தின் இயல்பு என்று சற்று முன்னர் கூறினீர்கள். அந்தப் பரப்பிரம்மம் என்பது என்ன?
குரு : பஞ்ச கோசங்களையும் தவிர, ஒவ்வொருவரின் மூன்று நிலைகளான விழிப்பு, கனவு மற்றும் உறக்கத்தை சாட்சியாகப் பார்த்துக்கொண்டிருக்கும் பூத, நுண்ணிய, மற்றும் காரணம் என்ற மூன்று உடல்களுக்கும் அப்பால் உள்ள பேருணர்வே அந்த ஆன்மா என்று அனைவரும் அறிந்துகொள்ளுமாறு மறைகளில் கூறப்பட்டிருக்கிறது.

15-17. பூத, நுண்ணிய, மற்றும் காரணம் என்ற மூன்று உடல்களுக்கும் அப்பால் வேறென்ன இருக்க முடியும்?
குரு : இந்த மூன்றில் பூதவுடல் எனப்படுவது தோல், இரத்தம், சதை, கொழுப்பு, எலும்பு, நரம்பு மண்டலம், மற்றும் திரவங்களை உள்ளடக்கியது. அதில் வேறு பல நீர்கள் ஊறும்; மேலும் அது கழிவுப் பொருட்ளையும் வெளியே தள்ளும். அதற்குப் பிறப்பும் உண்டு; இறப்பும் உண்டு. அது ஒரு சுவரைப் போல உணர்வற்றது; ஆனால் ஒரு பானையைப் போல புலன்களால் காணப்படும் பொருள் போன்றது.
அந்தக்கரணம் என்று சொல்லப்படுகிற உள்ளுணர்வு கொண்டது நுண்ணிய உடல். அதில் நாம் முதலில் அனுபவித்துக் காண்பது "நான்-நிலை" மற்றும் "இது-நிலை" என்பவைகளுக்கு இடமாக விளங்கும் மனம். அத்துடன் பஞ்ச வாயுக்கள், ஐம்புலன்கள், ஐந்து கர்ம இந்திரியங்கள் மற்றும் அவைகளுக்கான கரணங்கள் உள்ளன. இந்த உடலே வேறு

உடல்களுக்கும், மற்றைய உலகங்களுக்கும் கொண்டு செல்லப்படுகிறது. பூத உடலில் இருக்கும்போது இதுவே இன்பங்களையும், துன்பங்களையும் அனுபவிக்கிறது.

தொடக்கம் என்று ஏதுமில்லாத, இருக்கிறதா இல்லையா என்று சொல்லவும் முடியாத, விவரிக்க இயலாத அறியாமையே பூத மற்றும் நுண்ணிய உடல்களை வெளிப்படுத்தும் காரண உடல் என்று கூறப்படுகிறது.

18. இந்த மூன்று உடல்களுமே ஆன்மாவின் தன்மையில் இருந்து வேறுபட்டனவாகும்.

சீடன்: அது எப்படி?

குரு : பூத உடல் உணர்வற்றது; நுண்ணிய உடலோ வலி மிகுந்தது; காரண உடலோ மாயமான ஒன்று. இவை அனைத்துமே சச்சிதானந்தத் தன்மை கொண்ட ஆன்மாவிற்கு எதிர்மறையானவைகள். அதனால் அவை ஆன்மாவிலிருந்து வேறுபட்டவையாகும்.

19-25. சீடன்: அது எப்படி பஞ்ச கோசங்களில் இருந்தும் வேறானவை?

குரு : கோசங்கள் ஐந்தும் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் எனப்படும். அதில் முதலான அன்னமயம் நாம் உட்கொள்ளும் உணவைப் பொறுத்து வளர்வதால், அது உணவு சார்ந்து இருக்கிறது. அதனால் அது பொருட்களோடு சம்பந்தப்பட்டு பௌதிக அளவில் இருந்து, உடலை வளர்க்கிறது. ஒரு வாளின் உறை வாளை மறைப்பது போல உடல் ஆன்மாவை மறைத்து அதைப் பற்றிய அறிவையும் வளராமல் தடுக்கிறது. அதனால் அன்னமய கோசம் பொருட்கள் அளவிலான ஓர் உறை. அதனால் அதற்கு ஓர் தொடக்கமும், முடிவும் உண்டு. ஆகவே அது என்றும் விளங்கும் ஆன்மா அல்ல.

அடுத்ததாக விளங்கும் பிராண-மனோ-விஞ்ஞானமயங்கள் மூன்றுமே ஒருசேர நுண்ணிய உடல் தொடர்பு கொண்டவைகள். நமக்குப் பிராணன் இருக்கும் வரை, நமது ஐந்து புலன்கள் வழியாகவும், ஐந்து கர்ம இந்திரியங்கள் வழியாகவும் உலகை நாம் காண்பதால், அவ்வாறு காணப்படுபவைகளும் ஆன்மாவை அறிவிக்கும் முறையில் இயங்குவதில்லை. இதுவே பிராணமய கோசம். இது உணர்வற்றதால் இதுவும் ஆன்மா அல்ல.

ஆசை, கோபம் போன்ற உணர்ச்சிகளோடு, நாம் இது-அது என்று பலவற்றையும் நினைத்துக் கொண்டிருப்பதால் அவைகளோடு தொடர்பு கொண்ட நம் மனத்தின் “இது-நிலை”யும், நம்முள் உறைந்து நிற்கும் உணர்வுகளை வெளிப்படுத்தும். நமது ஐந்து புலன்களோடு கூடிய “இது-நிலை”யே மனோமய கோசமாக விளங்குகிறது. உறைந்து இருப்பதை வெளிப்படுத்துகிறதே தவிர இதுவும் உணர்வற்றதால் இதுவும் ஆன்மா அல்ல.

இது-அது என்ற நம் மனத்தின் எண்ணங்களே ஒரு பானையையோ, உடுத்தும் துணியையோ அறிய வைக்கிறது. அதேபோல ‘உடலில் உள்ளது நான்’, அல்லது எனது மனம், என் வீடு,

வாசல், நிலம், சொத்து போன்ற எண்ணங்களுடன் இருப்பதையும் "நான்-நிலை"யின் தன்மை என்கிறோம். அவ்வாறு புத்தியுடன் இயங்கும் நமது ஐந்து புலன்களோடு கூடிய "நான்-நிலை"யே விஞ்ஞானமய கோசமாக விளங்குகிறது. நமது உச்சந் தலையில் இருந்து உள்ளங்கால் வரை உடல் இருப்பதை நாம் உணரும் நமது நனவு, மற்றும் கனவு நிலைகளில் மட்டுமே இந்த நிலை இருந்து, நமது உறக்கம், மற்றும் மயக்க நிலைகளில் இந்த உணர்வு இல்லாது போவதால் இதுவும் ஆன்மா அல்ல.

ஆழ்ந்த உறக்கத்தின் பின் ஒருவன் எழுந்துகொண்டபின், "நான் நினைவே இல்லாது இருந்தேன் - நிம்மதியாகத் தூங்கினேன்" என்று கூறுகிறான். அதாவது அவனுக்கு என்ன நடந்தது என்ற அறியாமையும் இருந்தது; அதே சமயம் அந்த நிம்மதியை அனுபவிக்கும் இன்பமும் இருந்தது. இந்த இன்பத்துடன் கூடிய அறியாமையே ஆனந்தமய கோசம் எனப்படுகிறது. அறியாமை என்பதால் இங்கும் உணர்வு இல்லை என்பதால் இதுவும் ஆன்மா அல்ல.

இதுவரை நாம் பார்த்த ஐந்து கோசங்களும் ஆன்மாவிற்குப் புறம்பானது. ஒரு பானையைப் பார்ப்பவன் பானையில் இருந்து வேறுபட்டு இருப்பது போல, அந்தக் கோசங்களில் அனுபவிப்பவன் என்று இருக்கும் ஒருவன் கோசங்களை விடுத்து வேறாகத்தான் இருக்க வேண்டும். அதில் எந்த சந்தேகமும் இருக்க முடியாது.

26. சீடன்: அந்த மூன்று நிலைகளையும் ஆன்மா சாட்சியாகப் பார்த்துக்கொண்டு இருக்கிறது என்று எப்படிச் சொல்லமுடியும்?

குரு : விழிப்பு, கனவு மற்றும் உறக்கம் என்ற அந்த மூன்று நிலைகளையும் ஜீவன் எனப்படும் "நான்" அல்லது அகந்தை கடக்கும் போது முறையே பூத, நுண்ணிய, மற்றும் காரண உடல்களாகத் தன்னை அறிந்து கொள்கிறது. ஆன்மா எனப்படும் பிரம்மம் அம்மூன்றில் ஒன்றாகவோ அல்லது வேறு எதுவாகவோ இல்லாததால், அந்த மூன்று நிலைகளையும் சாட்சியாகப் பார்க்கும் பேருணர்வாகத்தான் இருந்தாக வேண்டும்.

27. சீடன்: அந்த மூன்று நிலைகளும் ஆன்மாவிற்கு இல்லையென்றால் அவை வேறெதனுடைய நிலைகளாகத்தான் இருக்க முடியும்?

குரு : ஆன்மா அவைகளைப் பொருட்படுத்தாததால், நான் எனும் அகந்தைக்குத்தான் அந்த மூன்று நிலைகளும் இருக்க முடியும். அகந்தையானது விழிப்பு நிலையில் பூதவுடல் கொண்டு ''விஸ்வம்'' என்று உலகியல் பயன்களை அனுபவிப்பவனாகவும், கனவில் நுண்ணிய உடலெடுத்து ''தைஜசன்'' என்று சூக்ஷ்ம பயன்களை அனுபவிப்பவனாகவும், காரண உடல் கொண்டு ''பிரக்ஞன்'' என்று அறியாமையை அனுபவிப்பவனாகவும் இருக்கிறது. அதாவது

அகந்தை அந்தந்த நிலைகளுக்கு ஏற்ற உடல்களை எடுத்துக்கொண்டு அனுபவிக்கிறதே தவிர, ஒரு சாட்சியான ஆத்மாவாக இருப்பதில்லை.

28-29. *சீடன்:* எதை ஆதாரமாகக் கொண்டு மூன்று நிலைகளையும் அனுபவிப்பவன் அகந்தை என்றும் ஆன்மா இல்லை என்றும் கூறுகிறீர்கள்?

குரு : ஆழ்ந்த உறக்கத்தில் அகந்தை முழுதும் செயலற்று இருப்பதால் அங்கு அனுபவத்தையும் காண்பதில்லை; அனுபவிப்பவனையும் பார்ப்பதில்லை. உறக்கத்தில் இருந்து விழித்ததும் எழும் அகந்தைக்கு அவை இரண்டுமே தெரிகிறது. அதிலிருந்து அகந்தையே அனுபவித்திருக்க வேண்டும் என்று ஊகிக்க முடிகிறது. மற்றபடி நனவு மற்றும் கனவு நிலைகள் அகந்தைக்கே வருகின்றன, அவை ஆன்மாவிற்கு அல்ல என்பது கண்கூடு.

சீடன்: அவ்வாறானால் ஆழ்ந்த உறக்கம் யாருக்கு வருகிறது?

குரு : எவ்வாறு அகந்தை “நான் விழித்தேன், நான் கனவு கண்டேன்” என்று அந்தந்த நிலைகளைத் தனதாக்கிக்கொண்டு சொல்லிக்கொள்ளுமோ, அதேபோல உறக்க நிலையையும் கருதி “நான் நன்றாகத் தூங்கினேன்” என்று சொல்வதால் உறக்க நிலையும் அதனுடையதே. “நான் விழித்தேன், கனவு கண்டேன் தூங்கினேன்” என்று சொல்லி தன்னை ஏமாற்றிக்கொள்ளும் அனுபவிப்பவனையும், அவனது மூன்று நிலைகளையும் ஒரு சாட்சிபோல பார்த்துக்கொண்டிருப்பதால் ஆன்மாவிற்கு உறக்கம் இருக்க முடியாது. அதனால் அந்த மூன்று நிலைகளில் எதுவும் ஆன்மாவிற்கு அல்ல.

30-31. *சீடன்:* ஆழ்ந்த உறக்கத்தையும் அனுபவிப்பவன் அகந்தையாக இருக்க முடியாது. அந்த நிலையில் அகந்தை இல்லாததால் அது அனுபவிப்பதாக எப்படிச் சொல்லமுடியும்? நனவிலும், கனவிலும் அகந்தையே அனுபவிப்பவன் என்று சரியாகச் சொன்னீர்கள். ஆனால் ஆழ்ந்த உறக்கத்தில் ஆன்மாதான் அனுபவிப்பவனாக இருக்க வேண்டும்.

குரு : நீ சொல்வது சரியில்லை. பௌதிக மற்றும் நுண்ணிய பொருட்களை அனுபவிப்பதற்காக விஞ்ஞானமய கோசமாக விழிப்பு மற்றும் கனவு நிலைகளில் அகந்தையாக உருவெடுக்கும் ஜீவன், ஆழ்ந்த உறக்கத்தில் மறைந்து போய் ஆனந்தமய கோசமாக ஆகி “எனக்கு ஒன்றுமே தெரியாது…நான் நன்றாகத் தூங்கினேன்” என்று பின்னர் சொல்லும் அளவுக்கு அறியாமையையும், ஆனந்தத்தையும் அனுபவித்திருக்கிறது. உறக்கத்தில் அகந்தை இல்லாதிருந்தால் விழித்ததும் அவ்வாறு முன்பு அனுபவித்ததைச் சொல்ல முடிந்திருக்காது. அனுபவிக்க ஒருவன் இருந்திருந்தால் மட்டுமே அனுபவித்ததைச் சொல்ல முடியும். மற்றவர்களால் அதைச் சொல்ல முடியாது. நினைவுபடுத்திப் பின்னர் சொல்வதற்கும் அனுபவம் இருந்திருந்தால் மட்டுமே முடியும்; அனுபவிக்காததை அப்படிச்

சொல்ல முடியாது. விழித்ததும் அகந்தையே “எனக்கு ஒன்றுமே தெரியாது…நான் நன்றாகத் தூங்கினேன்” என்று சொல்கிறது. அதனால் அனுபவிப்பவன் அகந்தையே அன்றி ஆன்மா அல்ல என்று நன்கு தெளிவாகத் தெரிகிறது.

32-33. சீடன்: அந்த ஆழ்ந்த தூக்கமான ஆனந்தமய கோசமே சாட்சியான பேருணர்வு அல்லாது வேறெதுவாக இருக்க முடியும்?

குரு : ஆனந்தமய கோசம் என்றாலும் அது அறியாமையே; அது அறியாமை என்பது பின்னரே தெரிகிறது. அறிபவர் அறிவை விட்டு வேறாக இருக்க வேண்டும். அவ்வாறான அறிபவர் ஆனந்தத்தை அப்போதே உணர்ந்திருக்கவேண்டும்.

தன்னை ஆனந்தமய கோசம் என்று ஒருவன் நினைத்துக்கொண்டு விட்டாலும், அது அறியாமையே என்பதாலும், அறியாமைக்கு தன்னை அறியும் அறிவு கிடையாது என்பதாலும் அவன் அப்போது அறிவிலியாகவே இருக்கிறான். அந்த அறியாமையாகிய ஆனந்தமய கோசத்திற்கு ஒரு சாட்சி இருப்பதாலேயே அவனால் “அப்போது எனக்கு ஒன்றும் தெரியவில்லை” என்று சொல்லி தான் அதிலிருந்து விலகி நிற்கிறான். அவ்வாறு பார்த்துக்கொண்டிருக்கும் சாட்சிதான் ஆன்மா.

சீடன்: ஆழ்ந்த உறக்கத்தில் சாட்சியை மட்டும் விட்டுவிட்டு, மற்ற அனைத்தும் ஒன்றும் இல்லாமல் மறைகிறது என்பதை நிரூபிப்பதற்கு என்ன அத்தாட்சி இருக்கிறது?

குரு : “சாட்சியின் பார்வையில் எதுவும் தப்பாது” என்று மறைகள் கூறுவதன் அர்த்தமே, இருக்கும் அனைத்தும் மறைந்தாலும் சாட்சியாகிய ஆன்மா எப்போதும் விழிப்புடனேயே இருக்கும் என்பதுதான்.

34-35. சீடன்: சரி, அறியாமை வடிவேயாகிய ஆழ்நிலை தூக்கத்தில் உணரும் ஒருவன் இருக்கிறான் என்பது சரியாகவே அனுமானிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் விழிப்பு மற்றும் கனவு நிலைகளில் விஞ்ஞானமய கோசமே உணர்பவனாக இருந்தால், அதைத் தவிர வேறு ஒரு சாட்சிக்கு அவசியம் இல்லையே.

குரு : அவ்வாறு நீ நினைக்க முடியாது. ஆழ்ந்த உறக்கத்தில் பிரம்மமே அறியாமையை அறிவது போல, மற்ற நிலைகளான நனவு மற்றும் கனவிலும் “நான் கனவு கண்டேன் - விழித்தேன் - சென்றேன் - வந்தேன் - பார்த்தேன் - கேட்டேன் - அறிந்தேன்” என்று புத்தியளவில் சொல்லப்படும் எதற்கும் சாட்சியாக அதுவே இருக்கிறது. அதாவது அறியாமைக்கு சாட்சியாக இருப்பதாகச் சொல்லப்படும் பிரம்மமே அறிவுக்கும் சாட்சியாக இருந்தாக வேண்டும். அதுவும் ஒரு சமயத்தில் அறிபவனாக இருந்துகொண்டு, வேறோர் சமயத்தில் அறியாது இருக்கும் புத்தி ஒரு சாட்சியாக இருக்க முடியாது.

சீடன்: அப்படியானால் புத்திக்கு சாட்சியாக இருக்கும் ஆன்மாவே அனுபவிப்பவராகவும் இருக்கலாம்.

குரு : இல்லை, இல்லை! ஆழ்ந்த உறக்கத்திற்கும், அதை அனுபவிப்பவருக்கும் சாட்சியான ஆன்மா நனவு, கனவு நிலைகளையும் அனுபவிப்பவராக இருக்க முடியாது.

சீடன்: ஆன்மாவே உறக்கத்திற்கும், அதை அனுபவிப்பவருக்கும் சாட்சி என்றால், அது ஏன் நனவு, கனவு நிலைகளை அனுபவிப்பவராகவும் இருக்க முடியாது?

குரு : இல்லை, தூங்குபவன் விழிக்க வேண்டும்; கனவு காண்பவன் அதைக் காணவேண்டும். எப்போதுமே உறங்காது, "நான் தூங்கினேன் - நான் கனவு கண்டேன் - நான் விழித்தேன்" என்று சொல்லும் அனுபவிப்பவனுக்கும், அவனது மூன்று நிலைகளுக்கும் சாட்சியாக இருக்கும் ஆன்மாவுக்கு மூன்று நிலைகளும் கிடையாது; அது அனுபவிப்பவனாகவும் ஆக முடியாது. இதில் எவ்வித சந்தேகத்திற்கும் இடம் இல்லை.

36. சீடன்: ஆன்மா ஒரு சாட்சியாகவும் இருந்து, மூன்று நிலைகளை அனுபவிப்பவனாகவும் ஏன் ஆகக்கூடாது?

குரு : எவ்வாறு சண்டை போட்டுக்கொண்டிருக்கும் இரண்டு பேர்களைச் சாட்சியாகப் பார்த்துக்கொண்டு இருப்பவன் தானும் சண்டையிட முடியாதோ, அவ்வாறே சாட்சியாக இருக்கும் ஒருவன் அனுபவிப்பவனாகவும் இருக்க முடியாது. அதேபோல எவ்வாறு சண்டை போடுபவன் அதை வெறுமனே பார்க்கும் சாட்சியாக இருக்க முடியாதோ, அப்படியே அனுபவிப்பவன் ஒரு சாட்சியாக ஆகமுடியாது. ஆதலால் பிரம்மம் ஒரே சமயத்தில் சாட்சியாகவும், அனுபவிப்பவனாகவும் இருக்க முடியாது.

சீடன்: இதிலிருந்து நாம் என்ன முடிவு செய்கிறோம்?

குரு : பொய்யாகிய "நான்" அனுபவிப்பவன் என்றும், அவனது மூன்று நிலைகளையும் அவைகளை அனுபவிப்பவனையும் தாக்கம் ஏதும் இல்லாமல் பார்த்துக்கொண்டிருக்கும் ஒன்றேயான ஆன்மாவே சாட்சி என்றும் அறிகிறோம்.

37. சீடன்: அவ்வாறானால் அந்த மூன்று நிலைகளுக்கு மூன்று சாட்சிகள் இருக்கிறார்களா அல்லது இருப்பது ஒரேயொரு சாட்சிதானா?

குரு : சாட்சி ஒன்றே, ஆனால் நிலைகள்தான் மாறி மாறி வருகின்றன; சாட்சியாகிய உணர்வு மாறுவதில்லை. பார்க்கப்படும் அனைத்தும், தொடர்ந்து நிலைத்திருப்பதும், நிலைகள் மாறிமாறி வருவதும், இவ்வாறான அனைத்தையுமே அந்த உணர்வு தொடர்ந்து கண்காணிக்கும். அதாவது மூன்று நிலைகளையும் சாட்சியாகப் பார்ப்பது பிரம்மமே. இவ்வாறாக சாட்சியின் தன்மை விவரிக்கப்படுகிறது.

38. இவ்வாறு கூறப்படுவது ஆன்மாவைப் பற்றி நாம் அறியவரும் தன்மையான தடஸ்த லக்ஷ்ணமே. இனி அதனுடைய மூலத் தன்மையான ஸ்வரூப லக்ஷணத்தைப் பார்ப்போம். அதுதான் சத்-சித்-ஆனந்தமாக, ஒன்றே ஒன்றாக, எங்கும் நிறைந்து, எதனாலும் கலப்படம் ஆகாது, முழுமையானதாக, மாற்றம் இல்லாது, இரண்டற்று இருப்பது.

39-41. சீடன்: "சத்" (உள்ளது, இருப்பது) என்றால் அதன் அர்த்தம் என்ன?

குரு : எப்போதும் இருந்துகொண்டு, அதை அடிப்படையாகக்கொண்டு அதன் மேல் படரும் நிலைகளையும், அவை மறைவதையும் ஒரு சாட்சியாகப் பார்ப்பதுதான் "சத்" எனப்படுகிறது. அவ்வாறான நனவு, கனவு, உறக்க நிலைகளுக்கும் மேலாக, முன்பு தோன்றிய (மற்றும் இனியும் தோன்றக் கூடிய) உடல்களின் பிறப்பு, வளர்ப்பு (இளம் பிராயம் முதல் முதுநிலை வரை), இறப்பு என்றனைத்தையும் அது ஒரு சாட்சியாகப் பார்த்துக்கொண்டு இருக்கிறது. இவ்வாறாக அது அனைத்தையும் தொடர்ந்து பார்த்துக்கொண்டிருக்கும்; மேலும் அது என்றும் மாறாத ஒரேயொரு சாட்சியாகும். அதனால் அது என்றும் உள்ளது ஆகும்.

42. சீடன்: அது "சித்" (அறிவு) ஆக இருப்பது என்றால் என்ன அர்த்தம்?

குரு : இருக்கும் அந்த சாட்சி எப்போதுமே இல்லாத "நான்" என்பதற்கும், அதன் மூன்று நிலைகளுக்கும் ஒளி கொடுத்து, வெளிப்படுத்திக் காட்டுவதால் அது அறிவுமயமாக இருப்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

43-46. சீடன்: அது "ஆனந்தம்" என்றால் என்ன அர்த்தம்?

குரு : எப்போதும் எவருமே ஆனந்தமாக இருக்க வேண்டும் என்று விரும்பி, அதை அடைய முயற்சி செய்வதால், இருக்கும் அந்த ஒன்றே பேரானந்தமாகவும் விளங்குகிறது.

சீடன்: அந்த ஆன்மா அல்லாதவைகளும் இன்பம் தராதா?

குரு : இல்லை.

சீடன்: ஏன் அப்படி?

குரு : தானாகவே இன்பம் தராமல், ஒரு கணவனாகவோ, மனைவியாகவோ, குழந்தையாகவோ, செல்வமாகவோ, வீடாகவோ, தடவினால் சுகம் தரும் ஒரு களிம்பாகவோ, மணம் தரும் திரவியமாகவோ ஏதோ ஒரு பொருளாக இருந்து, அனுபவிப்பவன் என்று இருக்கும் ஒருவனுக்கு அந்த ஆன்மா அல்லாதவைகள் இன்பம் தருகின்றன.

சீடன்: அவைகள் தானாகவே ஆனந்தம் கொடுப்பவைகள் என்று ஏன் சொல்லப்படுவதில்லை?

குரு : அவ்வாறு அவை இருந்தால், அவை எப்போதுமே ஆனந்தத்தைக் கொடுக்க வேண்டுமே அல்லாது, ஒரு சமயம் விருப்பமானவை ஆகவும், வேறொரு சமயம் வெறுக்கப்படுபவை ஆகவும் இருக்கக்கூடாது.

சீடன்: அது எப்படி?

குரு : ஒரு பெண்ணையே உதாரணமாக எடுத்துக்கொள். ஒருவனுக்கு அவள் மேல் மையல் இருக்கும்போது அவள் தேவதையாகத் தெரிகிறாள். அவனுக்கு உடல் சுகமாக இல்லாதபோது அவள் தேவைப்படுவது இல்லை. அவனுக்கு அவள் மேல் உள்ள ஆசை தீர்ந்ததும் அவளைக் காணவே அவனுக்குப் பிடிக்கவில்லை. நிலைமைக்கு ஏற்றவாறு ஒரு பெண் விரும்பப்படுகிறாள், தேவையற்றவள் ஆகிறாள், அல்லது வெறுக்கப்படுகிறாள். உலகில் விரும்பப்படுகிற அனைத்துப் பொருட்களும் இவ்வாறே இருக்கின்றன. அதனால் ஆன்மா அல்லாத எதுவும் ஆனந்தம் தர இயலாது.

47. சீடன்: ஆன்மா எப்போதுமே ஆனந்தத்தைக் கொடுக்குமா?

குரு : நிச்சயமாக. அது ஆனந்தம் தரமுடியாத ஒன்று என்று எப்போதுமே அதைப்பற்றி எண்ண முடியாது.

48-49. சீடன்: தாங்க முடியாத வலியினால் அவதிப்படும்போது, ஆன்மாவைப் பற்றிய எண்ணத்தையே விட்டுவிடுவோம். அதனால் ஆத்மா எப்போதுமே ஆனந்தம் தருகிறது என்று எப்படிச் சொல்ல முடியும்?

குரு : வலியினால் அவதிப்படும்போது நமக்கு அன்னியமாக உள்ள வலி விலகவேண்டும் என்று விரும்புகிறோமே தவிர, நம்மை நாமே எங்கு விடுகிறோம்? அதனால் ஆன்மாவை விட்டு நாம் விலகுவதே இல்லை.

சீடன்: அப்போது ஆன்மாவைப் பற்றிய எண்ணத்தை ஒருவன் விட்டுவிடுகிறான்.

குரு : ஆன்மாவை விடுகிறான் என்பது உண்மையானால், அங்கு வேறொன்று இருந்து அதை விடுகிறான் என்றாகும். இல்லையென்றால், விடுவது அவன்தான் என்னும் போது அவன் தனக்கு அந்நியமான உடல் ஒன்றை விடுகிறான், ஆன்மாவை அல்ல என்றே ஆகிறது. (ஏனென்றால் அவன்தான் இன்னமும் அங்கு இருக்கிறானே!). இவ்வாறு உடல் உபாதை போன்றவைகளால் சில சமயம் நேர்கின்ற வெறுப்பினால், ஆன்மா அல்லாத எதுவுமே துன்பம் தரும் என்றும், ஆன்மா ஒன்றே எப்போதும் இன்பம் தருவது என்றும் தெரியவருகிறது.

சீடன்: அது எவ்வாறு நிரூபணம் ஆகிறது?

குரு : ஆன்மா துன்பம் தருவது என்றால், துன்பம் என்றுமே வெறுக்கப்படாது. ஒருவனது உண்மை ஸ்வரூபம் ஆனந்தம் என்பதால், உடல் போன்ற அவஸ்தைகளை வெறுக்கிறோம். இயற்கையான மூல காரணங்களுக்காக அல்லாது, எதேச்சையான வெளிக் காரணங்களால் வரும் வியாதிகளை எவரும் விரும்புவதில்லை. இயல்பாக அவை நேருமானால் அவைகளை யாரும் வெறுக்க மாட்டார்கள். இயற்கையாக இல்லாமல் வெளிக் காரணங்களால் நேரும் வியாதிகளை வெறுப்பது போல, எவருக்கும் உடல் போன்றவைகள் மேல் வெறுப்பு வருவதால், அவைகளும் இயற்கையாக நேர்ந்தது அல்ல என்றும் ஆனந்தமே நமது உண்மையான இயல்பு என்றும் தெரிகிறது. அதனால் உடல் போன்றவைகள் மேல் திடீரென்று வரும் மனக் கசப்பால் அவைகளை விட்டொழித்து விடத் துடிக்கும் ஒருவனுக்குத் தன்னை இழப்பதற்கு மனம் வருவதில்லை. இதனால் உடல் முதலானவைகள் ஆன்மா அல்ல என்று தெரிகிறது. நிலைமை இவ்வாறு இருப்பதால் ஆன்மாவை எவரும் வெறுப்பதில்லை என்பதைக் கண்கூடாக அறியலாம்.

50-51. சீடன்: ஆன்மாவை எவரும் வெறுக்காவிட்டாலும், அது அலட்சிய மனோபாவத்துடன் பார்க்கப்படலாம் அல்லவா?

குரு : இல்லை. எதையும் பொருட்படுத்தாது தானே தானாக இருக்கும் ஆன்மா, தான் அல்லாத கல் அல்லது புல் போன்றவற்றை அலட்சியம் செய்யலாமே தவிர தன்னையே அப்படிச் செய்யாது. அதனால் ஆன்மா எனப்படுவது அவ்வப்போது வெறுக்கப்படும் உடல், பெண் போன்றவைகளையோ, அல்லது அலட்சியம் செய்யப்படும் கல், புல் போன்றவைகளையோ ஒத்ததொரு பொருள் அல்ல. அது எப்போதும் இருந்து, ஆனந்தமே உருவாகி நிற்பது போன்றது.

52-53. சீடன்: ஆன்மா எப்போதும் இன்பமயமாய் இருக்கிறது என்பதுபோல, ஐம்புலன்களால் நுகர்வதும் இன்பம் தருகின்றன என்பதால் அவைகளையும் ஆனந்தம் தருவன என்று எடுத்துக்கொள்ளலாமே.

குரு : வெளியே காணப்படும் பொருள் மூலம் இன்பம் வருகிறது என்பது நீடித்து நிற்காது; அதற்கு மேலும் இன்பம் தரக்கூடிய வேறொரு பொருள் வந்தால் முந்தையது போய் அதனிடத்தில் இது வந்து சேரும். இன்பம் வருவதில் பல தரங்கள் உண்டு; அவற்றுக்கு ஏற்ப பொருட்களும் வந்து போய்க்கொண்டு இருக்கும். பொருட்கள் தரும் இன்பம் நாமாக வரவழைத்துக் கொள்வது; அது நிலையற்றது. அவ்வாறு வருவது நமது மதி மயக்கத்தாலன்றி, அவைகளுக்கு உள்ள இயற்கையான இன்பத் தன்மையால் அல்ல. உதாரணமாக, வேறு ஏதும் உள்ளே இல்லாது காய்ந்துபோய் இருக்கும் எலும்புத் துண்டை ஒரு நாய் கடிக்கும் காட்சியை

எடுத்துக்கொண்டால், அது கடித்துக்கொண்டே இருப்பதால் ஒரு நிலையில் அதன் வாயில் உள்ள புண்களினால் ரத்தம் கசிந்து வரும். அப்போது எலும்புக்குள் உள்ள மஞ்சையில் இருந்து வரும் ரத்தம் அது என்று நாய் நினைத்துக்கொண்டு, அங்கு கசிந்துகொண்டு இருப்பது தன் ரத்தமே என்றும் கூட உணராமல், எலும்பைக் கடிப்பதை அது நிறுத்தாது. அப்போது அது இன்னொரு எலும்புத் துண்டைப் பார்த்தால், தான் கடித்துக்கொண்டு இருப்பதை விட்டுவிட்டு, புதிய எலும்பைக் கடிக்கத் தொடங்கும். அதைப் போலவே தன்னுள் இருந்து வெளிப்படும் ஆனந்தத்தைத் தான் விரும்பும் வெளியுலகப் பொருட்களின் மேல் செலுத்தி, அவைகளால் இன்பம் வருவதாக ஒருவன் தவறாக நினைத்துக்கொள்கிறான்; உண்மையில் ஆனந்தம் அவைகளது இயல்பு இல்லை. துன்பமே அவைகளது இயல்பு என்று இருந்தாலும், அவைகள் தருவது இன்பம் என்று ஒருவன் தன் அறியாமையால் நினைக்கிறான். அப்படியும் அவ்வாறான இன்பத்தைத் தருவது ஒரேயொரு பொருளாக இல்லாமல் ஒன்றுவிட்டு இன்னொன்று என்று மாறிக்கொண்டே போகிறது. அவை தானாக வரவழைப்பட்டது, தராதரம் கொண்டது, மற்றும் தானாகவே இன்பம் தருவதும் அல்ல. இதற்கு மாறாக ஆத்மானுபவ இன்பத்திலோ எந்தத் தவறையும் காணமுடியாது. உடல் போன்ற அவஸ்தைகள் அழிந்து போனாலும், ஆன்மாவில் காணும் ஆனந்தம் என்றும் நிலையானது. மேலும் அதன் இயல்பாலேயே அது ஆனந்தமாக இருப்பது. ஆதலால் ஆன்மா என்றும் பேரானந்தமே. இவ்வாறாக ஆன்மாவின் இயல்பே சத்-சித்-ஆனந்தம் என்று அறியப்படுகிறது.

54. சீடன்: சத்-சித்-ஆனந்தம் என்ற இந்த மூன்றும் பிரம்மத்தின் குணங்களா அல்லது அதன் இயல்பா?

குரு : அவைகள் அதன் குணங்கள் அல்ல; அவையே பிரம்மம். எவ்வாறு நெருப்புக்குச் சூடு, ஒளி மற்றும் சிவப்பு நிறம் அதன் குணங்களாக இல்லாது அதன் இயல்பாக ஒட்டி இருக்கிறதோ அதைப் போலவே சச்சிதானந்தம் என்பது பிரம்மத்தின் இயல்பாக இருக்கிறது.

55. சீடன்: பிரம்மத்திற்கு சத்-சித்-ஆனந்தம் என்ற இந்த மூன்றும் உண்டு என்றால் அவைகளை மூன்று பிரம்மங்கள் என்று கொள்வதா?

குரு : இல்லை. அது ஒன்றேயொன்று தான். எவ்வாறு சூடு, ஒளி மற்றும் சிவப்பு நிறம் என்ற மூன்றும் இருந்தும் நெருப்பு ஒன்றேயொன்றாக இருக்கிறதோ, எவ்வாறு தண்மை, நீர்மை மற்றும் சுவை என்ற மூன்றும் தண்ணீருக்கு இருக்கிறதோ அவைகளைப் போலவே சத்-சித்-ஆனந்தம் என்ற மூன்றும் இருந்தாலும் பிரம்மம் மூன்றல்ல, ஒன்றே.

56-58. பிரம்மம் ஒன்றே என்கிறபோது அது அனைத்திலும் வியாபித்து இருக்கிறது என்று எப்படிச் சொல்ல முடியும்?

குரு : பிரம்மம் ஒன்றே என்று சொல்லப்படுவது சரியே. ஒன்றேயொன்று என்பதாலும், அது அறிவுமயமாக இருப்பதாலும் அது அனைத்திலும் வியாபித்து இருக்கிறது.

சீடன்: ஐந்து கோசங்களுக்குள் உள்ளிருக்கும் பிரம்மமானது அந்த கோசங்களைப் பற்றியும் அறிந்துகொண்டு மேலும் எல்லாவற்றையும் பற்றி அறிந்துள்ளது என்பது எவ்வாறு சாத்தியம்?

குரு : ஆம், அது சாத்தியமே. அனைத்துப் பிரபஞ்சமும் பஞ்ச பூதங்களாலும், அவைகளின் கலவையாலும், அவற்றின் மாற்றங்களாலும் உருவானது என்பதை பிரம்மம் ஒன்றே அறியும். வேறெதற்கும் அந்த அறிவு கிடையாது. மற்ற அனைத்துமே உணர்வற்றவைகள் என்பதால் அவைகளுக்கு அந்த அறிவு கிடையாது. இல்லையென்றால் பானை போன்ற வஸ்துக்களுக்கும் அறிவு இருக்கவேண்டும். ஆனால் உண்மை அவ்வாறு இருக்கவில்லை. பிரம்மம் ஒன்றே அனைத்தையும் அறியும்; மற்றவைகள் அறியாது. அதனால் பிரம்மமே பேரறிவு.

சீடன்: புலன்களின் எல்லைகளுக்கு உள்ளவைகளையே பிரம்மம் அறிகிறது; அதற்கு அப்பால் உள்ளவைகளை அல்ல. மேரு மலையையும், சொர்க்கத்தையும் அது அறியும் வாய்ப்பு எங்கே இருக்கிறது?

குரு: அது எல்லாம் அறியும். உணர்வற்றவைகளாக விளங்கும் ஆன்மா அல்லாதவைகள், எங்கும் பரந்து விரிந்து அறிவுமயமாக இருக்கும் பிரம்மத்தின் வாயிலாகப் பார்க்கத் தகுந்தவைகளாகவும், அவ்வாறு அல்லாதனவாகவும் அறியப்படுகின்றன. அதனால் அந்த அறிவின் வாயிலாக வீடு, நிலம், கிராமம், நகரம், தேசம் போன்றவைகளை ஐம்புலன்கள் மூலமாக காணப்படுவனவாகவும், புலன்களுக்கு அப்பால் உள்ள மேரு, சொர்க்கம் போன்றவைகளை காணப்படாததாகவும் பிரம்மம் அறிகிறது.

சீடன்: புலன்களுக்கு அப்பால் உள்ளவைகளைக் காணமுடியுமா?

குரு : ஆமாம், அதனால் காண முடியும். ஒரு மலடியின் மகன் போல உண்மையில் இல்லாது போனாலும், பரவி விரவி இருக்கும் பேறறிவின்கண் மறைந்து உறையும் மனத்தின் வாசனைகளாக அவை இருப்பதால், வீடு போன்றவைகள் பொருட்களாகக் காணப்படுகின்றன. அதேபோல மேரு போன்றவைகள் உண்மையில் இல்லாது, நேரிலும் காணப்படாவிட்டாலும் மனத்தில் எண்ணங்களாக உருவாகி பேரறிவினால் காணப்படுகின்றன.

சீடன்: அது எப்படி?

குரு : கனவுகளில் சாட்சியாகப் பார்த்துக்கொண்டிருக்கும் உணர்வுக்கு முன்னால், மனத்தில் முன்பே ஏற்றப்பட்டிருந்த வீடு போன்றவைகளைப் பற்றிய எண்ணங்கள் மனத்தளவில்

பொருட்களாகத் தெரிகின்றன. அதைப் போலவே முன்பே காணப்படாத சொர்க்கம் போன்றவைகளும் அவ்வாறே தெரிகின்றன. ஒருவனது விழிப்பு நிலையிலும் அப்படியேதான் தான் நிகழ்கின்றன. இல்லையென்றால் அவன் "எனக்கு மேரு, சொர்க்கங்கள் பற்றித் தெரியாது" என்றெல்லாம் சொல்லமுடியாது. ஆனால் அவன் அவ்வாறு சொல்கிறானே! ( இல்லை, தெரியாது என்றிவ்வாராக ஒன்றைப் பற்றிச் சொல்லும்போதே அந்தப் பொருள் இருக்கிறது, ஆனால் அது பற்றி தனக்குத் தெரியாது என்பதே அதன் நுண்ணிய அர்த்தம்.) அதாவது அவையெல்லாம் புலன்களால் பார்க்கப்படாவிட்டாலும் அவன் அவைகளை ஏதோ சில பொருட்களாக உணர்கிறான். அப்படியாக ஆன்மா அல்லாத உணர்வற்ற பொருட்களையும் ஆன்மாவே உணர்கிறது என்றே தெரிகிறது.

(சீடன்:) ஆன்மா பஞ்ச கோசங்களை ஒரு சாட்சியாக இருந்து காண்பது போல, எங்குமே காணப்படாது இருக்கும் ஒன்றை உள்ளத்தளவில் மட்டும் காண்கிறது என்றால், அந்த ஆன்மாவை எவ்வாறு அனைத்தும் அறிந்த ஒன்று என்று கூறமுடியும்?

(குரு :) நிச்சயமாக அதனால் அவ்வாறு முடியாது. பொருட்கள் அருகிலோ அல்லது தொலைவிலோ இருந்தாலும், உணரக்கூடியதாகவோ அல்லது உணரமுடியாததாகவோ இருந்தாலும், முன்பே தெரிந்ததாகவோ அல்லது தெரியாததாகவோ இருந்தாலும் தன்னளவில் மனமே அவைகளை நினைக்க முடியும். ஆன்மா எனும் பேருணர்வே மனத்தையும் தாங்கும் அடித்தளமாக இருப்பதால் மனத்திற்குத் தெரிவது ஆன்மாவுக்கும் தெரிந்ததாகவே ஆகிறது. இவ்வாறாக ஆன்மாவே எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது. அதனால் ஆன்மாதான் அனைத்துள்ளும் இருக்கிறது என்பதில் எந்த சந்தேகமும் வேண்டாம்.

59. சீடன்: ஆன்மா எங்கும் நிறைந்திருக்கிறது என்பதால், அது அனைத்துடனும் இணைவதாகி, அதனால் கறை படிந்ததாக இருக்க வேண்டுமே.

குரு : இல்லை. அது ஆகாயம் போல இருப்பதால் எதனுடனும் கலக்காது, தனித்தே இருக்கிறது. ஆகாயம் போலக் கறைபடாததாக மட்டும் இல்லாது, அதற்கும் மேலாக அது அனைத்தையும் அறிந்துள்ள ஒரு பேருணர்வாகவே இருக்கிறது. அதனாலேயே மறைகளும் "இந்தப் புருஷன் நிச்சயமாகக் கறைபடாதவன்" என்றே கூறுகின்றன.

60. சீடன்: எதனுடனும் கலக்காது, அதனால் கறைபடாததாவும் உள்ள அது, அனைத்தையும் கடந்து, தனித்திருந்து, எதையும் பொருட்படுத்தாததாக இருப்பதால், அந்த ஆன்மா குறைபாடுகள் கொண்டதாய் இருக்க வேண்டும்.

குரு : இல்லை. அதைப் போன்றதாகவோ, அல்லது அதனிலும் வேறாகவோ ஏதும் இல்லை; அதனுள் வெவ்வேறு பகுதிகள் என்று ஏதும் கிடையாது. அதன் உட்புறம் அல்லது

வெளிப்புறம் என்று பகுக்க முடியாத ஒன்றாக அது இருக்கிறது. அது முழுமையான ஒன்று. எங்கும் நீக்கமற நிறைந்தாலும் எதனுடனும் கலக்காது அது ஆகாயம் போல இருக்கிறது.

சீடன்: எங்கும் இருந்து, அதே சமயம் எதனுடனும் இல்லாது எவ்வாறு அது இருக்க முடியும்?

குரு : இங்கங்கு எனாது எங்கும் இருந்து, அது ஆகாயம் முழுதும் நிறைந்து நிற்கிறது. காலத்தால் இன்று, அன்று என்றில்லாது, என்றும் உள்ளது அது. ஆன்மாவைத் தவிர்த்து என்று ஏதும் இல்லை; அது ஒன்றே உள்ளது, அல்லது இருக்கும் அனைத்திலும் அது இருப்பாக உள்ளது. அதனால் அது எதனாலும் பகுக்கப்படாது இருக்கிறது. எதனாலும் அல்லது அந்த மூன்று நிலைகளாலும் பகுக்கப்படாது, எங்கும் நிறைந்திருந்து ஒரு முழுமையான ஒன்றாக விளங்குகிறது. இவ்வாறாக அதன் முழுமை நிரூபணம் ஆகிறது.

61. சீடன்: எங்கும் இருக்கும் ஆகாயம் போல ஆன்மா நிறைந்திருக்கிறது என்றால் அது மாறுபாடுகளைக் காணக்கூடியது என்றாகிறது.

குரு : இல்லை. உருவாக்கப்பட்டிருக்கும் ஆகாயம், வாழ்வு, பிறப்பு, வளர்ச்சி, மாற்றங்கள், தேய்நிலை, இறப்பு உள்ளிட்ட அனைத்துக்கும் சாட்சியாக இருக்கும் ஆன்மாவுக்கு மாற்றங்கள் இருக்க முடியாது. அப்படி இருக்குமானால் அதுவும் பிறந்து, வளர்ந்து, இறந்து போகவேண்டும். அவ்வாறாக அதுவும் உணர்வற்றவை எனும் ரகத்தோடு சேர்க்கப்பட வேண்டும். அப்படி அதுவும் உணர்வற்றது என்றால் எவ்வாறு “தான்” என்ற உணர்வுகொண்டதாக இருக்க முடியும்? மாறாக அது ஒன்றே பிரபஞ்சத்தின் பிறப்பு, வளர்ச்சி, மாற்றங்கள் அனைத்துக்கும் சாட்சியாக இருக்கிறது. மேலும் அது வேறு எதனுடனும் கூட்டு சேர்வதும் இல்லை. அதனால் அது மாற்றங்கள் காணாது இருக்கும்.

62-63. சீடன்: எப்போது ஆன்மா மாறுதல்கள் அற்றது எனப்படுகிறதோ, அப்போதே ஆன்மாவல்லாதது மாறுதல் காண்பது என்றே அர்த்தம் ஆகிறது. அதேபோல ஆன்மா இரண்டற்ற அத்வைதம் என்றால், மாறுதல்களைக் காண த்வைதப் பொருளும் இருந்தாகவேண்டும் என்றும் ஆகிறது.

குரு : இல்லை. ஆன்மாவைத் தவிர வேறெதுவும் இல்லை. அது இரண்டற்றது. ஆன்மாவல்லாதது ஆன்மாவைத் தவிர்த்து வேறாக ஒன்று இல்லாது இருந்தால் அப்போது த்வைதம் என்ற பேச்சுக்கே இடமில்லை.

சீடன்: எவ்வாறு ஆன்மாவல்லாதது, ஆன்மாவில் இருந்து தனித்து இல்லாது, ஆன்மாவாக முடியும்?

குரு : ஆன்மாவே அனைத்துக்கும் மூலம். பலன் எனப்படுவது அதை விளைத்த காரணத்தில் இருந்து வேறானது அல்ல. அவை இரண்டும் அடிப்படையிலேயே வேறுபட்டன என்று நாம்

பார்ப்பதில்லை. எல்லாவற்றிற்கும் அதுவே காரணமாக இருப்பதால், ஆன்மாவே அனைத்தும் என்றாகிறது. எதுவும் அதில் இருந்து வேறுபட்டு இருப்பதில்லை.

64-66. சீடன்: எல்லாவற்றிற்கும் ஆன்மாவே மூல காரணம் என்று எப்படிச் சொல்லமுடியும்?
குரு : எல்லாவற்றையும் அது பார்த்துக்கொண்டு இருப்பதால் அதுவே அனைத்துக்கும் காரணம்.
சீடன்: எவ்வாறு பார்ப்பவன் ஒருவன் காரணமாக இருக்க முடியும்?
குரு : மாயங்கள் அனைத்துக்கும் பார்ப்பவன் மட்டுமே காரணம் எனப்படுகிறது. முத்துச் சிப்பியை வெள்ளியாகப் பார்த்தால், அதற்குக் காரணம் பார்ப்பவனே. அதேபோல கனவுக் காட்சிகள் கனவு காண்பவனிடமே தொடங்குவதால் அதற்கும் அவனே காரணம். அதைப் போன்றதே விழித்து இருக்கும்போது காணப்படும் காட்சிகள் அனைத்தும்; அவை எல்லாவற்றுக்கும் காண்பவனே காரணம்.
சீடன்: உலகே மாயம் என்றால் நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான்; உலகம் வெறும் மாயம்தான் என்பது சரியா?
குரு : முதலாவதாக, மறைகளின் கூற்றுப்படி ஊழிக்காலத்தில் எஞ்சி நிற்பது ஒன்றேயான பிரம்மமே. அதன்பின் உயிர்கள் உருவாகும்போது, எவ்வாறு மங்கலான ஒளியில் இருக்கும் கயிறு ஒன்றின் மேல் பாம்பாகிய உருவமும், பெயரும் ஏற்றப்பட்டு வருகிறதோ அதேபோல, பிரம்மத்தை அடித்தளமாகக்கொண்டு மாயை பலப்பல பெயர்களையும், உருவங்களையும் உருவாக்குகிறது.
இரண்டாவதாக, கனவில் வரும் பொய்த் தோற்றங்களைப் போல உலகம் தோன்றுவதும், மறைவதுமாக இருக்கிறது என்பதில் இருந்து உலகின் மாயத் தன்மை நம் அறிவுக்கு எட்டுகிறது.
மூன்றாவதாக, காணும் இவ்வுலகம் பொய்யே, காணும் பிரம்மம் ஒன்றுதான் மெய்யே என்று ஞானிகளும் தங்களது அனுபவத்தில் கண்டு உணர்ந்து கூறியிருக்கிறார்கள்.
ஆதலால் பிரபஞ்சம் அனைத்தும் உண்மையில் மாயமே. அதனால் ஆன்மாவின்கண் காணப்படுகிற உலகம் மாயையே என்பதற்கு அவ்வாறு சாட்சியாக இருந்து, அதைக் காணும் ஆன்மாவே அதன் முழு முதற் காரணமாக இருக்கிறது என்று இப்போது நாம் உறுதியாகக் கூறலாம். மாயமாகத் தெரிவதை அதன் அடித்தளத்தில் இருந்து தனியாகப் பிரிக்க முடியாது. எவ்வாறு நுரை, குமிழிகள், அலை என்பனவெல்லாம் அவைகளின் அடிப்படை மூலமான கடலைத் தவிர்த்து வேறானவைகள் அல்லவோ, அவ்வாறே பிரபஞ்சத் தோற்றங்கள் எல்லாம் ஆன்மாவைத் திரித்துக் காட்டப்படும் காட்சிகளே. ஆகையால் ஆன்மா அத்வைத பரம்பொருளே; இரண்டு என்று சொல்வதற்கு வேறொன்றும் இல்லை.

67. குருவின் முன்னிலையில் இருந்துகொண்டு, சதா சர்வகாலமும் இருப்பு எனும் அத்வைத பிரம்மத்தைப் பற்றிக் கூறும் வேதாந்த சாஸ்திரங்களைக் கற்றறிந்து, அதன் பொருளை உள்வாங்கி இருப்பதே ச்ரவணம் எனப்படுகிற கேட்டறிவதன் **இயல்பு** ஆகும். இதை ஒருவன் செய்தே ஆகவேண்டும்.

68. சீடன்: ச்ரவணத்தின் பாதிப்பு என்ன?

குரு : "இந்த அத்வைதமான ஆத்மா எங்கிருக்கிறது? எங்குமே இல்லை" என்று ஒருவனைச் சொல்லவைத்த அவனது அறியாமையின் மறைக்கும் தன்மையை ச்ரவணம் முடிவுக்குக் கொண்டு வருகிறது. இவ்வாறாக அத்வைத பரம்பொருள் இல்லை என்று அறியாமையால் விளைந்த தீர்வை அழிப்பதே அதன் **பாதிப்பு.**

69-70. சீடன்: எவ்வளவு காலத்திற்கு ச்ரவணம் செய்யப்படவேண்டும்?

குரு : அத்வைத பரம்பொருள் இல்லை என்று அறியாமையால் முன்பிருந்த சந்தேகம் மீண்டும் தலைதூக்காமல் இருக்கும் வரை செய்யப்படவேண்டும். அந்தச் சந்தேகம் மீண்டும் வராது இருப்பதே ச்ரவணம் செய்யும் முறையின் **எல்லை** எனப்படுகிறது.

சீடன்: அந்தச் சந்தேகம் ஒருமுறை நீக்கப்பட்டுவிட்டால் மீண்டும் வருமா?

குரு : ஆமாம், அது முடியும்.

சீடன்: எப்படி?

குரு : மறைகளின் பல பகுதிகளிலும் த்வைதம் பற்றிப் பேசப்பட்டுள்ளது; அதைப் பற்றிய நிரூபணமும் கொடுக்கப்பட்டுள்ளது என்று தவறுதலாக நம்பப்படுகிறது. உதாரணத்திற்கு விஷ்ணுவைப் பற்றி சாஸ்திரங்கள் கூறுவதை ஒருவன் படித்துவிட்டு, அவரைக் கடவுளாக ஏற்றுக்கொண்டு வணங்குகிறான். மேற்கொண்டு அவன் படிக்கும்போது மற்ற கடவுள்களைப் பற்றியும் அவ்வாறே எழுதியிருப்பதைக் காண்பதால் அவனுக்கு விஷ்ணுவின் மேல் உள்ள பக்தி மோகம் குறையலாம். அதைப் போலவே அத்வைதம் பற்றியும் கூறப்பட்டுள்ளவைகளைப் படித்ததும் அதைப் பற்றிய எல்லாச் சந்தேகங்களும் நீங்கியிருந்தாலும், த்வைதம் பற்றிக் கூறப்பட்டிருக்கும் பகுதிகள் வேறுமாதிரியான விளக்கங்கள் தரவே, அது பற்றி மனதில் ஒரு சந்தேகம் கிளம்பி அதனால் ஒருவனுக்கு அத்வைத மார்க்கத்தில் முன்பிருந்த நம்பிக்கை தளரலாம். அதனால் ஒருவன் வேறெந்த மார்க்கங்கள் பற்றிப் படித்தாலும் அத்வைத பரத்தில் கொண்டிருக்கும் ஆழ்ந்த நம்பிக்கை சிறிதும் தகர்ந்து போகாதவரை ஒருவன் ச்ரவணத்தை விடாது செய்துகொண்டு இருக்க வேண்டும்.

சீடன்: ச்ரவணம் செய்வதால் வரும் பலன் என்ன?

குரு : எப்போது ஒருவனுக்கு அத்வைத மார்க்கத்தில் அவனுக்கு இருந்த சந்தேகங்கள் எல்லாம் ஒருவழியாக தீர்ந்துவிட்டனவோ, அப்போது எந்த நூலில் எழுதப்பட்டவைகளாலும், எவ்விதமான தர்க்கங்களாலும் அந்த சாதகனின் நம்பிக்கை அந்த வழியில் இருந்து அசைக்க முடியாது இருக்கிறது. அவனது நம்பிக்கைக்கு இருந்த தடைகள் எல்லாம் அவ்வாறு நீக்கப்பட்டு விட்டதால், அத்வைத பரத்தில் அவனுக்கு உள்ள மறைமுக அறிவில் அவன் நிலைத்து நிற்கிறான். இதுதான் ச்ரவணம் செய்வதால் வரும் **பலன்.**

71. மறைமுக அறிவு என்றால் என்ன?

குரு : ஆன்மாவைப் பற்றிய அறிவைத் தன் அனுபவத்தால் பெறாமல், அதைப் பற்றிக் கூறப்பட்டிருக்கும் சாஸ்திரங்களைப் படித்து அறிவதே மறைமுக அறிவு எனப்படும். விஷ்ணுவை நேருக்கு நேர் பார்க்காமல் சாஸ்திரங்கள் கூறுவதால் அவர் மேல் நம்பிக்கை வைப்பது என்பது ஒரு பொது அறிவே. அதைப் போலவே அத்வைத சாஸ்திரங்களைப் பற்றிக் கூறும் நூல்களில் இருந்து இரண்டற்ற ஒன்றான பிரம்மத்தைப் பற்றி அறிவதும் மறைமுக அறிவே.

72-76. சீடன்: ச்ரவணப் பயிற்சிகள் மூலம் பெறப்படும் அறிவு ஒரு மறைமுக அறிவு என்று ஏன் சொல்லப்படுகிறது? அது ஏன் நேரடி அறிவு ஆகாது?

குரு : இல்லை. அறியாமையின் மறைக்கும் தன்மையால் ஆன்மா தானே தானாக ஒளி விடாது இருக்கும்போது, அதைப் பற்றி நூலறிவால் மட்டுமே அறிவதை நேரடி அறிவு என்று கூறமுடியாது.

சீடன்: இவ்வாறு மற்றவர்களும் அறுதியிட்டுக் கூறியிருக்கிறார்களா?

குரு : ஆமாம். “பிரம்மத்தின் இயல்பு சத்-சித்-ஆனந்தமே என்பதை ச்ரவணத்தின் மூலம் அறிந்துகொண்டாலும், அதனால் பஞ்ச கோசங்களையும் ஒரு சாட்சியாகப் பார்த்துக்கொண்டு ஆன்மா இருக்கிறது என்பதை அனுபவபூர்வமாக உணரமுடியாது. நான்கு கைகள் உடையவராகவும், அவைகளில் சங்கு, சக்கிர, கதையையும் ஏந்திக்கொண்டு இருப்பவராகவும் விஷ்ணுவைப் பற்றி சாஸ்திரங்கள் வழியே தெரிந்துகொண்டாலும், அவரை ஒருமுகமாக தியானிப்பதால் அவர் உருவத்தை அவ்வாறே நாம் மனத்தளவில் காண்பதாக வைத்துக்கொண்டாலும், அவரை நாம் நம் கண்களால் நேரில் காணவில்லை என்பது உண்மையே. அதனால் அவரைப் பற்றிய நமது அறிவு ஒரு மறைமுக அறிவாகவே இருக்கிறது” என்பதை ஸ்ரீ வித்யாரண்யா சுவாமி தன்னுடைய “தியான தீபிகா” என்கிற நூலில் குறிப்பிட்டிருக்கிறார். இவ்வாறாக சாஸ்திரங்கள் மூலம் பெறப்படும் அறிவு மறைமுகமாகவே இருக்கிறது; அது நேரடி அனுபவத்தினால் பெறப்பட்டதாக இல்லை.

அதைப் போலவே ச்ரவணத்தின் மூலம் வரும் அறிவும் மறைமுகமானதே; அது நேரடி அனுபவம் அல்ல.

சீடன்: இங்கு விஷ்ணு ஆன்மா அல்ல; அதிலிருந்து வேறானவர். அதனால் அவரைப் பற்றி நாம் சாஸ்திரங்கள் மூலம் பெறும் அறிவு மறைமுகமானது என்பது சரியானது தான். ஆனால் பிரம்மம் ஆன்மாவை விட்டு வேறானது அல்ல. இந்த ஒற்றுமையைப் பற்றி அறியாத சாதகனுக்கு "நீ அதுவாக இருக்கிறாய்" என்று மறைகள் கூறுகின்றன. இதன் மகத்துவத்தை அறிந்துகொண்ட சாதகன் அந்த உண்மையை நேரடியாக உணர்ந்து விட்டதாகவே சொல்லவேண்டும். இந்த அறிவு சொர்க்கம் போன்றவைகளைப் பற்றியதொரு மறைமுக அறிவாக இருக்க முடியாது. அதனால் ச்ரவணம் இறுதியில் அனுபவரீதியான நேரடி அறிவைக் கொடுப்பதாகவே எடுத்துக்கொள்ள வேண்டும்.

குரு : அப்படி இல்லை. "நீ அதுவாக இருக்கிறாய்" என்ற உண்மையை மறைகள் கூறுவது சரியே. ஆனாலும் அவ்வாறு உண்மை ஒன்றைக் கேட்பதாலேயே நேரடி அறிவு பெற்றுவிட்டதாகச் சொல்வது சரியல்ல. ஆன்மாவைப் பற்றி அறிவதற்காக விசாரம் செய்யாதவரையில் நேரடி அறிவு பெறுவது இயலாது. பெறப்பட்ட மறைமுக அறிவை நேரடி அனுபவத்தில் உணர்வதற்கு அதைப் பற்றிய ஆழ்நிலைத் தியானம் அவசியம்.

77. ச்ரவணம் பற்றிய அத்தியாயம் இத்துடன் நிறைவு பெறுகிறது. எந்தச் சாதகன் இதைத் தீவிரமாகப் படிப்பானோ அவனுக்கு ஆன்மாவைப் பற்றிய மறைமுக அறிவு கிடைக்கும். அந்த அறிவை நேர்முகமாக அனுபவத்தில் உணர்வதற்கு அவன் அடுத்து வரும் "மனனம்" எனப்படும் கற்றவைகளை எண்ணிப்பார்த்து அசைபோடுவது என்ற முறையின் தன்மையை அலசிப் பார்ப்பது அவசியம்.

# 5. மனனம் : கற்றறிந்ததை மனத்தால் தொடர்ந்து எண்ணுவது

1. சீடன்: குருவே! தாங்கள் சொல்லிக் கேட்டதால், எனக்கு ஆன்மாவின் தன்மை வெகு நன்றாகப் புரிந்தது. ஆனாலும் அது ஒரு மறைமுக அறிவாகவே இருக்கிறது. தற்போது ஆன்மாவைப் பற்றி நன்கு அறிந்துகொள்ள முடியாதபடி அதைச் சூழ்ந்திருக்கும் இருளான அறியாமையைப் போக்குவதற்காக உள்ள மனனம் எனும் பயிற்சி முறையை எப்படிச் செய்வது என்று கற்றுக்கொடுங்கள்.

2. குரு : அத்வைத பரம்பொருளைப் பற்றி இதுவரை மறைமுகமாகத் தெரிந்துகொண்டுள்ள விவரங்களை இனி எப்போதுமே தன் நுண்ணிய அறிவு கொண்டு எண்ணிப் பார்த்தலே மனனம் எனப்படுகிறது.

3-4. சீடன்: அதனுடைய **காரணம், இயல்பு, பாதிப்பு, எல்லை** மற்றும் **பலன்**களைப் பற்றிய விவரங்களைத் தாங்கள் கூறுங்கள்.
குரு : இல்லாதவைகளில் இருந்து உண்மையில் இருப்பவைகளைப் பிரித்து அறிவதே அதன் **காரணம்**; அத்வைத பரம்பொருளின் உண்மை பற்றி ஆய்ந்து அறிவதே அதன் **இயல்பு**; "இருக்கும் அது தானாக ஒளிர்வதில்லையே" என்று கூறவைக்கும் ஒருவனுடைய அறியாமையின் மறைக்கும் தன்மையை ஒழிப்பதே அதன் **பாதிப்பு**; ஒழிந்த அந்த மறைக்கும் தன்மை மீண்டும் தலைதூக்காமல் இருப்பதே அதன் **எல்லை**; மறைமுக அறிவு நேரடி அனுபவமாக மாறுவதே அதன் **பலன்** என்று ஞானிகள் கூறுகின்றனர்.

5. சீடன்: பிரித்து அறியவைக்கும் விவேகம் அதன் காரணம் என்று ஏன் சொல்லப்படுகிறது?
குரு : உண்மையையும் மாயத்தையும் பிரித்து அறிவதால் எவன் ஆன்மாவைப் பற்றிய மறைமுக அறிவு பெறுகிறானோ, அவனே ஆன்ம விசாரத்தால் நேரடி அனுபவம் அடைவதற்கான தகுதியைப் பெற்றவன் ஆகிறான். மற்றெவரும் அந்த முயற்சியில் வெற்றிகாண முடியாது.

6. சீடன்: ஒருவன் முக்தியை வேண்டுவதே மனனத்தின் காரணமாக ஏன் இருக்கமுடியாது?
குரு : ஒருவனது முக்திக்கான ஆசையே அவனை ஆன்ம விசாரத்திற்குத் தகுதியுள்ளவனாக ஆக்க முடியாது. ச்ரவணம் செய்யாமல் ஒருவனுக்கு ஆன்மாவைப் பற்றிய மறைமுக அறிவு

கூட கிடைத்திருக்காது. அப்படியிருக்கும்போது எவ்வாறு ஒருவனால் விசாரத்தில் வெற்றி காணமுடியும்? ஆன்மாவைப் பற்றிய அறிவு எட்டிய பின்பே ஒருவன் அதை உணர்வதற்கு முயற்சி செய்யமுடியும். அதைப் பற்றிய உண்மையான இயல்பை அறியாதவன் ஆன்மாவைக் குறித்து என்ன விசாரம் செய்யமுடியும்? வெறும் முக்திக்கான ஆசை மட்டுமே விசாரத்திற்குப் போதுமானதாக இருக்காது.

7. சீடன்: அந்த ஆசை மட்டுமே அவனை விசாரத்திற்கு அழைத்துப் போகாதா? அந்த ஆசை எழுந்ததுமே ஒருவன் ஆன்மாவின் இயல்பு பற்றி அறிந்துகொள்ள விரும்புகிறான்; அதனால் தேவையான மறைமுக அறிவு கிட்டி, அவன் விசாரத்திற்குத் தகுதியுள்ளவனாக ஆகியிருக்க வேண்டும்.

குரு : அது உண்மையாக இருந்தால் அவனுக்கு ஏற்கனவே விவேகம் இருக்கிறது என்று அர்த்தம் ஆகிறது. அவனுக்கு முக்தியில் மட்டும் ஆசை இல்லை; அவனுக்குப் பிரித்தறியும் விவேகமும் இருக்கிறது என்றுதான் பொருள். இவ்வாறான உண்மை-மாயம் மற்றும் ஆன்மா-ஆன்மாவல்லாதது என்று பிரித்து அறியும் தன்மை ச்ரவணத்தினால் விளைகிறது. இதை மறைமுக அறிவு என்பார்கள். எவனுக்கு இந்த மறைமுக அறிவு இருக்கிறதோ அவனுக்கே உண்மை-மாயங்களைப் பிரித்தறியும் அறிவு கிடைக்கும், ஆன்மா-ஆன்மாவல்லாததைப் பற்றித் தெரியவரும், மேலும் அவனே விசாரம் செய்வதற்குத் தகுதியும் அடைகிறான் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதனால் விசாரம் செய்வதற்கு விவேகம் ஓர் அதி முக்கியத் தேவை என்றாகிறது.

8-12. சீடன்: முக்தியைக் காண வேண்டும் என்று விரும்புவதே மனனம் செய்வதற்கு ஒரு விசேஷமான காரணமாக இல்லாதிருந்தாலும், விஷயங்களில் பற்றின்மையோ அல்லது ஒருவனது சாந்தமான நிலையோ அதன் காரணமாக இருக்க முடியாதா?

குரு : அவை எல்லாமே மனனம் செய்வதற்கு உதவும் பொதுவான சாத்தியக் கூறுகளே அன்றி அதற்கான முக்கியக் காரணங்கள் அல்ல. பற்றற்று, சாந்தமாக இருக்கும் ஒருவனுக்கு ஆன்மாவைப் பற்றிய மறைமுக அறிவு இல்லாது இருக்கலாம்; ஆகையால் அவன் ஆன்மாவைப் பற்றிய விசாரம் செய்வதற்குத் தகுதி இல்லாது இருப்பான். பூஜை, ஜபம் போன்ற எளிய வழிகளைப் பின்பற்றி வாழும் பலர் சாந்தமாக, பற்றற்று இருந்தும் முக்தியை நாடுபவர்களாக இருக்கமாட்டார்கள். அவ்வாறு முக்தியை நாடாதவர்கள் ஆன்மாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கக்கூட மாட்டார்கள்.

சீடன்: அவர்கள் முக்தியை நாட விருப்பம் கொள்ளாதவர்கள் என்று எப்படிக் கூற முடியும்?

குரு : பூஜை, ஜபம் உள்ளிட்ட எளிமையான வாழ்க்கையை வாழ்ந்தும், முக்திக்கான வழியைக் காட்டும் ச்ரவணம் முதலானவற்றைப் பயிற்சி செய்யாத அவர்கள் முக்தியை நாட விருப்பம் கொள்ளாதவர்கள் என்றே ஊகிக்க முடிகிறது.

சீடன்: இல்லை. அவர்களுக்கும் முக்தி கிட்ட வேண்டும் என்ற ஆசை இருக்கலாம்.

குரு : அப்படியென்றால் அவர்கள் தாங்கள் கடைப்பிடிக்கும் ஜபங்கள் போன்ற எளிய வழிகளை விட்டுவிட்டு ஒரு குருவை நாடி, அவரிடம் இருந்து எப்போதும் ஆன்மாவைப் பற்றிக் கேட்டுக்கொண்டு இருக்க வேண்டும். மேலும் அவர்கள் ச்ரவணத்தை நன்கு பயின்றவர்கள் என்று இருந்தால், அவர்களுக்கு வேண்டிய மறைமுக அறிவு கிடைத்திருக்கும் என்பதால், அவர்கள் மனனப் பயிற்சிகளைத் தொடங்கியிருக்க வேண்டும். ச்ரவணம் செய்திருக்கவில்லை என்றால், அவர்கள் பற்றற்றோ அல்லது சாந்தமாகவோ இருந்தாலும், உள்ளது இல்லாதது என்றவைகளைப் பிரிக்கும் திறனான விவேகம் இல்லாதவர்கள் என்பதால் ஆன்ம விசாரத்தைத் தொடங்கத் தகுதியற்றவர்களாக இருப்பார்கள். பற்றின்மை விசாரத்திற்குத் துணயாக இருக்குமே தவிர அது ஒரு முக்கிய காரணமாக இருக்க முடியாது. விவேகம் ஒன்றே முக்கிய காரணம்.

13-14. சீடன்: பற்றுதல்களை விட்டு, சாந்தமாக இருந்துகொண்டு, ஜபம் முதலானவை செய்துகொண்டு ஓர் எளிமையான வாழ்க்கை வாழ்ந்தால் விசாரம் செய்யாமலே ஆன்மாவை உணர முடியாதா?

குரு : இல்லை. விசாரம் செய்யாமல் இருந்ததாலேயே ஆன்மாவைப் பற்றிய ஞானம் மறைந்துவிட்டது. அதை மீண்டும் பெறுவதற்கு விசாரம் அவசியம் தேவைப்படுகிறது. அது இல்லையென்றால் எத்தனை கோடி ஜபங்கள் செய்தாலும் தொலைத்த ஞானத்தை எப்படிப் பெறுவது? விசாரம் செய்யாமையால் விளைந்த அறியாமை எனும் திரையினால் மங்கிய மனக்கண்ணின் இழந்த பார்வையைச் சரி செய்வதற்கு ஆன்ம விசாரம் ஒன்றே சரியான வழி. விசாரத்தின் மூலம் திரும்பப் பெறக்கூடிய ஞானக் கண் இல்லாது போனால் ஆன்மாவை உணரவே முடியாது.

15-16. சீடன்: ஆன்மாவை விசாரிப்பது என்றால் என்ன?

குரு : உடலே "நான்", எனக்குப் புலன்கள் இருக்கின்றன என்று நினைத்துக்கொண்டும், "ஆன்மா யார்? எங்கிருக்கிறது அது? எப்படி இருக்கும் அது?" என்றெல்லாம் கேட்டுக்கொண்டும், பஞ்ச கோசங்களுக்குள் இருக்கும் தனது உண்மை நிலையை, ஒருமுகப்படுத்தப்பட்ட புத்தியால் விசாரித்து அறிய முயற்சிப்பதே ஆன்ம விசாரம் ஆகும். உண்மையில் இல்லாத பஞ்ச கோசங்களுக்குள் புதைந்துள்ளது போல இருக்கும்

உண்மையான ஆன்மாவை உணர்வதற்குத் தன் நுண்ணிய அறிவால் விசாரணையைத் தொடர்ந்து செய்யவேண்டும்.

17. சீடன்: ஆன்மா எங்கும் பரந்து, விரிந்து இருக்கிறது என்று முன்னர் சொல்லப்பட்டது. அவ்வாறு எங்கும் இருக்கும் ஆன்மாவை எப்படி கோசங்களுக்குள் மட்டும் தேடுவது? மேலும் கோசங்களும் உண்மையில் இல்லாதவை என்று கூறப்படுகின்றன. இல்லாதவைகளைப் பற்றி விசாரணை செய்தால் எப்படி அது உண்மையை அறியவைக்கும்?

18-19. குரு : ஆன்மா எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது என்பது உண்மையே. இருந்தும் அதைப் பற்றிய அறிவோ பஞ்ச கோசங்களால் சூழப்பட்டு மறைந்திருக்கிறது. அதனால் ஆன்மா எங்கு மறைந்திருக்கிறதோ அதை அங்கேதானே தேட முடியும்; வேறோர் இடத்தில் தேட முடியாதல்லவா? எதையுமே தொலைந்த இடத்தில் தானே தேட வேண்டும்? வீட்டில் தொலைந்த பொருளை காட்டிலே தேட முடியாது. அது போலவே பஞ்ச கோசத்திற்குள் புதைந்துள்ள ஆன்மா, மற்றும் கோசங்களே ஆன்மா என்ற தவறான கருத்து என்றவைகளை எல்லாம் இடையில் புகுந்துள்ள கோசங்களை ஒவ்வொன்றாக ஆராய்ந்தே உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டும்.

சீடன்: உண்மையில் இல்லாதவைகளை ஆராய்வது உண்மையை உணர்வதற்கு எவ்வாறு வழி காட்டும்?

குரு : உண்மையை மறைத்துக்கொண்டு இருக்கும் திரைகளை முதலில் விலக்கவேண்டும். அவைகள் உண்மையில் உள்ள ஆன்மாவின் மேல் படர்ந்து இருப்பவைகள். அவைகளின் தன்மைகளை ஆராய்ந்து அவைகள் மாயங்கள்தான் என்பதை உறுதி செய்துகொண்டால், அவைகளுக்கு அடித்தளமாக விளங்கும் ஒரேயொரு உண்மையைக் கண்டறியலாம். மேலே படர்ந்து இருப்பவைகள் என்னவென்று ஆராயாவிட்டால் அவைகளுக்கு ஆதார அடிப்படையாக விளங்கும் உண்மையைக் கண்டுபிடிக்க முடியாது. கயிறு பாம்பாகத் தெரியும்போது, அது உண்மையல்ல வெறும் காட்சிதான் என்றாலும், பாம்பு போலத் தெரியும் பொருள் என்னவென்று ஆராயாமல், அது கயிறுதான் என்ற உண்மையைக் கண்டுபிடித்தவர்கள் யாராவது இருக்கிறார்களா? அல்லது காணப்படுகிற பாம்பை அலசி ஆராய்ந்தவர்களில் அதன் அடிப்படை ஒரு கயிறு அல்ல என்று தீர்மானிக்க முடியாதவர்களாக எவர் இருந்திருக்கிறார்கள்? அப்படி எவரும் இல்லை. அதைப் போலவே பஞ்ச கோசங்களும் உண்மையல்ல, மேலாகக் காணப்படுபவைகள் என்ற மறைமுக அறிவை ச்ரவணம் மூலம் ஒருவன் பெறவேண்டும். அவ்வாறு மேலோட்டமாகப் பெறப்பட்ட அறிவை சாதகன் தன் நுண்ணிய அறிவால் மேலும் ஆழ்ந்து அலசி அதன் உண்மையை அனுபவத்தில்

உணரவேண்டும். காணப்படுகிற உடலானது தான் உட்கொள்ளும் உணவால் வளர்கிறது என்பதை அறிந்து, அதனால் அன்னமய கோசம் ஆன்மாவை மறைக்கிறது என்பதை ஒருவன் எவ்வாறு அனுபவத்தால் உணர்கிறானோ, அவ்வாறே பொதுவாக எல்லோருக்கும் தெரியாத ஆனால் சாஸ்திரங்களும், குருவும் கூறுகின்ற மற்ற நான்கு கோசங்களைப் பற்றியும் அறிந்துகொள்ள அதன் தன்மைகளை ஆராய வேண்டும். முதலில் அவைகளைப் பற்றி அறிவுகொண்டு விசாரித்து அறிந்த பின் அதை நேரடி அனுபவத்திலும் உணரவேண்டும். அதே சமயம் அவைகள் உண்மையை மறைக்கும் கோசங்கள் தான் என்று நன்கு தெளிந்துகொண்டு, அனைத்துக்கும் சாட்சியான சச்சிதானந்த பரப் பிரம்மத்தை அறியும் பொருட்டு, அவைகளை ஒன்றன்பின் ஒன்றாக விலக்க வேண்டும்.

20. சீடன்: விசாரம் செய்து பஞ்ச கோசங்களையும் நீக்கிய பின்பு, ஆன்மாவைப் பற்றி விசாரம் தொடர்ந்தால் ஆன்மா இருப்பதை எப்படி உணர்வது?

குரு : ஆன்மாவைப் பற்றித் தொடர்ந்து சிந்தனை செய்வதே மனனம். அது அனைத்தையும் மறைக்கும் அறியாமையைப் போக்குவது. பஞ்ச கோசங்களுக்குள் இருக்கும் ஆன்மாவைப் பற்றித் தொடர்ந்து எண்ணிக்கொண்டு இருப்பதால் “ஆன்மா தானாக வெளிப்படுவதில்லை” என்ற திரை விலக்கப்படும்.

சீடன்: அது எவ்வாறு சாத்தியமாகிறது?

குரு : கயிற்றை மறைக்கும் கயிறு-பாம்பு காட்சியைப் பற்றிய விசாரணை தொடர்வதால் கயிற்றைப் பற்றிய அறியாமை அழிவது போல, ஆன்மா தெரிவதில்லை என்றோ தானாக வெளிப்படுவதில்லை என்றோ உள்ள அறியாமையை, பஞ்ச கோசங்களையும் சாட்சியாகப் பார்க்கும் ஆன்மாவைப் பற்றிய நுண்ணிய விசாரம் அகற்றுகிறது. கார்மேகங்கள் கலைந்ததும் சூரியனின் ஒளி நன்கு பரவுவது போல, ஆன்மாவை மறைத்துக் கொண்டிருக்கும் திரைகள் விலக்கப்பட்டதும் சாட்சியாக விளங்கும் ஆன்மா நன்கு ஒளிவிட்டு வீசுகிறது. ஆகையால் விசாரம் அவசியம் தேவைப்படுகிறது.

21. சீடன்: ஆன்ம விசாரம் எதுவரை தொடரப்பட வேண்டும்?

குரு : அறியாமை எனும் இருள் மறுபடி தலையெடுத்து சூழாமல் இருப்பது மனனத்தின் எல்லை என்று கூறப்பட்டிருக்கிறது. அதனால் இந்த அறியாமை தலையெடுக்காது இருக்கும்வரை விசாரம் தொடர்ந்து நடக்க வேண்டும்.

22-24. சீடன்: மறைக்கும் திரைகள் அகற்றப்பட்டதற்குப் பிறகும் அவை மறுபடி சூழ்வது சாத்தியமா?

குரு : சாத்தியமே; ஆன்மாவைப் பற்றிய சந்தேகங்கள் இருக்கும் வரை அறியாமை தொடர்ந்து இருப்பதாகத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும்.

சீடன்: ஆன்மாவைத் தரிசித்த பின்பும் சந்தேகங்கள் தொடர்ந்து இருக்க முடியுமா?

குரு : பஞ்ச கோசங்களைப் பற்றி விசாரித்து அவை உண்மையல்ல என்று அறிந்தபின் அவைகளை அகற்றியதும், அவைகளைச் சாட்சியாகப் பார்த்துக்கொண்டிருக்கும் ஆன்மாவை உணரும்போது அது விசேஷமானதாகவும், எல்லாவற்றையும் விட நுண்ணியதாகவும், உண்மையில் ஏதுமே இல்லாத வெட்டவெளி போலவும் கூட தோன்றுகிறது. இவ்வாறாக கோசங்களை மாயங்கள் என்று நீக்கியபின் உணரப்பட்ட ஆன்மா ஒன்றுமே இல்லாத வெட்டவெளி போலத் தோன்றுவதால், பிடிமானம் ஏதும் இல்லாது போயிற்றோ என்றதொரு பயம் பரவலாம்.

சீடன்: அது எப்படி வரும்?

குரு : அனைத்தையும் கடந்து இருக்கும் ஆன்மாவுக்கு உலகத்தில் உள்ள பொருட்கள், மற்றும் நடப்புகளோடு எந்தவித சம்பந்தமும் கிடையாது. அது வெட்டவெளி என்ற ஒன்றும் இல்லாத நிலையையும் கடந்தது. அதனால் அந்த அனுபவம் முற்றிலும் புதுமையானது; உலகில் கிடைத்த அனுபவங்கள் எதற்கும் வேறானது. அதனால் “இதுதான் ஆன்மாவா? இருக்க முடியாது - இதுதான் ஆன்மாவென்றால் ஏன் ஒன்றுமே இல்லாதது போல இருக்கிறது?” என்றதொரு அச்சம் தோன்றலாம். வேறெதனுடனும் கலக்காது தனித்து இருக்கும் ஆன்மாவை உணர்ந்த பின்பும், தன் அனுபவம் மீதே ஒருவனுக்கு நம்பிக்கை வராமல் இருந்து, அதனால் அப்படி ஒன்று இருக்க முடியாது என்று தோன்றி ஒரு மாபெரும் சந்தேகம் பரவலாம். அவ்வாறு இருக்காது என்ற எண்ணம் வருவதால் சந்தேகம் வலுப்படலாம். ஆனாலும் தொடர்ந்து செய்யப்படும் மனனப் பயிற்சிகளால் அவ்வாறு இருக்க முடியாது என்ற உள்ளுணர்வு அகல்கிறது. அதனால் “பிரம்ம சூத்திரம்” என்ற நூலில் வியாசர் आवृत्ति असकृदुपदेशात् என்று கூறுகிறார். அதாவது (வேதங்களில் கூறியுள்ளபடி) திரும்பத் திரும்பச் சொல்லியவாறு (ஆன்மாவைப் பற்றிக் கேட்டதை, சிந்தித்ததை, மேலும் தியானித்ததை) மேலும் மேலும் தொடர்ந்துகொண்டே இருக்கவேண்டும்.

25. சீடன்: அவ்வாறு மனனம் செய்வதால் என்ன பலன் கிடைக்கிறது?

குரு : தொடர்ந்து பயிற்சி செய்வதால் மறைக்கும் திரைகள் அழிக்கப்படுகின்றன; அதன் அழிவினால் ஆன்மாவால் தானாகவே ஒளிர முடியாது என்ற கருத்தும் மறைகிறது; அதன் மறைவால் எல்லாத் தடைகளும் அகன்று, உள்ளங்கை நெல்லிக்கனி போல, ஆன்மாவைப் பற்றிய நேரடி அனுபவம் கிடைக்கிறது. இதுதான் மனனத்தால் வரும் பலன்.

26. சீடன்: நேரடி அனுபவம் என்றால் என்ன?

குரு : சூரியனையும், அதை மறைக்கும் மேகக் கூட்டங்களையும் நன்கு பிரித்து அறிவது போல, அகந்தையையும் ஆத்மாவையும் பிரித்து அறிவதே நேரடி அனுபவம். இதுதான் மனனத்தின் பலன்.

27. என் புத்திசாலி மகனே! மனனம் பற்றிய தேவையான விவரங்கள் எல்லாம் சொல்லித் தந்தாகி விட்டது. இனி நீ பஞ்ச கோசங்களைப் பற்றிய விசாரணையைத் தொடங்கி, அவைகள் மாயங்கள் என்பதால் அவைகளைக் களைந்தெறிந்து, மிகவும் சூக்ஷமமாக இருக்கும் ஆன்மாவைக் காண கூர்மையான அறிவுடன் மனத்தை உண்முகமாகத் திருப்பி, அதைச் சந்தேகமற உணர்வாயாக.

28. சீடன்: குருவே! நான் தீர்க்கமாக விசாரம் செய்தாலும் “இவைகள்தான் பஞ்ச கோசங்கள். இதுதான் அதன் உள்ளே தனித்திருக்கும் ஆன்மா” என்று என்னால் எதுவும் சொல்லமுடியவில்லை. மேலும் என்னால் ஆன்மாவை நேரடியாக உணரவும் முடியவில்லை. இவ்வாறு ஏன் நடக்கிறது?

குரு : இதற்கு அநாதியான அறியாமையே காரணம்.

சீடன்: இந்த அறியாமை எப்படித் தோன்றியது?

குரு : முன்பே கூறப்பட்ட மறைக்கும் தன்மையால்.

சீடன்: அது எப்படி?

குரு : ஆன்மாவும், அகந்தையும் அதனதன் இயல்புகளால் ஒன்றுக்கொன்று வேறுபட்டாலும், மறைக்கும் தன்மையானது அவை இரண்டும் ஒன்றே என்பதுபோல காட்டுகிறது.

சீடன்: இதைச் சற்று விளக்கமாகச் சொல்லுங்கள்.

குரு : கயிறும் பாம்பும் வெவ்வேறாக இருந்தாலும், இருப்பது கயிறு என்பது தெரியாததால் அதைப் பாம்பு என்று நினைப்பது போல, அறியாமை எனும் இருளால் மறைக்கப்பட்டுள்ள ஆன்மாவும் தனது ஒளியைக் காட்டாது, அதனிடத்தில் அகங்காரம், கர்த்ருத்துவம் (நான் செய்பவன்) போன்றவைகளின் குணங்களையே வெளிப்படுத்துகிறது.

29-31. அதனால் பஞ்ச கோசங்களின் தன்மைகளை அலசி, அவைகளை அறிந்து, உணர்ந்து அவை மாயங்கள் எனத் தவிர்க்க வேண்டும். காணும் மாற்றங்களை எல்லாம் பார்த்துக்கொண்டு மாறாத சாட்சியான ஒன்று இருக்கவேண்டும்; அது வெளிப்பட்டு மாயமாக விளங்கும் மற்றவைகளை அழிக்க வேண்டும். அதைத் தேடிக் கண்டுபிடித்து அதுவே ஆன்மா என்பதை உணர்வாயாக.

சீடன்: நடப்பன எல்லாவற்றையும் விட்டு சாட்சி தனியாக எங்கு இருக்க முடியும்?
குரு : அறிபவன், அறிவு, அறியப்படுவது என்ற முப்புடிகள் இருக்கின்றன. இவைகளில் அறிபவன் ஒருவன், அறிவு புத்தி சம்பந்தப்பட்டது, அறியப்படுவது என்பவை ஏதேனும் பௌதிக அல்லது நுண்ணிய பொருட்கள். இவை மூன்றும் நனவு மற்றும் கனவு நிலைகளில் உதித்து வளர்கின்றன என்றாலும், ஆழ்நிலை உறக்கத்தில் அவை உணர்வற்றவைகளோடு கலந்து விடுகின்றன. இவைகளுக்கெல்லாம் நடுவே எந்த மாற்றமும் காணாமல் இவை அனைத்தையும் பார்த்துக்கொண்டு, காண்பன எல்லாவற்றையும் ஒளிர்வித்துக்கொண்டு, மூன்று நிலைகளுக்கும் ஆதாரமாக இருந்துகொண்டு சாட்சியாக இருப்பதே ஆன்மா ஆகும். அவைகளைப் பிரித்துப் பார்த்து, ஆன்மாவில் லயித்து இரு.

32. சீடன்: தாங்கள் கூறுகிறபடி பஞ்ச கோசங்களை விசாரித்து அறிந்து, அவைகள் மாயங்கள் என்று அவைகளை நீக்கினால் எஞ்சி நிற்கும் ஒன்றுமே இல்லாத வெறுவெளியைத் தவிர நான் வேறேதும் காண்பதில்லை. அங்கு ஆன்மா எங்கே இருக்கிறது?

33-35. பஞ்ச கோசங்கள் போன பின் அங்கு எதுவுமே இல்லை என்று சொல்வது “எனக்கு நாக்கு இல்லாததால் என்னால் பேச முடியவில்லை” என்று ஒருவன் சொல்வது போலத்தான்!
சீடன்: அப்படியென்றால்?
குரு : தனக்கு நாக்கு இல்லை என்று சொல்வதற்கே ஒருவனிடம் நாக்கு இல்லாமல் அதைச் சொல்லமுடியாது. அதேபோல வெறுவெளியைப் பார்க்கும் ஒருவன் இல்லாமல் “அங்கு ஒன்றும் இல்லை” என்று சொல்லமுடியாது. உண்மையாகவே ஒருவன் இல்லையென்றால் எதையும் சொல்லியிருக்க முடியாது. மாறாக வெறுவெளியைப் பார்க்கும் ஒருவன் இருப்பதால் மட்டுமே “அங்கு ஒன்றும் இல்லை” என்று சொல்ல முடிவதால், ஆன்மா தானே தானாக அங்கு இருந்து வெறுவெளியை உணர்கிறது என்பது வெட்ட வெளிச்சமாகிறது.
சீடன்: அப்படியானால் அதைப் பார்க்காது இருப்பது ஏன்?
குரு : ஆன்மா எல்லாவற்றையும் பார்க்கும்; ஆனால் அதைப் பார்க்கும் பொருள் வேறெதுவும் இல்லை. தானே அறிவுமயமாக இருப்பதால் வேறெதனுடைய உதவியும் இல்லாமல் அது அனைத்தையும் அறியும்; ஆனால் வேறெதுவும் அதனை அறிய இயலாது. அது அனைத்தையும் அறியும்; ஒன்றும் இல்லை என்பதையும் அது அறியும். அனைத்தின் உள்ளும் இருப்பது அதுவே; வேறெதனாலும் பார்க்க முடியாது தூய்மையாக, களங்கமில்லாது, எங்கும் பரவலாக உள்ளது அது. எதனாலும் பிரிக்கப்படாது முழுமையாக உள்ளது அது. அனைத்தையும் அறிந்த சுத்த சுயம்பிரகாசப் பேரறிவாக விளங்குவது அந்த ஆன்மாவே.

36-43. சீடன்: அனைத்தையும் அறியும் ஆன்மா எப்படி வேறெதனாலும் அறியப்படாததாக இருக்கிறது?

குரு : பஞ்ச கோசங்களும் உண்மையில் இருப்பன போலக் காணப்படுகின்றன. அவைகள் விலக்கப்பட்டதும் அவைகள் இருந்த இடம் வெற்றிடமாகவோ அல்லது ஒன்றும் இல்லாததாகவோ காணப்படுகிறது. காணப்படும் அந்தக் கோசங்களோ, அவைகள் இல்லாததோ அல்லது வேறெதுவோ உணர்வற்றவைகளாக இருந்து, அவைகளே தங்களை அறிவிப்பவைகளாக இல்லாதிருந்து, அவைகள் இருப்பதை அறிவதற்கு அறிபவன் ஒருவன் தேவைப்படுகிறது. அப்படிக் காண்பவன் ஒருவன் இல்லையென்றால் காண்பதற்கும் ஏதும் இல்லாது போகிறது.

சீடன்: அது ஏன் அப்படி?

குரு : பார்ப்பவன் ஒருவனுக்கே பானை போன்றதொரு பொருள் தெரிகிறது; பார்ப்பவன் இல்லை என்றால் பார்ப்பதற்கும் ஏதும் இல்லை என்றாகிறது. அதைப் போலவே பஞ்ச கோசங்களைக் கடந்த வெற்றிடம் என்பதும் பார்ப்பவன் இருப்பதாலேயே தெரிகிறது. காணும் சாட்சி இல்லை என்றால், அது வெற்றிடம், அங்கு ஒன்றும் இல்லை என்று எப்படித் தோன்றமுடியும்? சாட்சியாக இருப்பவன் ஒன்றைப் பார்த்தாலொழிய உணர்வு இல்லாதவைகளுக்குத் தன்னைக் காட்டிக்கொள்ளும் தன்மை கிடையாது.

சீடன்: உணர்வு இல்லாவிட்டாலும் ஒன்று தன் இருப்பைக் காட்டிகொள்ளலாமே.

குரு : அது உண்மையானால் பானை போன்ற பொருட்கள், காண்பவன் இல்லாமல், தங்கள் இருப்பை அறிவித்துக்கொள்ளலாமே. அது முடியாத காரியம். ஒன்றும் இல்லை என்ற நிலையும் உணர்வற்றதே; அது தன்னையே காட்டிக்கொள்ள முடியாது. அதை உணர்வதற்கும் தானே ஒளிரும் சாட்சியாகிய ஒன்று தேவை.

சீடன்: எப்படி?

குரு : எவ்வாறு மேகங்கள் போன்று மேலே இருப்பவைகளும், பானைகள் போன்று கீழே இருப்பவைகளும் தாங்களாகவே ஒளிராது, பல காத தூரங்கள் தள்ளியிருந்தும் தானே ஒளிரும் சூரியனின் ஒளியினால் ஒளிரப்படுபவைகளாக ஆகின்றனவோ, அதேபோல புத்திக்கு அப்பாற்பட்ட வெட்டவெளி போன்றவைகளும், புத்தியினால் அறியப்படுபவைகளும் தானாக ஒளிராது, அறிவுடனும் இல்லாது இருக்க, அவைகள் அனைத்தையும் கடந்த, தானாகவே ஒளிரும் ஆன்மாவினால் அறியப்படுகின்றன. வெட்டவெளியைக் கடந்தும், அதிலிருந்து வேறுபட்டும் இருந்து, அதனையும் மற்றவைகளையும் ஒன்று சாட்சியாகப் பார்த்துக்கொண்டு இருக்கிறது. அதுதான் வேறெதனாலும் அறியப்படாது இருந்தும், எல்லாவற்றையும் அறிந்துள்ள ஆன்மா. அதை அறிவதற்கு உன் புத்தியை மிகவும் நுண்ணியதாக்கிக் கொண்டு, ஆன்மாவைத் தேடி அதனை உன் அனுபவத்தில் உணர்வாயாக.

44-45. இவ்வாறு, உள்ளங்கை நெல்லிக்கனி போல, ஆன்மாவின் தன்மையைப் பற்றித் தெளிவாக வந்த குருவின் வார்த்தைகளால் சீடன் ஆன்மாவை நன்றாக உணர முடிந்தது. அதனால் அவன் “குருவே! நான் ஆன்மாவை நேரடியாக உணர்ந்துவிட்டேன். எனக்கு அது நன்றாகத் தெரிகிறது” என்று கூறி தனது மகிழ்ச்சியைத் தெரியப்படுத்தினான்.

குரு : ஆன்மா எப்படி இருக்கிறது என்று உணர்கிறாய்?

சீடன்: காணும் பொருட்கள், வெற்றிடம் போன்றவை அனைத்துக்கும் சாட்சியாகவும், அறிவாக, அனைத்தையும் அறிந்துள்ளதாக, மிகவும் உன்னதமாக, தராதரம் பார்க்க இயலாததாக, அதன் ஆழம் பார்க்க முடியாததாக, புலன்கள் மனோபுத்தி இவைகளுக்கு அப்பாலாக, எதனுடனும் சேராததாக, கலக்காததாக, உருவமற்றதாக, பூத நுண்ணிய அணுவளவு என்றில்லாததாக, பளுவாக இல்லாது, கருப்போ வெளுப்போ அல்லது வேறெந்த நிறத்துடனோ இல்லாது, இருளோ ஒளியோ என்று இல்லாதிருந்தும், ஆன்மா ஆகாயத்தை விடவும் நுண்ணியதாக, தூய்மையாக இருப்பதை உணர்கிறேன். எந்த மாற்றமும் அதனிடத்தில் இல்லாததைக் காண்கிறேன். பேருணர்வு என்னும் அதன் ஒளிர்விக்கும் தன்மையால் மாற்றம் காணும் அனைத்துப் பொருட்களும், ஒன்றுமில்லாப் பெருவெளியும் அறிவுக்கும், ஆன்மாவுக்கும் அப்பால் தொலைதூரத்தில் இருக்கிறது; ஆன்மா எப்போதும் மாறாது உள்ளது.

குரு : அப்படியானால் “நான் பருமனாக இருக்கிறேன்; நான் மெலிந்து இருக்கிறேன்” என்ற கருத்துக்கள் ஆன்மாவில் எப்படி உதிக்கின்றன?

சீடன்: ஆன்மாவின் உண்மை ஸ்வரூபத்தை அறிய முடியாது அறியாமையின் மறைக்கும் தன்மை தடுக்கிறது. ஆன்மாவைக் காணாது அனைவரும் அதனை மறைக்கும் திரைகளை ஆன்மா என்று தவறாகக் கருதுகின்றனர். அது அறியாமையால் விளைந்ததே. ஆன்மாவைப் பொருத்தவரை மாற்றங்கள் என்று ஏதும் கிடையாது. ஆகாயம் தூய்மையாகவும், நிறமற்றதாகவும் இருந்தாலும் பார்ப்பதற்கு நீல நிறத்தில் இருக்கிறது. அது போலவே ஆன்மா மாறாததாகவும், கலப்படம் அற்றதாகவும் இருந்தாலும் அறியாமையின் விளைவால் மாறுதல் அடைவது போல அறியப்படுகிறது.

இங்கேயே, இப்போதே இருப்பதாக ஆன்மா தெளிவாக அறியப்படுகிறது; அது இல்லாது இருக்கவே முடியாது. அட! எப்போதும் உள்ளதாகவும், அருகாமையிலேயே இருந்தும் ஆன்மா காணப்படுவதில்லை என்று தவறாகச் சொல்லப்படுவது ஆச்சரியமாக இல்லையா? அப்படிச் சொல்வது சூரியனின் வெளிச்சம் பளிச்சென்று இருந்தும், ஓர் ஆந்தைக்கோ எல்லாம் இருள் மயமாக இருப்பது போல இருக்கிறது. ஓ! ஆன்மா ஒளிமயமானது, தானாகத் தெரிவது! ஆனாலும் “ஆன்மா தெரிவதில்லை” என்று நாம் உணரும் அளவிற்கு மாயை ஓர் இருளைக்

கவிழ்த்து வைத்திருக்கிறது. உண்மையில் இது ஓர் ஆச்சரியமே! பட்டப் பகலில் ஓர் இருள் இருக்க முடியுமா? எங்கும் தெரியும், எப்போதும் ஒளிமயமாக இருக்கும் ஆன்மாவை எதுவும் திரை போட்டு மறைக்க முடியுமா? அது எப்படி முடியும்? அப்படி ஒருவரால் எண்ணவும் முடியுமா? உண்மையில் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது என்பதே ஒரு மாயம். அது வெறும் சொல்லே தவிர, அதற்குப் பொருள் எதுவும் இல்லை.

குரு : அப்படி திரை என்று ஏதும் இல்லையென்றால் ஆன்மா ஏன் இவ்வளவு நாட்கள் மறைந்து இருந்தது?

சீடன்: அது உண்மை இல்லை என்றாலும், ஒருவன் ஆன்ம விசாரம் செய்யாமல் இருந்ததால் அவனது அறியாமை மண்டிக் கிடந்து இருந்தது. எவ்வாறு ஒருவன் சரியான விசாரணை செய்யாததால் கயிறு மறைந்து அங்கு பாம்பு காணப்பட்டதோ, அவ்வாறே ஆன்மாவைப் பற்றிய விசாரம் இல்லாததால் ஆன்மா மறைந்தது போல் காணப்படுகிறது. இதுதான் அநாதியான அறியாமையின் மறைக்கும் தன்மையாகும். இப்போது ஆன்மாவை உணர்ந்துவிட்டதால் மறைக்கும் திரைகள் என்று ஏதும் இல்லை என்பது தெரிகிறது. மேலும் இங்கேயே, இப்போதே ஆன்மா ஒரு நிரந்தர சாட்சியாக இருப்பதையும் உணர்கிறேன்! இது ஆச்சரியத்திலும் ஆச்சரியமாக இருக்கிறது! உள்ளங்கையில் உள்ள நெல்லிக்கனியைப் போல ஆன்மா இருப்பதை இப்போது நன்கு உணர்ந்துவிட்டேன். குருவே! தெய்வமே! உங்கள் அருளால் நான் ஆசி பெற்றேன்; எனது வேலை முடிந்துவிட்டது.

46-50. இவ்வாறு தன் ஆசி பெற்ற சீடன் மகிழ்ச்சியுடன் கூறியதைக் கேட்ட குருவும் மனம் மகிழ்ந்து கீழ்க்கண்டவாறு கூறலானார்: “அறிவும், மதிப்பும் மிக்க எனது மகனே! இறைவன் அருளால் நீ உணரவேண்டியதை உணர்ந்துவிட்டாய்! நன்கு கற்றவர்களும் அறியாமையால் ஆன்மாவை அறிந்துகொள்ள முடியாமல் தவிக்கும்போது ஆண்டவன் அருளால் அறியாமை உனக்கு அகன்றது. படித்த பண்டிதர்களுக்கும் கிடைக்காத வாய்ப்பு உனக்குக் கிட்டியது உன் அதிர்ஷ்டமே! உனது முற்பிறவிகளில் நீ செய்த புண்ணியங்கள் எல்லாமாகச் சேர்ந்து உனக்கு இந்த பலனைத் தந்திருக்கிறது! இந்தப் பலனை நீ அடைந்ததற்கு நீ என்ன தவம் செய்திருக்க வேண்டும்? உண்மையில் நீ மிகுந்த ஆசி பெற்றவன்தான்! உனது வேலை முடிந்துவிட்டது என்பது உண்மையே. நீ பெறவேண்டியதை பெற்றுவிட்ட மனிதன். ஒருவன் பெறுவதற்கு எல்லாம் அரிதான ஒன்றை நீ பெற்றுவிட்டாய்! அதை அடைவதற்காகவே அனைவரும் பலதரப்பட்ட கர்மங்கள், சபதங்கள், பூஜை புனஸ்காரங்கள், வேண்டுதல்கள், யோகங்கள், மற்றும் விதவிதமான முயற்சிகளை மேற்கொள்ளுகின்றனர்; அது என்ன என்று அறிந்துகொள்ளுவதற்கே பலர் அவ்வளவு சிரமங்களையும் எடுத்துக்கொள்கிறார்கள். உன் கஷ்டங்கள் எல்லாம் தீர்ந்துவிட்டன. முந்தைய ஜன்மங்களில் நீ பட்ட பாடுகள்

எல்லாவற்றுக்கும் இன்று பலன் கிடைத்துவிட்டன. இந்தப் பரம்பொருளைப் பற்றிய அறியாமையின் விளைவாலேயே பலரும் மீண்டும் மீண்டும் பிறப்பு-இறப்பு தரும் சம்சார சாகரத்தில் சிக்கித் தவிக்கின்றனர். அந்தக் கடலைத் தாண்டி நீ அக்கரை சேர்ந்துவிட்டாய். அதைப் பற்றி அறியாமல் இருப்பதாலேயே தன் உடல், புலன்கள் போன்றவைகளைப் பலரும் ஆன்மாவென்று தவறாக எண்ணுகின்றனர். ஆனால் நீயோ ஆன்மா எதுவென்று அறிந்துகொண்டாய். அதனால் நீ அறிவு மிக்கவன், புத்திசாலி. அதைப் பற்றி எந்தவித சந்தேகமும் இல்லை.

வேதங்கள் கூறுகிற "நீ அதுவாக இருக்கிறாய்" என்றதில் உள்ள "நீ" என்பதன் உட்பொருளை, இதுவரை செய்திருக்கிற முயற்சியால் நீ புரிந்துகொண்டுவிட்டாய். உனது விசாரத்தை அவ்வாறே தொடர்ந்து செய்து, அந்த வாக்கியத்தில் உள்ள "அது" என்பதன் பொருளையும் உணர்வாயாக.

51-52. சீடன்: குருவே! "நீ" என்பதை மறைக்கும் கோசங்களும், அதற்குச் சாட்சியும் இருக்கின்றன என்று சொல்வதுபோல, "அது" என்பதன் நேர் பொருள் மற்றும் உட்பொருள் என்ன என்பதைத் தயவு கூர்ந்து சொல்லுங்கள்.

குரு : பிரபஞ்சத்தில் இருப்பவைகளைப் பார்த்தால் இருப்பு-ஒளிர்வது-இன்பம்-பெயர்-உருவம் என்ற ஐந்து அம்சங்களைத் தவிர, பஞ்ச கோசங்கள், மற்றும் பானை போன்ற பொருட்கள் என்றனைத்தும் நிறைந்து கிடக்கின்றன.

சீடன்: வெளியில் காணப்படும் பொருட்களுக்கு உள்ள அந்த ஐந்து அம்சங்களை விளக்கிச் சொல்லுங்கள்.

குரு : ஒரு பானை இருக்கிறது என்பது அதன் "இருப்பு" அம்சம்; அது தெரிகிறது என்பது அதன் "ஒளிர்வது" என்பதன் அம்சம்; அது தேவையாக இருக்கிறது, அதனால் நமக்குப் பிடித்திருக்கிறது என்பது அதன் "இன்பம்" அம்சம்; அதைப் பானை என்று நாம் குறிப்பிடுவது அதன் "பெயர்" அம்சம்; அதற்கு ஓர் வடிவம் இருப்பது அதன் "உருவம்" அம்சம். இவ்வாறே எல்லாப் பொருளுக்கும் அம்சங்கள் இருக்கின்றன. இந்த ஐந்து அம்சங்களில் முதல் மூன்று பிரம்மத்தைச் சார்ந்தவை; கடைசி இரண்டும் உலகத்தோடு தொடர்பு கொண்டவை.

"அது" என்பதன் நேரடி அர்த்தம் உலகம் சம்பந்தப்பட்டது. அதாவது பெயரையும், உருவத்தையும் குறிப்பிடுவது. ஆனால் அதன் உட்பொருளோ முதல் மூன்று இருப்பு-ஒளிர்வது-இன்பம் அம்சங்களின் ஒரு கலவையாக இருந்து பிரம்மத்தோடு தொடர்பு கொண்டது. பஞ்ச கோசங்களுக்கும், அவைகளைச் சாட்சியாகப் பார்க்கும் ஆன்மாவுக்கும் வெளிப்படையாகத் தெரியும் வேற்றுமையை எவ்வாறு அநாதியான அறியாமை மறைக்கிறதோ, அதேபோல பிரம்ம அம்சங்களான இருப்பு-ஒளிர்வது-இன்பத்திற்கும் உலக

அம்சங்களான பெயர்-உருவத்திற்கும் உள்ள வேற்றுமையை அறியாமை மறைக்கிறது. அது போலவே விசாரம் மறைத்திருக்கும் தன்மையை அகற்றும் போது, இருப்பு-ஒளிர்வது-இன்பமாவது பெயர்-உருவத்தில் இருந்து வேறானவை என்பது நன்கு புலப்படும்.

53-54. சீடன்: "அது நீ" என்று குறிப்பிடுகிற மகாவாக்கியத்தில் உள்ள "அது" மற்றும் "நீ" என்பதன் நேரடி மற்றும் உட்பொருளை அறிந்துகொள்வதால் என்ன பலன் கிடைக்கிறது?
குரு : பஞ்ச கோசங்களைச் சாட்சியாகப் பார்க்கும் "நீ"யும், பெயர்-உருவத்தைக் கடந்து இருக்கும் இருப்பு-ஒளிர்வது-இன்பமாகிய "அது"வும் ஒன்றே, வெவ்வேறு அல்ல என்றே மகாவாக்கியம் கூறுகிறது. இதுதான் "அது" மற்றும் "நீ" என்பதன் உட்பொருள் ஆகும். ஒருவனின் பஞ்ச கோசங்கள், "நீ" என்பதன் நேரடி அர்த்தம் மற்றும் உலகத்தில் உள்ள பெயர்-உருவங்கள், "அது" என்பதன் நேரடி அர்த்தம் இவைகளுக்குள் ஒற்றுமை ஏதும் இருக்க முடியாது. இதிலிருந்து பஞ்ச கோசங்கள், பெயர்-உருவங்கள் என்றனைத்துமே மாயங்கள் என்று தெரிகிறது. இவ்வாறாக சாட்சியும், பிரம்மமும் ஒன்றே என்று அறிந்துகொள்வதே அதன் பலனாகும்.
சீடன்: அவைகள் எப்படி ஒன்றாக முடியும்?
குரு : இருப்பது என்பதே சத்-சித்-ஆனந்தமாக இருப்பது என்பதால், அவை இரண்டும் ஒன்றே என்றாகிறது. ஒரு பானைக்குள் உள்ள இடைவெளியான ஆகாயமும், அதற்கு வெளியே உள்ள ஆகாயமும் ஒரே தன்மைகள் கொண்டுள்ளதால் அவை இரண்டும் ஒன்றே என்பது போல சாட்சியும், பிரம்மமும் சத்-சித்-ஆனந்தம் என்ற ஒரே தன்மைகள் கொண்டுள்ளதால் அவை இரண்டும் ஒன்றே என்றாகிறது. பானைக்கு உள்ளிருக்கும் ஆகாயமே வெளியேயும் இருகிறது; அதுபோலவே வெளியே இருக்கும் ஆகாயமே உள்ளேயும் இருக்கிறது. அது போலவே சாட்சிதான் பிரம்மம்; பிரம்மமே சாட்சியாக இருக்கிறது.

55-56. எதனையும் சாராது தூய்மையாகவும், முழுமையுடனும் இருக்கிற பிரம்மம், ஒரு சாட்சியாக இருப்பதால் எந்தப் பக்கமும் சாயாத முழுமையாகவும் இருக்க வேண்டும். அதனால் ஆன்மா பகுக்கப்படாத ஒரு தொடர்ந்த ஆனந்தமயமாக இருக்கவேண்டும்.
சீடன்: இதை அறிந்துகொள்வதால் என்ன பயன்?
குரு : பஞ்ச கோசங்கள், மற்றும் வெவ்வேறு பொருட்களின் பெயர்கள், உருவங்கள் என்றனைத்துமே பொருட்படுத்த முடியாதவை என்றும், அவைகள் உள்ள பொருளாகிய ஒன்றின் மேல் படர்ந்த மேல்பூச்சுக்கள் என்றும், மாயங்களாகிய அவைகளைக்கொண்டு எந்தப் பயிற்சியும் மேற்கொள்ள முடியாது என்றும், அவைகளின் அடித்தளமாகிய பிரம்மமே சச்சிதானந்த சொரூபமாக உள்ள ஆன்மா என்றும், அந்த பிரம்மானந்தத்தை நாம்

அடைவதற்கு “அந்தப் பிரம்மமே நான்” என்ற உணர்வை நாம் பெறுவதும் ஆகிய இவைகள் எல்லாமே நமக்குக் கிடைத்துள்ள அறிவினால் வந்த பலன்கள் தான். இத்துடன் மனனம் பற்றிய இந்த அத்தியாயம் முற்றுப்பெறுகிறது.

57. அறிவுள்ள மாணவன் இதனைப் படித்து, அதன்படி பயிற்சி செய்தால் சத்-சித்-ஆனந்தம் என்றாகவே இருக்கும் பிரம்மத்தைத் தன்னில் உணர்வான்.

# 6. வாசனாக்ஷயம் : வாசனைகளை (கற்பிதங்களை) நீக்குவது

1. இதற்கு முன் வந்த ஆத்யரோபம், அபவாதம், சாதனா, ச்ரவணம், மனனம் என்ற ஐந்து அத்தியாயங்களைத் தொடர்ந்து இந்த அத்தியாயம் வருகிறது. ஆன்மாவை உணர்ந்துகொண்டு, அதைத் தியானித்ததால் அதைப் பற்றிய அறிவைப் பெற்ற சாதகனுக்கு, குரு மேலும் இவ்வாறு சொல்வார்.

2. புத்திசாலி மகனே! உனக்கு மேலும் அறிவுறுத்த சாஸ்திரங்களில் ஏதும் இல்லை. அவை கூறுவது எல்லாவற்றையும் நீ செய்து முடித்துவிட்டாய். இனிமேல் நீ உன் ஆன்மாவில் லயித்து தியானிக்க வேண்டும். "அன்பார்ந்தவனே! ஆன்மாவைப் பற்றி நீ கேட்க வேண்டும், சிந்திக்க வேண்டும், தியானிக்க வேண்டும்" என்றே சாஸ்திரங்கள் கூறுகின்றன. மனத்தால் ஆன்மாவைப் பற்றித் தொடர்ந்து எண்ணிக்கொண்டு இருந்த நீ இனிமேல் அதைத் தியானிக்கத் தொடங்க வேண்டும். இந்த நிலையில் நீ சாஸ்திரங்களைக் கைவிடலாம்.

3-6. சீடன்: சாஸ்திரங்களைக் கைவிடுவது சரியா?

குரு : ஆம், அது சரியே. விசாரம் செய்து எதைத் தெரிந்துகொள்ள வேண்டுமோ அதை நீ தெரிந்துகொண்டு விட்டாய். அதனால் தயங்காமல் நீ அவைகளைக் கைவிடலாம்.

சீடன்: ஆனால் சாகும் வரை ஒருவன் சாஸ்திரங்களைக் கைவிடல் ஆகாது என்று அவைகளே கூறுகின்றனவே?

குரு : அவைகள் உண்மைகளை எடுத்துரைப்பதற்காக எழுதப்பட்டவைகள். உண்மையை உணர்ந்தபின் அதற்கு மேல் அவைகளுக்கான அவசியம் எங்கிருக்கிறது? அதை மேலும் படித்துக் கொண்டிருப்பதால் காலமும், உழைப்பும்தான் விரயம் ஆகிக்கொண்டிருக்கும். அதனால் அவைகளைக் கைவிடு. மாறாக இடைவிடாத் தியானத்தைச் செய்.

சீடன்: இவ்வாறு செய்வதற்கு சாஸ்திரங்களில் ஆதாரம் இருக்கிறதா?

குரு : இருக்கிறது.

சீடன்: எவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது?

குரு : ஆன்மாவைப் பற்றித் திரும்பத் திரும்பக் குருவிடம் கேட்டறிந்து, அதைப் பற்றி மேலும் சிந்தித்து, அதை நேரடியாக அறிந்தபின், ஒரு பிணத்தைச் சுட வைக்க உதவும் தடியை எரிந்துகொண்டிருக்கும் அந்தச் சிதையிலேயே கடைசியில் தூக்கி எறிவதுபோல, சாஸ்திரங்களைக் கைவிட வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆன்ம விசாரத்தில்

ஈடுபடும் சாதகன் சாஸ்திரங்களில் இருந்து ஆன்மாவைப் பற்றிய மறைமுக அறிவைப் பெற்ற பின், அதற்கான பயிற்சிகளை மேற்கொண்டு, அதைப் பற்றி மேலும் விசாரம் செய்து, அதைப் பற்றிய நேரடி அறிவை அனுபவ வாயிலாகப் பெறவேண்டும். அதன் பின், எவ்வாறு அரிசியைப் பொறுக்கும் ஒருவன் தவிட்டை உதறித் தள்ளுவானோ, அதேபோல சாஸ்திரங்களைக் கைவிட வேண்டும். முக்தியை நாடிச் செல்லும் ஒருவன் சாஸ்திரங்களின் துணையைக் கொண்டு, அவை மூலம் ஆன்மாவைப் பற்றிய அறிவைப் பெற்று, மேலும் அதைப் பற்றி சிந்தித்துச் செயல்பட வேண்டும். அப்புறம் அவன் வேதாந்தம் பற்றிப் பேசிக்கொண்டே இருக்கக்கூடாது; ஏன், அதைப் பற்றி சிந்திக்கவும் கூடாது. பேசுவதால் பேச்சு என்பதே ஒரு பாரமாக ஆகிறது; அதேபோல சிந்திப்பது என்பதால் மட்டுமே எந்தவொரு பயனும் விளைவதில்லை. அதனால் படித்து என்ன என்பதை நன்கு தெரிந்துகொள்; அதற்கு மேல் படித்துக்கொண்டே இருப்பதை நிறுத்திவிடு. ஒரு நல்ல சாதகன் பேசுவதையும், சிந்திப்பதையும் நிறுத்திவிட்டு, ஆழ்ந்த தியானத்தில் ஈடுபடுகிறான். சாஸ்திரங்கள் இதைத்தான் சொல்கின்றன.

7. அறிவார்ந்த மகனே! எதை அறிந்துகொள்ள வேண்டுமோ அதை அறிந்துகொண்டு விட்டதனால், நீ கற்றவை உன்னுள் என்ன தாக்கம் செய்திருக்கிறதோ அதை அழித்துவிடு.
சீடன்: கற்றவைகள் என்பவை எவை?
குரு : வேதாந்த நூல்களை மேலும் மேலும் படித்து, அவைகள் கூறுவதன் பொருளை அறிந்துகொண்டு, அதை மனப்பாடம் செய்துகொண்டு, அதைப் பற்றியே எப்போதும் நினைத்துக்கொண்டு இருப்பதையே மனம் விரும்புகிறது. அவ்வாறு விரும்புவது தியானத்திற்கு இடையூறாக இருக்கும் என்பதால் அறிவுள்ள சாதகன் அத்தகைய மனோநிலையில் இருந்து விடுபட எல்லா முயற்சிகளும் எடுத்துக்கொள்ள வேண்டும். அடுத்தபடியாக உலக நடவடிக்கைகள் தொடர்பாக ஏற்கனவே அவன் மனதில் குடிகொண்டு மறைந்து இருக்கும் வாசனைகள் அகற்றப்பட வேண்டும்.

8. சீடன்: அவ்வாறு மறைந்திருக்கும் வாசனைகள் என்றால் என்ன?
குரு : இது என் தேசம், என் குடும்பம், என் வாரிசுகள், எங்கள் குல வழக்கம் என்று நாம் நினைப்பதெல்லாம் உறைந்துபோய் கற்பிதங்களாக நம் மனதில் இருக்கும் வாசனைகளே. எவரோ ஒருவர் அவைகளைப் பற்றிப் பெருமையாகவோ, சிறுமையாகவோ பேசினால் உலகத்தைப் பற்றி நம்முள் மறைந்து இருக்கும் கற்பிதங்கள் வெளிப்படும். அவைகளைக் கைவிடு. அதே போல, பின்னர் நம் உடலைப் பற்றி நமக்கு இருக்கும் தேகவாசனைகளையும் விட்டொழிக்க வேண்டும்.

9-13. சீடன்: அவைகள் என்னென்ன?

குரு : தனக்கு இவ்வளவு வயது ஆகிறது, தான் இளைஞன் அல்லது முதியவன், தனக்கு நீண்ட ஆயுட்காலமும் ஆரோக்கியமும் வேண்டும் அல்லது உடல் வலிமையும் அழகும் வேண்டும் என்றெல்லாம் தன் உடலைப் பற்றிப் பொதுவாக நினைப்பது தேகவாசனைகளே. உலக விஷயங்களில் ஒரு பேரார்வமும், தனது உடலைப் பற்றிய விருப்பங்களும் இருப்பது ஒருவன் மனத்தைத் திசை திருப்பி அவனைத் தியானம் செய்யவிடாமல் தடுக்கும். இவ்வாறான அனைத்து விஷயங்களும், பொருட்களும் நிலையற்றவை என்பதால் அவைகளைக் கைவிட வேண்டும். அதன் பின் போகவாசனைகள் எனப்படும் நுகர்வதால் இன்பம் தரும் உலக இன்பங்களைத் துறக்க வேண்டும்.

சீடன்: இவைகள் என்னென்ன?

குரு : "இது நன்றாக இருக்கிறது, இது எனக்கு வேண்டும்; இது எனக்குப் பிடிக்கவில்லை, அதனால் இது என்னை விட்டுப் போகட்டும்; இப்போது எனக்கு லாபம் வந்திருக்கிறது, அது மேலும் வரவேண்டும்" என்பது போல நமக்கு வரும் எண்ணங்களே நமது உலக இன்பங்கள்.

சீடன்: அதை எப்படித் தவிர்ப்பது?

குரு : நம் உடலில் இருந்து வெளியேறும் கழிவுப் பொருட்களை நாம் எவ்வளவு வெறுப்போமோ அவ்வளவு வெறுத்து, அவைகள் மேல் சிறிதளவும் பற்று வைக்காமல் இருந்தால் அவைகளை அண்டவிடாது தவிர்க்கலாம். அவ்வாறான மதிமயக்கும் ஆசைகளுக்கு பற்றின்மை ஒன்றே சரியான மருந்து. அப்படிச் செய்த பின், காமம், கோபம், பேராசை, மதி மயக்கம், கர்வம், பொறாமை என்ற ஆறு வகையான பேராவல்களை மனத்தில் இருந்து அகற்றவேண்டும்.

சீடன்: அதை எப்படிச் செய்வது?

குரு : புனிதமான விஷயங்களைப் பேசுபவர்களுடன் மட்டுமே தோழமை கொள்ளுதல், வறியவர்களிடம் இரக்கம் காட்டல், நல்ல மனம் கொண்டவர்களின் மகிழ்வில் பங்கு பெறுதல், பாவச்செயல் புரிபவர்களின் தவறுகளை மன்னித்தல் போன்றவைகள் மூலம் அதைச் செய்யலாம்.

அடுத்தபடியாக விஷயவாசனைகள் என்று கூறப்படும், ஓசை போன்றவைகளைக் கொண்டு புலன்கள் மூலம், உலகில் இருக்கும் பொருட்களின் பின்னால் நாம் செல்வதை நிறுத்த வேண்டும். ஐம்புலன்கள் மூலம் நாம் நமக்கே கற்பித்துக்கொண்டதானால் நம்முள் படிந்துள்ள வாசனைகள் அவை.

சீடன்: அந்தக் கற்பிதங்களை எப்படிப் போக்குவது?

குரு : ஆறு நிலைகள் கொண்ட கட்டுப்பாட்டின் மூலம் அவைகளைப் போக்கலாம். அந்த நிலைகள் (சம) மனத்தை வெளியே விடாது உண்முகப்படுத்தல், (தம) புலன்களைக் கட்டுப்படுத்தல், (உபராதி) புலன்களை ஈர்க்கும் பொருட்களை நினைக்காது இருத்தல், (சமாதான) சகிப்புத்தன்மையுடன் இருத்தல், (ஸ்ரத்தா) மனத்தை ஆன்மா மேல் குவித்தல் என்பன ஆகும்.

அடுத்தபடியாக, தொடரும் எண்ணங்களால் வரும் கற்பிதங்கள் அகற்றப்பட வேண்டும்.

14-15. சீடன்: அவை என்னென்ன?

குரு : புலன்கள் கட்டுக்குள் இருந்தாலும், மனத்தளவில் “அது அங்கே இருக்கிறது. இது இங்கே இருக்கிறது. இது இப்படிப்பட்டது. அது இப்படியாகவும் இருக்கலாம், அப்படியாகவும் இருக்கலாம்” என்றபடி பொருட்கள் சம்பந்தப்பட்ட எண்ணங்கள் தொடர்ந்தபடி இருக்கும். விஷயங்களைப் பற்றி சதா சிந்தித்துக்கொண்டே இருப்பதால் மனத்திற்கு அந்த விஷயங்களின் மேல் ஒரு பற்று உண்டாகி அவை தொடர்பான எண்ணங்களே இந்த வகையான வாசனைகள்.

சீடன்: அவற்றை எப்படித் தடுப்பது?

குரு : நம் புலன்களை ஈர்க்கும் பொருட்கள் எவ்விதப் பயனையும் தராத பகல் கனவு போல என்று அறிவால் ஆராய்ந்து அறிந்து, அவைகளை மனத்தாலும் நினைக்காமல் இருப்பதன் (உபராதி) மூலமே அதைத் தடுக்க முடியும்.

16. இவ்வாறாக ஒவ்வொரு விதமான வாசனையை நல்ல விதமாகத் தடுத்து வரும்போது, நம்முள் மறைந்து இருப்பன எல்லாவற்றுள்ளும் மிக மோசமான கருத்தான, தன்னைத் தவறாக நிர்ணயிக்கும் போக்கைச் சரி செய்வதற்குச் சீரிய முயற்சி எடுக்கவேண்டும்.

17. சீடன்: தன்னைத் தவறாக நிர்ணயிக்கும் போக்கு (விபரீத வாசனை) என்றால் என்ன?

குரு : அநாதி காலத்தில் இருந்து விளங்கும் அறியாமையால், ஆன்மா அல்லாதவைகளோடு ஆன்மாவைத் தொடர்புபடுத்தி “நான் உடலே” என்ற கருத்தை மனதில் ஆழ விதைத்திருப்பதுதான் அந்தப் போக்கு. அந்த அறியாமை வேர்விட்டு பூதாகாரமாக வளர்ந்திருப்பதால் பிரம்மத்தைத் தீவிரமாக தியானிப்பதால் மட்டுமே அதை அகற்ற முடியும்.

18-20. சீடன்: அந்தப் பயிற்சியை எப்படிச் செய்வது?

குரு : உடல், ஐம்புலன்கள் போன்றவை ஆன்மாவல்லாதவைகள் என்பதனால் அவைகளை ஒதுக்கிவிட்டு, தன் உண்மை சொரூபத்தை மறைத்துக்கொண்டிருக்கும் கோசங்களையும் ஓர்

சாட்சியாக முழு உணர்வோடு பார்த்துக்கொண்டிருக்கும் அந்தப் “பிரம்மமே நான்” என்பதை மனத்தில் இருத்தி செய்யப்படும் பயிற்சிதான் அது. தனியாக இருக்கும்போது பிரம்மத்தைத் தியானித்துக்கொண்டும், மற்றவர்களுடன் இருக்கும்போது பிரம்மத்தைப் பற்றியே பேசிக்கொண்டும் அவர்களுக்குக் கற்பித்துக்கொண்டும், அதைப் பற்றி அல்லாது வேறெதையும் எண்ணுவதையோ பேசுவதையோ தவிர்த்துக்கொண்டும் இருந்து, இவ்வாறாக பிரம்மத்திலேயே மனதைக் குவித்துக்கொண்டு இருப்பதே அந்தப் பயிற்சி.

तच्चन्तिनं तत्कथनमन्योन्यं तत्प्रबोधनम् |
एतदेकपरत्वं च तदभ्यासं वदिर्बुधाई || - யோக வாசிஷ்டம் : உட்பதி பிரகரணம் லீலோபாக்யானம்

என்றே சான்றோர்கள் கூறியிருக்கிறார்கள். இவ்வாறு பயிற்சி செய்து அகங்காரத்தை அழித்து, “எனது” என்று சொல்ல வைக்கும் மமகாரத்தையும் ஒழிக்கவேண்டும்.

21-22. சீடன்: இந்தக் கருத்தின் தன்மை என்ன?

குரு : “நான் உடல்” என்ற எண்ணத்தில் தொடங்கி அதன் தொடர்பான என் பெயர், உருவம், நான் அணிந்திருக்கும் உடை, பிறந்திருக்கும் சாதி, எனது பழக்க வழக்கங்கள், நான் செய்யும் தொழில் என்றிவ்வாரானவைகளை “தனது” என்று சுவீகரித்துக்கொள்ளும் மனப்பான்மையே அதன் தன்மை.

சீடன்: அது எப்படி நீங்கும்?

குரு : என்றும் இருக்கும் ஒரேயொரு உண்மையைக் குறித்துச் செய்யப்படும் ஆழ்நிலைத் தியானத்தால் அது நீங்கும்.

சீடன்: எப்படி?

குரு : உடல் முதலானவைகள், மற்றும் அதன் தேவைகள், விருப்பங்கள், பாதிப்புகள், மகிழ்ச்சிகள், செயல்கள் என்று இவ்வாறானவைகள் அனைத்துமே ஆன்மா எனும் பேரறிவை ஆதாரமாகக்கொண்டு தோன்றும் அறியாமையின் பிரதிபலிப்புகளே. அவைகள் சிப்பியில் தோன்றும் வெள்ளி, தங்கத்தில் செய்த ஆபரணம், கானல்நீரில் தோன்றும் நீர், ஆகாயத்தில் காணப்படும் நீல நிறம், நீரில் தோன்றும் அலைகள் என்றவைகளைப் போல, இருக்கும் ஆன்மாவின்கண் தோன்றும் இல்லாத மாயங்களே. உண்மையில் இருக்கும் ஆன்மாவைத் தவிர வேறெதுவும் கிடையாது. இதற்கு அடுத்தபடியாக, பேத வாசனை எனப்படும் பகுத்துப் பார்க்கும் பார்வை அகல வேண்டும்.

23-25. சீடன்: பகுத்துப் பார்க்கும் பார்வை என்றால் என்ன?

குரு : “நான் இதற்கெல்லாம் சாட்சி; காணப்படும் அனைத்தும் உணர்வற்றவை, மாயத் தோற்றங்கள்; இதுதான் உலகம்; இவர்கள் ஜீவர்கள்; இவன்தான் சீடன், இவர் குரு; இது இறைவன்” என்று வெளிப்படுத்தப்படும் எண்ணங்கள் எல்லாமே பகுப்பதால் வரும் பார்வைகளே. அத்வைத ஞானத்தைப் பயிலப் பயில இவைகள் அகல வேண்டும்.

களங்கம் ஏதுமில்லாமல், உண்மை-பொய், உள்-வெளி, அறியாமை அல்லது மாயத் தோற்றங்கள் என்று எதையும் வித்தியாசப்படுத்திப் பார்க்காமல், இருப்பது ஒன்றே, அது சச்சிதானந்தமே என்பதை அனுபவ வாயிலாக உணர்வதற்கு இந்தப் பயிற்சி தேவை. நிர்விகல்ப சமாதி எனப்படும் எதையும் பிரித்துப் பார்க்காத சமநிலையைப் பயில்வதால் அந்த அனுபவம் கைகூடும். அந்த அனுபவம் வாய்த்துவிட்டால் பிரம்மத்தைத் தவிர வேறெதுவும் தெரியாது.

அவ்வாறு பகுத்துப் பார்ப்பதைக் கை கழுவிய பின், அத்வைதம் எனும் எண்ணத்தோடு ஒருவனுக்கு இருக்கும் ஈடுபாட்டையும் விடுவது அவசியம்.

26-27. சீடன்: அதை எப்படிச் செய்வது?

குரு : ஒன்றே உள்ளது, இரண்டற்றது என்ற நிலையையும் கடந்து, இருப்பதைப் பற்றி எதுவும் சிந்திக்கவோ, சொல்லவோ கூட முடியாது, எப்படி உள்ளதோ அது உள்ளபடி அப்படியே அந்த இருப்பில் கலப்பதே முடிவான நிலை. அதுதான் முக்தி எனும் பரமானந்த நிலை; அதற்கு மேல் வேறெதுவும் இல்லை. மனத்தில் மறைந்து இருக்கும் வாசனைகள் எல்லாமே ஒட்டுமொத்தமாக அகற்றப்பட்ட பின், பேச்சு எண்ணங்கள் இவற்றையெல்லாம் தாண்டி, இருக்கிறதோ இல்லையோ என்று கூடத் தெரியாதபடி பளிங்கு போல, களங்கம் இல்லாத ஓர் உணர்வாக அது உள்ளது. இவ்வாறு எந்தவொரு நிலைப்பாடும் எடுக்காது, எதனாலும் களங்கம் அடையாது ஒரே நிலையில் நிற்கும் மனமே, உயிருடன் இருக்கும்போதே அடையப்பட்டுள்ள விடுதலை அல்லது ஜீவன் முக்தி என்ற நிலையில் இருக்கிறது எனப்படுகிறது.

28. ஆன்மாவைப் பற்றிய நேரடி அறிவு கிடைக்கப்பெற்று விட்டாலும், இந்த முக்தி நிலையை அடையாத வரை சாதகன் தனது மனத்தையும், புலன்களையும் கட்டுக்குள் வைத்திருந்து பிரம்மத்தைப் பற்றிய தியானத்தில் சதா சர்வகாலமும் நிலைத்து இருக்க வேண்டும்.

இவ்வாறாக இந்த அத்தியாயம் முற்றுப்பெறுகிறது.

# 7. சாக்ஷாத்காரம்: ஆன்மாவை அனுபவித்து உணர்வது

1. பிரம்மத்தை உணர்ந்துகொள்வதற்கு, ஆன்மாவைப் பற்றிய நேரடி அறிவை முதலில் பெறவேண்டும் என்றும், அதன் பின் மனதில் குடிகொண்டுள்ள வாசனைகளை முற்றும் களைய வேண்டும் என்றும் முந்தைய அத்தியாயத்தில் கூறப்பட்டது. இங்கு பிரம்மத்தை உணர்வது பற்றி மேலும் சொல்லப்பட்டிருக்கிறது.
குரு : புத்திசாலி மகனே! ஆன்ம விசாரம் செய்து நீ அதைப் பற்றிய நேரடி அறிவைப் பெற்றுவிட்டதால், இனி தியானம் செய்யத் துவங்கலாம்.

2. சீடன்: ஆன்மாவைப் பற்றிய நேரடி அறிவை நான் அடைந்து, அதனால் எனது முயற்சி முடிந்துவிட்டது என்பதால் நான் ஏன் இன்னமும் தியானப் பயிற்சிகள் செய்யவேண்டும்? அதைச் செய்து அடைவதற்கு வேறு என்ன இருக்கிறது?

3-4. குரு : மனனம் செய்ததால் நேரடி அறிவு பெற்றுவிட்டாலும், தியானம் செய்யாமல் பிரம்மத்தை உணர முடியாது. “தான் பிரம்மம்” என்பதை அனுபவத்தில் உணர்வதற்குத் தியானம் அவசியம்
செய்யவேண்டும்.

5-6. பிரம்மத்தை உணர்வதற்குத் தியானம் செய்யச் சொல்கிறீர்கள். புனித நூல்களை ஆராய்ச்சி செய்து கற்றதால் எனக்கு நேரடி அறிவு கிடைத்துவிட்டது. இனியும் நான் எதற்காகத் தியானம் செய்யவேண்டும்?
குரு : புனித நூல்களை ஆய்ந்து கற்றறிந்ததால் நேரடி அறிவு கிடைத்துவிட்டது என்று நீ சொன்னால் அதை யார் மறுக்கமுடியும்? யாராலும் முடியாது. அத்தகைய ஆய்வு நிச்சயமாக பிரம்மத்தை உணர்வதில் முடிய வேண்டும்.
அத்தகைய நூல்கள் சொல்வதன் அர்த்தத்தை இப்போது பார்ப்போம். யார் எவர் என்பதை அதில் எப்படி மறைமுகமாகச் சொல்லப்பட்டிருக்கிறது? ஒருவனின் பஞ்ச கோசங்களைச் சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருக்கும் உணர்வே அது என்கிறது. அதுவே “நீ” என்று சொல்லி, பிரம்மமே “அது” என்றும் சொல்கிறது. அதாவது பரந்து உள்ள பிரம்மத்தின் சாயலாக ஒருவனிடம் குறுகி உள்ள ஜீவனாக அது இருக்க முடியாது. ஆய்வு செய்ததால் சாட்சியாக இருக்கும் உணர்வும் பிரம்மமும் ஒன்றே என்பது உறுதியாக விளங்கி விட்டது. உணர்வே பிரம்மம் என்ற கண்டுபிடிப்பால் உனக்கு என்ன லாபம்?

7. சீடன்: புனித நூல்களை ஆராய்ச்சி செய்து சாட்சியே பிரம்மம் என்றும், பிரம்மமே சாட்சி என்றும் ஒருவன் கற்றுக்கொண்ட பின் "அந்த அறிவால் ஒருவனுக்கு என்ன பயன்" என்ற கேள்வியை எப்படிக் கேட்கலாம்? அதன் பயன்தான் வெளிப்படையாகத் தெரிகிறதே. ஆய்வுக்கு முன்பு அவனுக்குத் தான் யார் என்பது தெரியாது இருந்தது; இப்போது அவனுக்கு அது தெரிந்துவிட்டதே.

குரு : நூல்களைக் கற்றதன் முடிவில் சாட்சியே பிரம்மம் என்றும், இடைவிடாத தூய்மையான உணர்வாக இருக்கும் பிரம்மமே சாட்சி என்றும் நிச்சயமாக அறிந்துகொண்டு விட்டாய். அவ்வாறு இருந்தும் இந்த அறிவு ஒரு முடிவானதும் அல்ல, உனக்குப் பயன் கொடுப்பதாகவும் இல்லை. கோட்டையில் உள்ள அரசன் உலகிற்கே ஒரு சக்கரவர்த்தி என்பதை ஒரு தெருப் பிச்சைக்காரன் முதலில் அறியாமல் இருந்து, பின்பு அறிந்துகொண்டு விட்டான் என்று வைத்துக்கொள். அப்படிக் கிடைத்த புதிய அறிவால் அந்தப் பிச்சைக்காரனின் நிலையில் ஏதாவது மாற்றம் இருக்குமா? அந்த அறிவு அவனுக்கு எந்தவிதப் பலனும் கொடுக்காது.

8. சீடன்: விசாரத்திற்கு முன்பாக அறியாமை இருந்தது. விசாரத்திற்குப் பின் சாட்சியே பிரம்மம் என்ற அறிவு கிடைத்திருக்கிறது. இதுவே அதன் பயன்.

குரு : சரி, அதனால் இப்போது என்ன மாறியிருக்கிறது? உனக்கு அது தெரிகிறதோ இல்லையோ, சாட்சி எப்போதும் பிரம்மமாகத்தான் இருக்கிறது. அந்த அறிவு உனக்கு வந்துவிட்டதால் பிரம்மம் சாட்சியாகவில்லை. அந்த ஏழைப் பிச்சைக்காரனுக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், அரசன் ஒரு சக்கரவர்த்தியாகத்தான் எப்போதுமே இருந்திருக்கிறார். அவன் பெற்ற அறிவு அரசனை ஒரு சக்கரவர்த்தியாக ஆக்கவில்லை. சாட்சிதான் பிரம்மம் என்று நீ அறிந்துவிட்டதால் உனக்கு இப்போது என்ன வந்துவிட்டது? சொல், உன்னில் எந்த மாற்றமும் நிகழவில்லை.

9. சீடன்: ஏன் இல்லை? மாற்றம் இருக்கிறது. வேதங்கள் "நீ அதுவாக இருக்கிறாய்" என்று கூறுகின்றன. அதன் பொருள் என்ன என்று விசாரித்ததாலேயே எனக்குள் இருக்கும் பஞ்ச கோசங்களைச் சாட்சியாகப் பார்த்துக்கொண்டு இருப்பதே பிரம்மம் என்பதை அறிந்துகொண்டேன். அதனால்தான் வேறொரு மகா வாக்கியம் சொல்வது போல "நானே பிரம்மம்" என்று தெரிந்துகொண்டேன். சாட்சிதான் பிரம்மம் என்று அறியாமல் இருந்த எனக்கு இந்த அறிவு உதித்தது. இவ்வாறாக நான் பிரம்மத்தை உணர்ந்துகொண்டேன்.

குரு : எவ்வாறு நீ பிரம்மத்தை உணர்ந்துவிட்டதாகச் சொல்லிக்கொள்ள முடியும்? "நான் பிரம்மம்" என்று மகா வாக்கியம் சொல்வதாலேயே நீ பிரம்மாக இருக்கிறாய் என்பதை நீ புரிந்துகொண்டுவிட்டாய் என்றே இருக்கட்டும். இப்போது சொல், நான் என்று உன்னை

உணர்வது ஜீவாத்மாவா அல்லது அகந்தையா அல்லது வேறென்ன? பிச்சைக்காரனுக்கு அரசனைப் பற்றிய அறிவு வந்துவிட்டாலும் எவ்வாறு அவன் அரசனாக ஆகமுடியாதோ அவ்வாறே மாறும் இயல்புகளைக் கொண்ட அகந்தையும், என்றும் மாறாத ஆன்மாவும் ஒன்றாக இருக்க முடியாது.

10-14. சீடன்: நிச்சயமாக. விசாரம் செய்ததால் என்றும் மாறாத சாட்சி தன்னை அகந்தை என்று தவறாக எண்ணிக்கொண்டதை "நான் யார்" விசாரம் தெளிவாக்கியது. அதனால் சாதகனுக்கு "தான் நிலையாத அகந்தை அல்ல, உணர்வோடு நிலைத்திருக்கும் சாட்சி" என்று தெரிய வந்தது. அதனால் அந்த சாட்சி "தான் பிரம்மம்" என்று சொல்லிக்கொள்வது சரியானதே. இதில் என்ன மாறுபாடு இருக்க முடியும்?

குரு : "தான் பிரம்மம்" என்று சாட்சி சொல்கிறது என்று எவ்வாறு உன்னால் கூற முடியும்? எது அப்படிக் கூறுகிறது - மாறுதல்கள் காணாத சாட்சியா, அல்லது மாறும் அகந்தையா? சாட்சி அப்படிக் கூறுகிறது என்று சொன்னால் நீ தவறு என்று அர்த்தம். ஏனென்றால் என்றும் மாறாத சாட்சி "இல்லாத அகந்தை"யின் சாட்சியாக என்றும் மாறாதே இருக்கும். அது ஏமாற்றக் கூடியது அல்ல. அப்படி ஏமாற்றும் என்றால் அது ஓர் மாறாத தன்மை கொண்ட சாட்சியாக இருக்க முடியாது. மாறாத சாட்சி ஒன்றுக்கு "நான்" அல்லது பிரம்மம் என்பன போன்ற கருத்துக்கள் எதுவும் இருக்க முடியாது; அதனால் "நான் பிரம்மம்" என்ற எண்ணமும் இருக்க முடியாது. ஆகையால் சாட்சி அவ்வாறு கூறுகிறது என்று நீ சொல்வதற்கு எந்த முகாந்திரமும் இல்லை.

சீடன்: அவ்வாறானால் "நான் பிரம்மம்" என்று யாருக்குத் தெரிகிறது?

குரு : இதுவரை நாம் பார்த்ததில் இருந்து ஜீவாத்மா அல்லது "இல்லாத அகந்தை" இவர்களுக்குத் தான் அப்படித் தெரிந்திருக்க வேண்டும்.

சீடன்: எவ்வாறு அப்படிச் சொல்லமுடியும்?

குரு : தொடர்ந்து வரும் பிறப்பு-இறப்பு சுழலில் இருந்து விடுபட ஆசை கொண்டதனால், அறிவிலி ஒருவன் "நான் பிரம்மம்" என்ற கருத்தையே பயின்று கொண்டிருப்பான். அவ்வாறான அறியாமை சாட்சிக்குக் கிடையாது. அறியாமை இல்லை என்னும்போது அறிவும் கிடையாது. அறிவில்லாதவனே அறிவைத் தேடிப் போகவேண்டும். "இல்லாத அகந்தை" அல்லாது வேறு எவருக்கு அறிவின்மையோ, அறிவோ இருக்கும்? சாட்சியான ஆன்மாவை அடிப்படையாகக்கொண்டே அறிவோ, அறிவின்மையோ தோன்றுவதால், ஆன்மா அவைகளுக்கு அப்பால் இருக்கவேண்டும் என்பது ஒரு வெளிப்படையாகத் தெரிகிற உண்மையே. மாறாக "இல்லாத அகந்தை"க்கே அறிவும், அறிவின்மையும் இருக்கிறது என்பது தெளிவு. அதனிடம் "உன்னைப் பார்த்துக்கொண்டு ஒரு சாட்சி இருப்பது தெரியுமா?" என்று

கேட்டால் அது “சாட்சியா? யாரது? அப்படி ஒருவரையும் எனக்குத் தெரியாதே” என்றே சொல்லும். அவ்வாறு சொல்வதால் அந்த “இல்லாத அகந்தை”யின் அறிவின்மை தானே வெளிப்படுகிறது.

அவனுக்குள் ஒரு சாட்சி இருக்கிறது என்று மறைகள் சொல்லும் வேதாந்தக் கருத்துக்களைக் கேட்பதால், ஒருவனுக்கு சாட்சி என்று ஒன்று இருக்கிறது என்கிற மறைமுக அறிவு வருகிறது. அதன் பின் அவன் ஆன்ம விசாரம் செய்யும்போது, அது தானாகத் தெரிவதில்லை என்ற அறியாமைத் திரை விலக, அவன் ஆன்மாவைப் பற்றிய அறிவை நேரடியாகப் பெறுகிறான். இந்தக் கட்டத்திலும் “இல்லாத அகந்தை”யின் அறிவு நன்கு புலப்படுகிறது.

அந்தரங்கமாக ஒரு சாட்சி இருக்கிறது அல்லது இல்லை என்பதைப் பற்றிய அறிவோ, அறியாமையோ சாட்சிக்கு இல்லை; அது ஜீவனுக்குத்தான் இருக்கிறது. அதனால் அந்த ஜீவனுக்குத்தான் “நான் பிரம்மம்” என்ற அறிவு இருக்கிறது என்பதை நீ ஒப்புக்கொண்டே ஆகவேண்டும். மாறாத ஒரு சாட்சி இருக்கிறது என்பது மாறும் ஜீவனுக்கு இப்போது தெரிந்துவிட்டதால், ஜீவனே சாட்சியாக இருக்க இயலாது. அரசனைப் பிச்சைக்காரன் பார்த்துவிட்டதால், பிச்சைக்காரன் அரசனாக இருக்க முடியாது.

அதைப் போலவே ஜீவனும் சாட்சியாக இருக்க முடியாது. சாட்சியாக இல்லை என்பதால் மாறும் தன்மை படைத்த அது பிரம்மமாகவும் இருக்க முடியாது. ஆகையால் “நான் பிரம்மம்” என்ற அனுபவமும் உண்மையில் இருக்க முடியாத ஒன்றே.

15. சீடன்: சாட்சியைப் பார்ப்பதால் மட்டுமே “நான் சாட்சி” என்பதை நான் தெரிந்துகொள்ள முடியாது என்று எப்படிச் சொல்கிறீர்கள்? சாட்சியாக இருக்கும் உணர்வின் அடித்தளம்தான் தனது உண்மையான நிலை என்று அறிந்துகொள்ளாத ஜீவன், உண்மையில் இல்லாத அகந்தையும் தானும் ஒன்றே என்று நினைத்து வாழ்கிறான். ஆனால் தனது உண்மை நிலையை விசாரம் செய்து சாட்சியை அறியும் ஒருவன், எங்கும் பரவி முழுமையாக இருக்கும் பிரம்மனே சாட்சி என்றும் அதுவே தான் என்றும் அறிகிறான். இவ்வாறாக “நான் பிரம்மம்” என்று உணர்ந்த அனுபவம் உண்மையே.

குரு : ஜீவன் தன்னை சாட்சியாக அறிந்துகொண்டால் நீ சொல்வது எல்லாம் சரியே. சந்தேகம் எதுவுமில்லாமல் சாட்சியே பிரம்மம் என்பதும் சரியே. ஆனால் சாட்சியைப் பற்றிய அறிவே எவ்வாறு ஜீவனைத் தான் பிரம்மம் என்று உணரவைக்கும்? ஜீவன் சாட்சியாக இருந்தால் மட்டுமே, தான் ஒரு சாட்சி என்று அறிந்துகொள்ள முடியும். அரசனைப் பார்ப்பதாலேயே பிச்சைக்காரன் தான் அரசன் என்று நினைக்க முடியாது; ஆனால் அவன் அரசனாகிவிட்டால், தான் அரசன் என்று அறியமுடியும். அது போலவே மாறும் தன்மைகளைக் கொண்ட ஜீவன், தானே ஒரு சாட்சியாக மாறாமல் இருந்தால், தான் சாட்சி

என்றும் உணரமுடியாது. அவ்வாறு சாட்சியாக ஆகாதபோது எவ்வாறு எங்கும் பரவி முழுமையாக இருக்கும் பிரம்மமாக ஆக முடியும்? அந்த ஜீவனால் அது முடியாது. உலகத்திற்கே சக்கரவர்த்தியாக ஆகாது போனாலும், எப்படி கோட்டையில் அரசனைப் பார்த்து விட்டதாலேயே ஒரு பிச்சைகாரனால் அரசனாகக்கூட ஆக முடியாதோ, அதேபோலத்தான் இங்கும் நடக்கும். அதாவது ஆகாயத்தை விட நுண்ணியதாகவும், காண்பவன்-காட்சி-காணப்படுவன போன்ற முப்புடிகள் இல்லாமலும், என்றும் உள்ளதாக, தூயதாக, உணர்வாக, சுதந்திரமாக, உண்மையாக, மேன்மையுடன் கூடியதாகவும் ஆனந்தமாகவும் விளங்கும் சாட்சியைப் பார்த்த ஒரே காரணத்திற்காக, ஜீவன் அந்தச் சாட்சியாகவும் ஆக முடியாது; நீக்கமற நிறைந்திருக்கும் பிரம்மமாகவும் ஆக முடியாது; நிச்சயமாகத் "தானே அந்தப் பிரம்மம்" என்றும் உணரமுடியாது.

16. சீடன்: அவ்வாறானால் எப்படி ஒரே சந்திகள் கொண்ட இரண்டு சொற்களாகிய "நான்" மற்றும் "பிரம்மம்" என்பவைகளை இணைத்து "நான் பிரம்மமாக இருக்கிறேன்" என்ற மகாவாக்கியத்தை உருவாகியிருக்க முடியும்? அதாவது இலக்கண விதிகளின் படி புனித நூல்கள் ஜீவனுக்கும், பிரம்மத்திற்கும் ஒரே மதிப்பை அளித்திருக்கின்றன. அதை வேறெப்படிப் புரிந்துகொள்வது?

17-18. குரு : இணைக்கப்பட்டுள்ள இரண்டு சொற்களுக்கு இடையே உள்ள உறவு சில விதிகளுக்குக் கட்டுப்பட்டது, அல்லது அவ்வாறு கட்டுப்படாதது என்ற இரண்டு வகைகளில் இருக்கலாம். இந்த உதாரணத்தில் மறைகள் கட்டுப்படாத உறவைக் குறிக்கவில்லை.

சீடன்: அவ்வாறான கட்டுப்படாத உறவு என்றால் என்ன?

குரு : ஒரு குடுவைக்குள் இருக்கும் ஆகாயத்தின் தன்மை இன்னொரு குடுவைக்குள் இருப்பது போன்றோ, குடுவையின் வெளியே அது இருக்கும் அறையிலோ, அல்லது அதற்கும் வெளியிலோ உள்ளது போலவே இருக்கிறது. அதாவது ஆகாயம் எங்கிருந்தாலும் ஒரே தன்மை கொண்டதாய் இருக்கிறது. அதைப் போலவே காற்று, நெருப்பு, நீர், மண், சூரிய ஒளி போன்றவை அனைத்தும் இருக்கின்றன. அதே போல ஒரு பிரதிமையில் இருக்கும் இறைவனும் வேறெந்தப் பிரதிமையிலும் இருக்கிறார்; ஒருவனது சாட்சியாகிய உணர்வும் ஒருவருக்கு இருப்பது போலவே அனைவருக்கும் இருக்கிறது. ஜீவனுக்கும், பிரம்மத்திற்கும் இடையே இதைப் போன்ற உறவு இருப்பதாக மறைகள் குறிப்பிடவில்லை. அங்கு இருப்பது வேறு வகையான கட்டுப்பட்ட உறவாகும்.

சீடன்: அது என்ன?

குரு : அது வெளித் தோற்றங்களை விடுத்து அடிப்படையில் உள்ள ஒற்றுமையைக் குறிப்பதாகும்.

சீடன்: இதைச் சற்று விளக்கிச் சொல்லுங்கள்.

குரு : “நான் பிரம்மம்” என்பதாவது, உண்மையில் இல்லாத அகந்தையாகிய “நான்” என்பதை விடுத்து அதன்பின்பும் தானாக விளங்கும் தூய உணர்வே பிரம்மம் என்பதையே குறிக்கிறது. அதனால், அகந்தையை விடாமல் நான் என்று கூறிக்கொள்ளும் ஜீவன், பிரம்மத்தைப் பற்றி அறிந்தும் பிரம்மம் ஆகாத அந்த நிலையில், தானே பிரம்மம் என்று உணர்ந்து விட்டதாகச் சொல்வது ஒரு பொருந்தாக் கூற்றாகும். ஒரு பிச்சைக்காரன், முதலில் தனது பிச்சைத் தொழிலை விட்டுவிட்டு நாட்டை ஆளும் பொறுப்பை எடுத்துக்கொண்ட பின்பே, தான் அரசன் என்பதை உணரமுடியும். இறைவன் ஆகவேண்டும் என்று விரும்பும் ஒருவன் முதலில் கங்கையில் மூழ்கித் தன் பூத உடலைக் களைந்த பின்பே, உடலற்ற ஓர் உயர் பதவியை அடையலாம். சாதகன் ஒருவன் குவிந்த மனத்துடன் தான் செய்யும் தீவிரமான தியானத்தின் சக்தியால் தனது உடலை விட்டுவிட்டு இறைவனுடன் ஐக்கியம் ஆனதன் பின்பே, அந்த நிலையை அடைந்திருப்பதை அவனே உணரமுடியும். ஒரு பிச்சைக்காரன் அரசனானதை அறிந்துகொண்டதோ, ஒருவன் தேவ நிலையை அடைந்ததோ, அல்லது ஒரு சாதகன் இறைவனாகவே ஆனதோ, இவ்வாறான அனைத்து நிகழ்வுகளிலும் ஒருவன் தனது முந்தைய நிலையில் இருந்துகொண்டே அடுத்த உயர்ந்த நிலையிலும் இருப்பதாகக் கொள்ளமுடியாது. அது போலவே முக்திக்கு முயற்சிக்கும் சாதகனும் தான் ஜீவன் என்ற தன் தனித்தன்மையை இழந்த பின்புதான் “தான் பிரம்மம்” என்பதை அறிந்துகொள்ள முடியும். வேதங்கள் கூறும் வாக்கியங்களின் பொருளும் இவ்வாறே அமைந்திருக்கின்றன. ஒருவன் தன் தனித்தன்மையை இழக்காமல் பிரம்மன் ஆக முடியாது. ஆகையால் பிரம்மத்தை உணர்வதற்குத் தனித்தன்மை இழப்பு என்பது ஓர் அடிப்படை முக்கியத் தேவையாக அமைந்துள்ளது.

சீடன்: மாறும் தன்மை கொண்ட ஜீவாத்மா பிரம்மமாக இருக்க முடியாது. அவன் தன் தனித்தன்மையை இழந்துவிட்டால் மட்டும் எவ்வாறு பிரம்மமாக ஆகமுடியும்?

19. குரு : எவ்வாறு ஒரு புழு தன் தனித்தன்மையை இழந்தபின் குளவி ஆகிறதோ அதுபோலத் தான். குளவி ஒரு புழுவைத் தன் கூட்டிற்கு எடுத்து வருகிறது. குளவி அடிக்கடி தன் கூட்டிற்குப் பறந்து வந்து அந்தப் புழுவைக் கொட்டிக்கொண்டே இருந்து அந்தப் புழுவிடம் தன்னைப் பற்றிய ஒரு பயத்தை உண்டாக்குகிறது. அவ்வாறாகத் தொடரும் பயத்தில் குளவியையே நினைத்துக்கொண்டே இருக்கும் புழு ஒரு கட்டத்தில் தானே குளவியாக மாறிவிடுகிறது. அதேபோல எப்போதும் பிரம்மத்தைப் பற்றி நினைத்துத்

தியானித்துக்கொண்டு இருக்கும் ஜீவன் தன் தனித்தன்மையை இழந்து இறுதியில் பிரம்மமாகவே ஆகிவிடுகிறான். அதுதான் பிரம்மத்தை உணர்வது என்று சொல்லப்படுகிறது.

20. சீடன்: இந்த உதாரணம் எப்படிப் பொருந்தும்? ஏனென்றால் மாறுதல்களை அடையும் ஜீவனோ உண்மையில் உள்ள தூய பிரம்மத்தின் மேல் தவறாகத் தோற்றம் கண்டவன். இல்லாத ஒன்று தனது இல்லாத தன்மையை இழப்பதால் அது ஒன்றுமே இல்லாது போகிறது. அது எப்படி என்றும் உள்ள வஸ்துவாக ஆகமுடியும்?

21. குரு : எப்படி மேலே படர்ந்துள்ள இல்லாத தோற்றம், இருக்கும் அடித்தளமாக மாறமுடியும் என்ற உன் சந்தேகத்தை எளிதில் தீர்க்கலாம். எவ்வாறு சிப்பியில் காணப்படும் வெள்ளி நீங்கி சிப்பியே தங்குகிறது என்பதையும், கயிற்றில் தெரியும் பாம்பு காணாது போய் கயிறே கடைசியில் நிற்கிறது என்பதையும் பார். அது போலவேதான் இருக்கும் பிரம்மத்தில் காணப்படும் இல்லாத ஜீவனின் நிலையும்.

சீடன்: பிரம்மத்தின் மாயத் தோற்றங்கள் விதிகளுக்குக் கட்டுப்படாதவைகளாகவும் (நிருபாதிக பிரம்மம்) கட்டுப்பட்டவைகளாகவும் (சோபாதிக பிரம்மம்) இருக்கின்றன. இங்கோ ஜீவன் என்பவன், இரண்டாம் வகையைச் சேர்ந்ததாக இருந்து, மனம் எனப்படும் அந்தக்கரணத்தின் மேல் மட்டுமே விளங்கும்
தோற்றமாக இருக்கிறது. மனம் இருக்கும் வரை ஜீவன் ஆன்மாவின் தனிப்பட்டதொரு அம்சமாக விளங்குகிறது; மனமோ முந்தைய கர்மங்களின் பலனாக விளைந்தது. அந்தப் பலன்கள் தீர்ந்துபோகும்வரை ஜீவனும் இருந்தே தீரும். தனக்கு முன்னால் உள்ள கண்ணாடி அல்லது நீர்ப்பரப்பின் தன்மையைப் பொறுத்தே பிரதிபலிப்பு அமைவதுபோல, ஒருவனின் கடந்த கால வினைகளைப் பொறுத்தே அவனது மனமும், தனித்தன்மையும் அமையும். இவ்வாறாக விளங்கும் தனித்தன்மையைப் போக்குவது எப்படி?

குரு : மனம் உள்ளவரை ஒருவனது தனித்தன்மையும் தொடரும். எவ்வாறு ஒரு பொருளின் முன்னால் இருக்கும் கண்ணாடியை அகற்றிவிட்டால் அதன் பிரதிபிம்பமும் நீங்குமோ, அதேபோல தியானத்தின் மூலம் மனவோட்டத்தை நிறுத்திவிட்டால் அவனது தனித்தன்மையும் தானே மறையும்.

சீடன்: ஒருவனது தனித்தன்மை மறைந்துவிட்டால் ஜீவனும் இல்லாது போகிறது. இல்லாத அந்த வெட்டவெளியான அவன் பிரம்மமாவது எப்படி?

குரு : அதன் அடித்தளம் தெரியாவிட்டாலும் அதிலிருந்தும் வேறாக இல்லாமல், அதில் காணப்படும் மாயத் தோற்றம்தான் ஜீவன். அறியாமை அல்லது மனத்தில் தோன்றும் அது,

கனவில் காணப்பட்ட ஒருவன் இறுதியில் மறைவது போல, மனத்தின் மறைவோடு ஜீவன் மறைந்து அடித்தளம் மட்டுமே இறுதியில் மிஞ்சுகிறது.

22-23. சீடன்: அது எப்படி?

குரு : விழித்திருக்கும் ஒருவன் (விஸ்வன்) தூங்கும்போது தனது கனவில் வந்தால் அவன் "தைஜசன்" எனப்படுகிறான். அவ்வாறு கனவில் வரும் தைஜசன் நிச்சயமாக விஸ்வன் இல்லை என்றாலும் விஸ்வனுக்கு வேறானவனும் இல்லை. படுக்கையில் படுத்து நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருக்கும் விஸ்வன் தனது கை, கால்களைச் சிறிதும் அசைக்காது இருந்தும், தைஜசனோ சகல உலகையும் வலம் வந்து கொண்டு, பலவித செயல்களிலும் ஈடுபடுகிறான். அதனால் தைஜசன் நிச்சயமாக படுத்து உறங்கிக்கொண்டிருக்கும் விஸ்வன் இல்லை என்றாலும் அவனை விடுத்து வேறு ஒருவனாக இருக்க முடியுமோ? இருக்க முடியாது. ஏனென்றால் தூக்கத்தில் இருந்து எழுந்ததும் "நான் கனவில் பல இடங்களுக்குப் போனேன், பல வேலைகளைச் செய்தேன்" என்றோ "நிம்மதியாகத் தூங்கினேன்" என்றோ ஏதாவது சொல்கிறான். அதாவது அவன் தூக்கத்தில் அனுபவிப்பவனுடன் தன்னை ஐக்கியப்படுத்திக்கொண்டே அவ்வாறு பேசுகிறான் என்பதே இதிலிருந்து நன்கு தெரிகிறது. மேலும் அங்கு அனுபவிப்பவன் என்று சொல்வதற்கு வேறெவரும் கிடையாது.

சீடன்: விழித்துக்கொண்டு இருப்பவனும் இல்லை, வேறெவரும் இல்லை என்றால் கனவில் அனுபவித்தவன் யார்?

குரு : உறக்கத்தின் மாய சக்தியால் உருவான அந்த தைஜசன் கயிற்றில் காணப்பட்ட பாம்பைப் போல உண்மையில் இல்லாதவனே. கனவின் மாய சக்தி ஒரு முடிவுக்கு வந்ததும் கனவு காணும் அந்த தைஜசனும் மறைந்துபோய் அடிப்படை உண்மையில் உள்ள விஸ்வனாகவே விழித்து எழுகிறான். அதைப் போலவே, வெளியுலகில் காணப்படும் ஜீவன் என்றும் மாறாத பிரம்மமும் இல்லை, அதை விடுத்து வேறெதுவும் இல்லை. அறியாமையால் உருவாகியிருக்கும் அந்தக்கரணமாகிய மனத்தில் பிரம்மம் பிரதிபலிப்பதால் எழும் பிரதிபிம்பமே மாறுதல்களை அடையும் தனித்தன்மை கொண்ட ஜீவனாகத் தோற்றம் அளிக்கிறது. இவ்வாறாக இது அடித்தளம் ஒன்றின் மேல் எழும் மாயத் தோற்றமாகும். மேலாகத் தோன்றுவது எதுவும் அடிப்படை இல்லாது வேறெதுவுமாக தனித்து இருக்க முடியாது என்பதால் காணப்படும் ஜீவனும் பிரம்மத்தைத் தவிர்த்து வேறான ஒன்றல்ல.

சீடன்: இது யார்?

குரு : அறியாமையின் விளைவான மனத்தில் தொடர்ந்து தோன்றிக்கொண்டும், மயக்கம், ஆழ்நிலை உறக்கம் போன்ற நிலைகளில் தொடர்ந்து மறைந்துகொண்டும் விளங்கும் இந்த ஜீவாத்மாவும் ஒரு மாயத் தோற்றமே. அதை வெளிக்காட்டும் ஊடகமான (உபாதி) மனம்

மறைந்தால், ஜீவாத்மா அதன் அடிப்படை உண்மைப் பொருளாகிய பிரம்மமாக ஆகிறது. அதாவது மனோநாசத்தால், ஜீவன் தான் பிரம்மமன்றி வேறில்லை என்று தெளிகிறது.

24. சீடன்: உபாதியாகிய மனம் மறைந்து, அதனால் ஜீவனும் தொலைந்து போனதும், "நான் பிரம்மம்" என்று அவன் எப்படிச் சொல்லமுடியும்?

குரு : இடையில் வரும் அறியாமையான கனவு மறைந்ததும், கனவு காண்பவன் மறையாமல் விழிப்பு நிலை அனுபவங்களைக் காணும் விஸ்வனாக எழுகிறான். அதைப் போலவே மனோநாசத்திற்குப் பின் ஜீவாத்மா உள்ள பொருளாகிய பிரம்மமாக ஆகிறது. ஆகையால் மனத்தின் ஒரு துளியும் மிச்சம் இல்லாது வேரோடு அழிந்த நிலையான மனோநாசம் அடைந்ததும், ஜீவன் தானே சத்-சித்-ஆனந்தம் என்றும், அத்வைத பிரம்மம் என்றும், தானே பிரம்மமாகிய ஆன்மாவென்றும் தன்னைச் சந்தேகமின்றி உணர்கிறது.

சீடன்: அப்படியானால் அந்த நிலையில் ஆழ்ந்த உறக்கம் போன்றதொரு நிலைமை வரவே கூடாது. "நான் பிரம்மம்" என்ற அனுபவம் மட்டும் அங்கு எப்படி வரமுடியும்?

குரு : தூக்கத்தில் வந்த கனவு கலைந்ததும் கனவு காண்பவன் விழித்து எழுந்து, "இவ்வளவு நேரம் நான் கனவில் பல புதுப்புது இடங்களுக்குப் பறந்து போய்க்கொண்டு இருந்தாலும், நான் இந்தப் படுக்கையிலே தான் படுத்துக்கொண்டு இருந்தேன்" என்று சொல்வதும், ஒரு பைத்தியக்காரனின் பைத்தியம் தெளிந்ததும் அவன் தன் நிலையைப் பற்றி அறிந்து மகிழ்ச்சி அடைவதும், ஒரு நோயாளியின் நோய் குணமானதும் அவன் தனக்கு முன்பு நோய் இருந்ததைப் பற்றி ஆச்சரியப்படுவதும், ஒரு பிச்சைக்காரன் அரசன் ஆனதும் தனது முந்தைய ஏழ்மை நிலை பற்றி மறந்துபோவதும் அல்லது நினைத்துச் சிரித்துக்கொள்வதும், தேவலோகப் பதவியை அடைந்த ஒருவன் தனது புதிய சுகபோக வாழ்வைப் பற்றி மகிழ்வதும், அல்லது இறைவனைத் துதித்து அவனது பாத கமலத்தில் சேர்ந்துவிட்ட ஒரு பக்தன் அந்தப் புதிய ஆனந்தத்தில் திளைப்பதும் போல பிரம்மமாக மாறிவிட்ட ஜீவனுக்குக் கீழ்க்கண்ட ஆனந்த அனுபவங்கள் நேர்கின்றன. இது நாள் வரை தான் பிரம்மமாகவே இருந்தும் உலகம், கடவுள், மனிதர்கள் என்றனைத்தும் தனித்தனியே இருந்ததாக எண்ணிக்கொண்டு நாம் ஏன் ஒரு அவலநிலையில் இருந்தோம், அதுபோன்ற எண்ணங்கள் எல்லாம் தற்போது என்ன ஆயிற்று, தானே தான் என்று இப்போது இருக்கும் சச்சிதானந்த நிலையில் எவ்வாறு பேதங்கள், உள்-வெளி என்ற பாகுபாடு என்று ஏதும் இல்லாமல் பிரம்மத்தின் பேரானந்தப் பெருநிலையை அனுபவிக்கிறோம் என்றெல்லாம் தோன்றும். ஜீவனது மனம் அடியோடு ஒழிந்த பின்பே அது போன்ற அனுபவங்கள் நேரும்; இல்லையென்றால் அவை நேராது.

25. சீடன்: அனுபவம் என்பது மனத்தளவிலே நடப்பது. மனமே அழிந்துவிட்டால் “நான் பிரம்மம்” என்ற அனுபவம் யாருக்கு வரும்?

குரு : நீ சொல்வது சரியே. மனத்தின் அழிவு என்பது உருவம், அருவம் என்ற இரண்டு வகைகளில் நடப்பது. முந்தையது ஓர் உருவம் சம்பந்தப்பட்டது; பிந்தைய வகையில் உருவம் ஏதும் கிடையாது. இந்தக் கட்டம் வரை நான் சொல்லிக்கொண்டு இருந்தது முந்தைய வகையைச் சார்ந்த மனத்தைப் பற்றியது. இரண்டாவது வகையைச் சேர்ந்த அருவ மனமும் இல்லாது போனால்தான் நீ சொல்வது போல எந்த அனுபவமும் பெற முடியாது.

சீடன்: இந்த இரண்டு வகை மனங்களையும் பற்றிச் சொல்லி, அவைகளை நாசம் செய்வது பற்றியும் சொல்லுங்கள்.

குரு : முன்பு கற்பித்துக்கொண்டதால் நம்முள் உறைந்திருக்கும் வாசனைகள் விருத்திகளாக வெளிப்படுவதே உருவ வகையைச் சேர்ந்த மனம். அதனால் அந்த வாசனைகளையும், விருத்திகளையும் அழிப்பதே இந்த வகையான மனோநாசம். மாறாக, அந்த வாசனைகள் எல்லாம் அழிந்த பின்பு உறக்கம்  மயக்கம் என்று எதுவும் இல்லாது, உலகமும் தெரியாது இருக்கும் போது விளையும் ஒரு மேலான சமாதி நிலையில் சத்-சித்-ஆனந்த அனுபவம் மட்டும் இருப்பதே அருவ வகையிலான மனம். இதுவும் இல்லாது போனால் ஆனந்தானுபவம் என்பதையும் சேர்த்து எதையும் உணர முடியாத நிலையே உண்டாகும்.

சீடன்: இந்த வகையான அழிவு எப்போது நடக்கும்?

குரு : ஆன்மாவை முற்றும் உணர்ந்த ஞானி தன் உடலைத் துறக்கும் போது; உடலில் உயிர் இருக்கும் வரை அது நடைபெறாது. அப்போது உருவ நிலையில் உள்ள மனம் அழியும்; உருவமில்லாத பிரம்ம நிலையில் அல்ல. ஆகையால் உயிரோடு இருக்கும்போது ஆன்மாவை உணர்ந்த ஞானி (ஜீவன் முக்தன்) ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டு இருப்பார்.

26-27. சீடன்: சுருக்கமாகச் சொன்னால் முக்தி என்பது என்ன?

குரு : ஒருவனைத் தனி மனிதனாகக் குறுக்கிக் காட்டும் உருவ நிலையில் உள்ள மனத்தை நாசம் செய்து, தூய்மையாக இருந்து எப்போதும் சத்-சித்-ஆனந்த நிலையையே தன் இயல்பாகக்கொண்டுள்ள உருவமற்ற நிலை கொண்ட மனத்தைத் திரும்பப் பெற்று, “நான் பிரம்மம்” என்பதை உணரும் நிலையே முக்தியாகும்.

சீடன்: இந்தக் கருத்தைப் பலரும் ஏற்றுக்கொண்டுள்ளார்களா?

குரு : ஆமாம். “ஆன்மாவே பிரம்மம் என்பதை அறியாத நிலையில் ஒருவன் தன்னை “நான் உடல்” என்று உண்மையாகவே நம்புவதைப் போல, உடலே ஆன்மா என்ற அந்த மயக்கம் தெளிந்த பின்பும், உடல் உணர்வற்று, சந்தேகமறத் தன்னைச் சச்சிதானந்த நிலையில் உள்ள ஆன்மாவென்றும், அதுவே பரப்பிரம்ம நிலை என்றும் உணர்ந்து, அதிலே நிலைத்திருப்பதே

முக்தி” என்று ஆதி சங்கரர் கூறுகிறார். “உள்ள பொருளாகிய ஆன்மாவில் நிலைத்து நிற்பதே முக்தி” என்று ஞானிகள் பலரும் கூறியுள்ளனர்.

28. சீடன்: அவ்வாறு யார், எங்கே கூறியிருக்கிறார்கள்?

29. குரு : “எவ்வாறு ஒரு கல்லின் மனம் எந்தவொரு நிலையும் எடுக்காது அமைதியாக இருக்குமோ, அவ்வாறே அந்தக் கல்லின் உள்ளே இருப்பது போன்ற நிலை எதுவும் கொள்ளாமலும், சிந்தனை இல்லாமலும் இருந்து, அதே சமயம் உறங்காமலும், பேதங்கள் எதையும் காணாமலும் எப்போதும் இருப்பதே தன்மயமான ஆன்மாவாக இருப்பது” என்று வசிஷ்ட முனி கூறுகிறார்.

30-31. ஆகையால் உருவ நிலையில் உள்ள மனத்தை அழிக்காமல், ஆன்ம உணர்வில் நிலைத்து நிற்பதன் மூலம் எவ்வாறு “தான் பிரம்மம்” என்பதை உணரமுடியும்? அது முடியாத காரியம். சுருங்கச் சொன்னால், ஜீவாத்மா என்று ஒருவன் தன்னைத் தனியனாக உணர்வதை அழிக்க முதலில் அவன் தன் மனத்தை அடக்கி, சச்சிதானந்த பரப்பிரம்மமாகிய ஆன்மாவில் லயிக்க வேண்டும். அப்போதுதான் வேதங்கள் கூறும் “நான் பிரம்மம்” என்ற அந்த நிலையை உணரமுடியும். அவ்வாறு இல்லாமல் பிரம்மத்தைப் பற்றிய நேரடி அறிவு வந்துவிட்டதாலேயே “நான் பிரம்மம்” என்று சொல்லிக்கொள்வது ஒரு பிச்சைக்காரன் அரசனைப் பார்த்துவிட்டதால் தான் அரசன் என்று அறிவிப்பது போன்ற ஓர் அறிவற்ற செயலே. வெறும் வார்த்தைகளால் எதையும் சாதித்துவிட்டதாகக் கூறிக்கொண்டு இருக்காமல், எப்போதும் உள்ள ஆன்மாவில் நிலைத்து நின்று “தான் பிரம்மம்” என்பதை உணர்வதே முக்தி அடைவதாகும்.

32. சீடன்: எவ்வித சந்தேகமோ, தவறோ இல்லாமல் சதா சர்வ காலமும் பிரம்மத்திலே நிலைத்து நிற்கும் ஒரு ஞானி எப்படி இருப்பார்?
குரு : நான்-நீ எனும் துவைத பேதங்கள் இல்லாமல், எல்லாமாய் இருந்தும் ஒன்றே ஒன்றான சத்-சித்-ஆனந்த நிலை கொண்ட பிரம்மமாய் எப்போதும் இருந்து, தன் முன் வினைகளால் தற்போது தொடரும் விளைவுகள் (பிராரப்த கர்மம்) இருந்தால் அவைகளால் கலக்கம் அடையாது, பொறுமையாக அவைகளை அனுபவித்துக்கொண்டும் இருப்பார்.

33-35. சீடன்: பிரம்மமாகவே தன்னை உணர்பவருக்கு எவ்வாறு அவரது முன்வினைப் பயன்களால் அனுபவங்கள் நேர முடியும்?

குரு : தான் ஆன்மாவே என்று உணர்ந்து அதிலேயே லயித்து இருக்கும் ஞானிக்குப் பழைய கர்மங்கள் என்று ஏதும் கிடையாது. கர்மங்கள் இல்லை என்பதால் அதனால் வரும் பலன்களும் கிடையாது, ஆற்ற வேண்டிய செயல்களும் இல்லை, அனுபவங்களும் நேராது. பிரம்மத்தைத் தவிர்த்து வேறெதுவும் இல்லாத அவர் அனுபவிப்பவரும் இல்லை, அனுபவங்களும் இல்லை, அனுபவிக்கப்படும் பொருள் என்றும் ஏதுமில்லை. அதனால் அவருக்கு விட்டுப்போன பழைய கர்மங்கள் என்று எதுவும் கிடையாது.

சீடன்: அவருடைய பழைய கர்மங்கள் இப்போதும் பலன் கொடுத்துக்கொண்டு இருக்கின்றன என்று ஏன் சொல்லமுடியாது?

குரு : அப்படிக் கேட்பது யார்? தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்ளும் ஒரு சாதாரண மனிதனாகத்தான் இருக்கமுடியும்; அவர் ஞானியாக இருக்க முடியாது.

சீடன்: ஏன்?

குரு : அனுபவம் என்பது பொய்த் தோற்றங்களின் பிரதிபலிப்பே. இவ்விரண்டில் ஒன்று இல்லாமல் மற்றது இல்லை. பொருள் ஒன்று இல்லையென்றால் அது தொடர்பான அனுபவமும் இருக்க முடியாது. பொருள் சம்பந்தப்பட்ட எந்த அறிவும் மாயமே. பிரம்மத்தைச் சார்ந்த எதுவும் இரண்டற்றது. நாம-ரூபங்களுடன் தோன்றும் அனைத்துமே பிரம்மத்தை அடிப்படையாகக் கொண்டு அறியாமையால் தோன்றுவன ஆகும். அதனால் அவைகளைக் காண்பவன் ஓர் அறிவிலியாகத்தான் இருக்க முடியுமே தவிர ஞானியாக இருக்க முடியாது. காண்பவைகளின் தன்மையை அலசி ஆராய்ந்து, நாம-ரூபங்கள் கொண்ட அவைகள் எல்லாமே மாயத் தோற்றங்கள் என்று தெளிந்த பின், ஒரு ஞானி பிரம்மத்திலேயே நிலைத்து நின்று அனைத்தையும் பிரம்மமாகவே காண்பான். அங்கு எதை அனுபவிப்பதற்கு யார் இருக்கிறார்கள்? எதுவும் இல்லை, எவரும் இல்லை. அதனால் ஞானம் அடைந்தவருக்கு பழைய கர்மங்களும் இல்லை, தற்போது அனுபவிப்பதற்கு எதுவும் இல்லை, செய்வதற்குச் செயலும் இல்லை.

36-37. சீடன்: இருந்தாலும் ஞானி தன் பழைய கர்மங்களின் அனுபவங்களில் இருந்து விடுபட்டவராகத் தெரியவில்லையே; மாறாக, மற்ற மனிதர்களைப் போலவே அவரும் தினப்படிச் செயல்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார். இதை எப்படிப் புரிந்துகொள்வது?

குரு : ஞானியின் பார்வையில் பழைய கர்மங்களோ, அனுபவங்களோ, செயல்களோ எதுவும் இல்லை.

சீடன்: அவரது பார்வைதான் என்ன?

குரு : அவரது பார்வையில் தூய்மையான, களங்கமற்ற ஆகாயம் போன்ற பேரறிவு என்ற ஒன்றைத் தவிர வேறெதுவும் இல்லை.

சீடன்: ஆனாலும் அவருக்கு அனுபவங்கள் இருப்பது போல மற்றவர்களுக்கு எப்படித் தெரிகிறது?
குரு : அப்படித் தெரிவது மற்றவர்களுக்குத்தான். அவர் அதை அறியாதபடி இருக்கிறார்.

38-39. சீடன்: இந்தக் கருத்தை மற்றவர்களும் ஆமோதித்திருக்கிறார்களா?
குரு : "ஆன்மாவைப் பற்றிய அறிவு வந்தவுடன் அதுவரை இருந்த அறியாமையும், அதன் விளைவுகளும் ஞானியை விட்டுப் பறந்தோடி விடுவதால் அவர் எதையும் அனுபவிப்பவர் ஆகமாட்டார். அப்படியிருந்தும் ஆன்மா பற்றிய அறிவில்லாதவர்கள் அவர் எப்படி சாதாரண மனிதர்களைப் போலவே ஓர் உடலில் இருந்துகொண்டு தினப்படி அலுவல்களில் ஈடுபடுகிறார் என்று ஆச்சரியப்படுவார்கள். அவர்களது பார்வையில் கர்மத்தின் பின்விளைவுகள் எப்படியும் இருக்கும் என்று சாஸ்திரங்கள் கூறினாலும், ஞானிகளின் விஷயத்தில் அவை பொருந்தாது என்பதாக இருக்கும்" என்று விவேக சூடாமணியில் ஆதி சங்கரர் கூறுகிறார்.

40. சீடன்: அவர் அனுபவிப்பவர் இல்லை என்றால், மற்றவர் கண்களுக்கு அவர் ஏன் அப்படித் தோன்றவேண்டும்?
குரு : மற்றவர்களின் அறியாமையால் அவருக்கு அனுபவம் உண்டு என்று அவர்களுக்குத் தோன்றுகிறது.

41-43. சீடன்: அப்படியும் இருக்குமா?
குரு : ஆமாம். அறிவில்லாதவர்களுக்கே எங்கும் பரவியிருக்கும் பிரம்மம் ஒன்றே என்றாலும், இருப்பது உலகம், இறைவன், விதவிதமான நாம-ரூபங்கள், நான், நீ, அவன், அவள், அது என்று பலவாகத் தெரிகிறது. தூண் ஒன்று மனிதனாகவும், சிப்பி வெள்ளி போலவும், கயிறு பாம்பாகவும், களிமண் பானையாகவும், தங்கம் ஆபரணமாகவும் பல பெயர்கள், உருவங்களுடன் மாயத் தோற்றங்கள் இருப்பது போல அறிவில்லாதவனை எங்கும் உள்ள பேரறிவு மயக்குகிறது. ஆனால் ஆன்மப் பயிற்சி மூலம் அறிவைப் பெற்று அறியாமையை அழித்த ஞானியோ, கர்மங்கள் நடக்கின்றன என்றோ அவைகளுக்குப் பலன்கள் உண்டு என்றோ அறியாது, எப்போதும் அந்தப் பேரறிவு ஒன்றிலேயே நிலைத்து நிற்பார். அவ்வாறு பிரம்மத்திலேயே எப்போதும் இருப்பதால் அதன் பேரறிவு ஒன்றை மட்டுமே அவர் அறிவார். அதைப் பற்றி அறியாத மற்றவர்களுக்கு அவர் தங்களைப் போலவே இருந்துகொண்டு, சகல வேலைகளிலும் ஈடுபடுவதாகத் தோன்றும். ஆனால் ஞானியோ பேரறிவுப் பெருநிலையில் நின்று கர்மமும் இல்லாதவாறு இருப்பார்.

44-46. சீடன்: கர்மம் புரியாமலேயே தான் கர்மத்தில் ஈடுபடுவது போல எவ்வாறு ஞானி மற்றவர்களுக்குத் தென்படுகிறார் என்பதை உதாரணத்துடன் விளக்க முடியுமா?

குரு : இரண்டு நண்பர்கள் அருகருகே படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களில் ஒருவன் கனவும் இல்லாத ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது, மற்றவனோ அருகில் படுத்திருக்கும் அதே நண்பனோடு எங்கோ சுற்றிக்கொண்டு இருப்பதாகக் கனவு காண்கிறான். நண்பன் நன்கு ஆழ்ந்து தூங்கிக்கொண்டிருந்தாலும், கனவு காண்பவனுக்கோ நண்பன் தன்னுடன் சுற்றிக்கொண்டிருப்பது போலத்தான் இருக்கிறது. அதேபோல ஞானியும் பிரம்மத்தைப் போலவே ஏதும் செய்யாமல் இருந்தாலும், நாமரூபங்களை மட்டுமே அறிந்த ஆன்ம அறிவற்ற மக்களுக்கு அவர் செயல்பட்டுக்கொண்டு இருப்பது போலவே தோன்றுகிறது. பிரம்மமே ஆகிவிட்ட ஞானிக்கு செய்வதற்கு ஒன்றுமில்லை என்றாலும் செயலில் மூழ்கியிருப்பது போலத் தெரியும் என்று இதிலிருந்து நன்கு விளங்கியிருக்க வேண்டும்.

47-48. சீடன்: அதாவது ஞானிக்கு அனுபவங்கள் இல்லாமல் இல்லை; ஆனால் இருப்பது போலத் தெரிகிறது. ஏனென்றால் அவருக்கு மீதமிருக்கும் பழைய கர்மங்களான சஞ்சித கர்மங்களையும், இனி வரப்போகும் ஆகாமிய கர்மங்களையும் அவரது பேரறிவு அழித்திருக்கும் என்றாலும், தற்போது அவர் அனுபவித்துத் தீர்க்க வேண்டிய பிராரப்த கர்மங்கள் (ஊழ்) இன்னும் எஞ்சி இருக்க வேண்டும். அவ்வாறு அவைகள் இருக்கும் வரை, அவரது கண்ணோட்டத்தில் மாயத் தோற்றம் என்று சொன்னாலும் அவர் ஆற்றவேண்டிய கடமைகள் இன்னும் இருக்கின்றன.

குரு : அது அப்படியல்ல. எந்த நிலையில் இந்த மூன்று வித கர்மங்கள் இருக்கின்றன - ஆன்மாவைப் பற்றிய அறிவு இருக்கும்போதா அல்லது அறியாது இருக்கும்போதா? அறிவு இல்லாத மயக்கத்தில் இருக்கும்போது தான்; அப்போது மட்டுமே கர்மங்கள் செய்யப்படுவதாகத் தோன்றுகின்றன. அறிவு மலரும்போது அத்தகைய மயக்கமும் இல்லை; பிராரப்தம் என்று ஒன்றும் இல்லை. மயக்கம் என்று ஏதுமில்லாத பிரம்ம நிலையில் நிற்கும்போது கர்மங்கள், மற்றும் அதற்குப் பலன்கள் என்று எவருக்குத் தோன்றும்? கனவில் இருந்து விழித்தெழுந்த ஒருவனுக்குக் கனவு அனுபவங்கள் மீண்டும் திரும்புமா? மயக்கங்கள் தீர்ந்து முடிந்த ஞானிக்கு கர்மானுபவங்கள் ஏதும் இருக்க முடியாது. எப்போதுமே அவர் உலகைப் பற்றிய உணர்வு இல்லாது, வேறு நிலைகள் இல்லாத, இரண்டற்ற ஒன்றேயான, முழுமையான, பிளவுகள் ஏதுமில்லாது என்றும் தொடர்ந்து இருக்கும் பிரம்மத்தில் லயித்து இருப்பதால் அதையன்றி வேறெதுவும் அறியாதவர் ஆவார்.

49. சீடன்: "பழைய கர்மங்கள் தீர்ந்துபோகாத வரை ஞானியின் உடல் தொடர்ந்து நீடிக்கும்; மாயம் போல அவரது செயல்களும் தொடரும்" என்று உபநிஷத்துகளில் பூர்வ கர்ம வினைகளைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறதே!

குரு : நீ சொல்வது சரியல்ல. ஆன்மத் தேடலில் ஈடுபட்டுள்ள சாதகனுக்குச் செயல்களும், அதற்கான பலன்களைப் பற்றிய அனுபவங்களும், உலகமும் மாயத் தோற்றங்கள் போல இருக்கின்றன; ஆனால் ஞானிக்கோ அவைகள் முற்றிலும் மறைந்து போகின்றன. "நான் ஒரு சாட்சியே; பொருட்கள் இருப்பதும், செயல்கள் நடப்பதும் என்னால் ஓர் சாட்சியாகப் பார்க்கப்படுகின்றன, தெரிகின்றன. அவை பற்றி எனக்கு உணர்வு இருக்கிறது; ஆனால் அவைகளோ உணர்வற்றவைகள். பார்க்கும் பிரம்மமே உண்மை; மற்றவை அனைத்தும் மாயமே" என்ற எண்ணங்களோடு சாதகன் தன் சாதனையைத் தொடர்கிறான். அவ்வாறான அனைத்துமே நாமரூபங்களோடு இருக்கும் உணர்வற்றவைகள்; அவைகள் முன்பொரு காலத்தில் இருந்திருக்க முடியாது, தற்போதும் உண்மையில் இருப்பவை அல்ல, இனியும் அவை இருக்காது மறையும் தன்மை கொண்டவை என்ற சாதகனின் உணர்வுபூர்வமான அனுபவத்துடன் அந்தப் பயிற்சிகள் முடிவடைகின்றன. இவ்வாறாக சாட்சியாகப் பார்ப்பதற்கு எவையும் இல்லாது போகவே இறுதியில் சாட்சியே பிரம்மத்துடன் ஐக்கியம் ஆகிறது. அப்போது பிரம்மத்தில் ஆன்மா ஒன்றே மிஞ்சி நிற்கிறது. இவ்வாறு ஆன்மா ஒன்றையே அறியும் ஞானி பிரம்மம் ஒன்றையே அறிவார்; அவருக்குக் கர்மங்களைப் பற்றிய எண்ணங்களும் கிடையாது, உலகில் ஆற்றக்கூடிய செயல்களும் இல்லை.

சீடன்: அப்படியானால் எதற்காக பூர்வ கர்மங்களைப் பற்றி இந்தச் சந்தர்ப்பத்தில் மறை நூல்கள் குறிப்பிடுகின்றன?

குரு : அவை ஞானியைக் குறித்துச் சொல்லப்பட்டவை அல்ல.

சீடன்: பின் யாரைக் குறித்துச் சொல்லப்பட்டிருக்கிறது?

குரு : அது ஆன்மாவைப் பற்றிய அறிவு இல்லாதவர்களுக்கானது மட்டுமே.

சீடன்: ஏன்?

குரு : தனது கண்ணோட்டத்தைப் பொருத்தவரை ஞானிக்குக் கர்ம பலன்களில் நாட்டம் இல்லை என்றாலும், அவரது செயல்களைப் பார்க்கும் அறிவிலிகள் அதை வேறாகப் புரிந்துகொள்கிறார்கள். அவைகளால் அவருக்கு அனுபவங்கள் ஏதும் இல்லை என்று சொல்லியும் கூட அறிவிலிகள் அதை ஒத்துக்கொள்வதும் இல்லை; மாறாக அவர் ஏன் அவ்வாறு செயல்படுகிறார் என்ற சந்தேகமும் அவர்களுக்குத் தொடர்ந்து வருகிறது. அத்தகைய அறிவிலிகளின் சந்தேகங்களைப் போக்குவதற்காக அவர்களுக்காகவே ஞானிக்குப் பிராரப்த கர்மம் மிஞ்சி இருக்கிறது என்று மறை நூல்கள் கூறுகின்றன. ஆனால்

அவை ஞானிகளிடம் “உங்களுக்கு இன்னும் பிராரப்தம் இருக்கிறது” என்று கூறவில்லை. ஆகவே ஞானிகளின் பிராரப்தம் பற்றி ஸ்ருதிகள் கூறும்போது, உண்மையில் அது அவர்களது கண்ணோட்டத்தில் சொல்லப்படவில்லை.

50-51. சீடன்: ஒருவனது தனித்தன்மை முற்றிலும் ஒழிந்துபோன பின்பே முக்தி சித்திக்கும் என்றால் தனது தனித்தன்மையைத் துறப்பதற்கு யார் முன்வருவார்கள்?
குரு : தொடர்ந்து வரும் பிறப்பு-இறப்புகளால் சம்சாரக் கடலில் மூழ்கித் தவித்து, அதைத் தாண்டி தூயதாக என்றும் விளங்குகிற பிரம்மத்தை அடையத் துடிப்பவன் தனித்தன்மையைத் துறப்பதற்குத் தயாராக இருப்பான். தேவலோகத்தை அடையும் ஆசை கொள்பவன் எவ்வாறு கங்கை நீரில் மூழ்கியோ, அக்னியில் குதித்தோ தன்னை மாய்த்துக்கொள்ள முன்வருவானோ அவ்வாறே முக்தியைத் தீவிரமாக நாடும் சாதகன் பேரின்பப் பெருநிலையான பிரம்மத்தை அடைவதற்காக ச்ரவணம், மனனம், நிதித்யாசனம் போன்ற பயிற்சிகளில் ஈடுபட்டுத் தனது தனித்தன்மையைக் கைவிடுவான்.

52. இத்துடன் சாக்ஷாத்காரம் எனும் அத்தியாயம் முற்றுப்பெறுகிறது.

தீவிர மனத்துடன் இதைப் படித்துப் புரிந்துகொள்ளும் சாதகன் தனது தனித்தன்மையை நிலைநாட்டக் காரணமாக இருக்கும் மனத்தை முற்றிலுமாக அழித்து, சதா சர்வ காலமும் பிரம்மத்திலேயே நிலைத்து நிற்பான்.

# 8. மனோநாசம் : மனத்தை அழிப்பது

1. அத்வைத பிரம்மத்தை சாக்ஷாத்காரம் அடைவது பற்றி முந்தைய அத்தியாயத்தில் விவரமாக விளக்கிய குரு, எவ்வாறு மனோநாசம் ஒன்றே பிரம்மத்தை உணர்வதற்கான ஒரே வழி என்பதை இங்கு கூறுகிறார்.

குரு : புத்திசாலிப் பையனே! ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்துவரும் பிறவிகளுக்குக் காரணமாகவும், பிரம்மத்தை உணர்வதற்குத் தடையாகவும் இருக்கும் ஒருவனது தனித்தன்மைக்கு மூலமாக இருக்கும் மனத்தை நிர்மூலமாக்கி விடு.

2. சீடன்: குருவே! மனத்தை எப்படி அழிப்பது? அது மிகவும் கஷ்டமான காரியம் இல்லையா? மனம் ஓரிடத்தில் நில்லாது அலை பாய்ந்துகொண்டு இருப்பதும், சலனங்கள் கொண்டதும், மிக வலிவுடையதும் ஆனது இல்லையா? எவ்வாறு ஒருவன் மனத்தை நாசம் செய்வது?

3-4. குரு : ஒரு மென்மையான மலரைக் கசக்குவதும், வெண்ணையில் இருந்து முடியை நீக்குவதும், அல்லது கண் சிமிட்டுவதும் எவ்வளவு எளிதோ அதைப் போன்றே மனத்தை இல்லாது செய்வதும் மிக எளிதே. அதைப் பற்றி உனக்கு எந்த சந்தேகமும் வேண்டாம். ஐம்புலன்களால் ஏமாற்றப்படாத, தன்னம்பிக்கை மிக்க ஒரு சாதகனுக்கு வெளி விஷயங்களில் இருக்கும் திடமான விவேகத்தினால் மனோநிக்கிரகம் செய்வதில் ஒரு சிறிய கஷ்டம் கூட இருக்க முடியாது.

சீடன்: அது எப்படி அவ்வளவு எளிதாக இருக்க முடியும்?

குரு : மனம் என்ற ஒன்று இருந்தால்தானே அதை விடுவது என்பதும் ஒரு சிரமமான காரியமாக இருக்கும். உண்மையைச் சொல்லப்போனால் மனம் என்ற ஒரு பொருளே கிடையாது. “இங்கு பிசாசு இருக்கிறது” என்று கூறினால் ஏதும் அறியாத ஒரு குழந்தை ஏமாந்து போய் இல்லாத ஒரு பிசாசு இருப்பதாக உண்மையாகவே நம்பி, அதனால் பயம், துயரம், துக்கம் எல்லாம் அடைகிறது. அதைப் போலவே களங்கமற்ற பிரம்மத்தில் இல்லாத பல விஷயங்களையும் இருப்பதாக ஏற்றிவைத்துக்கொண்டு, இருப்பது போலத் தோன்றும் மனம் என்றும், அதனால் ஏற்படும் பலப்பல விளைவுகள் என்றும், மனத்தை அடக்குவது கடினம் என்றும், கவனமாக இல்லாதவர்களுக்கு அது தரும் தொல்லைகள் என்றும் பரவலான எண்ணங்கள் இருந்தாலும், மனத்தைப் பற்றித் தெளிவாக அறிந்து கொண்டுள்ள தன்னம்பிக்கையும் விவேகமும் மிக்க ஒரு சாதகனுக்கு மனத்தை அழிப்பது ஓர் எளிதான செயலே. அதனுடைய தன்மைகள் பற்றி அறியாத மூடனுக்கே அது ஒரு கடினமான செயல்.

5-10. சீடன்: மனத்தின் இயல்பு என்ன?

குரு : குறிப்பாக இல்லாது பலவற்றையும் பற்றிச் சிந்தித்தல். எண்ணங்கள் இல்லையென்றால் அங்கு மனமே இருக்க முடியாது. எண்ணங்களை ஓடவிடாது நிறுத்தினால், மனம் ஒரு முயலின் கொம்பு என்பது போல பெயரளவுக்கே இருக்கும்; மலடியின் மகன், முயல் கொம்பு, அல்லது ஆகாயத் தாமரை என்பது போல உண்மையில் இல்லாத பொருட்கள் போலவே மனமும் இருக்கும். இது யோக வாசிஷ்டத்திலும் கூறப்பட்டிருக்கிறது.

சீடன்: எப்படி?

குரு : “ஓ! ராமா, கேள். மனம் என்று ஒன்றைப் பற்றிச் சொல்வதற்கு எதுவுமே இல்லை. எந்த உருவமும் இல்லாமல் ஆகாயம் இருப்பது போலவே மனமும் ஓர் உணர்வற்ற வெறுமையாக இருக்கிறது. அது வெறும் பெயரளவிலேயே இருக்கிறது; அதற்கு ஓர் உருவமும் இல்லை. அது வெளியிலும் இல்லை, உள்ளே இதயத்திலும் இல்லை. ஆனால் ஆகாயம் எங்கும் பரவியிருப்பது போல உருவமில்லாது போனாலும் மனம் அனைவரிடமும் நிறைந்து நிற்கிறது.

சீடன்: அது எவ்வாறு இருக்க முடியும்?

குரு : எதைப்பற்றியாவது எண்ணங்கள் எங்கு இருந்தாலும் அங்கு மனம் இருக்கிறது என்று அர்த்தம்.

சீடன்: எங்கு எண்ணம் இருக்குமோ அங்கு மனம் இருந்தால், மனமும் எண்ணமும் வெவ்வேறானவைகளா?

குரு : எண்ணம் மனம் இருப்பதற்கான அறிகுறி. எண்ணம் எழுந்தால் அது மனம் இருப்பதை அறிவிக்கிறது. எண்ணம் இல்லாத இடத்தில் மனம் இருப்பதில்லை. ஆகையால் மனமானது எண்ணங்களின் தொகுப்பே. அதாவது எண்ணங்களே மனம்.

சீடன்: எண்ணம் என்றால் என்ன?

குரு : எண்ணம் என்பது நினைவுகளே. எண்ணங்களற்ற நிலை சிவசொரூபம் எனப்படும் பேரானந்த நிலையே. ஏற்கனவே அனுபவித்ததைப் பற்றி என்றும், அவ்வாறு அல்லாதன என்றும் எண்ணங்கள் இருவகைப்படும்.

11. சீடன்: முதலில் எண்ணம் என்றால் என்ன என்று எனக்குச் சொல்லுங்கள்.

குரு : நமக்கு வெளியே உள்ள பொருளைப் பற்றி அது இருக்கிறது, அல்லது இல்லை என்றோ, அது இப்படிப்பட்டது அல்லது அப்படிப்பட்டது என்றோ, அல்லது அதுபோன்ற வேறு வகையிலோ நினைப்பதே எண்ணம் என்று ஞானிகள் கூறுகின்றனர்.

12-13. சீடன்: அவ்வாறான நினைவுகளை எப்படி அனுபவித்து அறிந்தது அல்லது அனுபவிக்காதது என்று வகைப்படுத்த முடியும்?

குரு : ஒலி போன்ற ஐம்புலன்கள் மூலம் “நான் பார்த்தது - நான் கேட்டது - நான் தொட்டது” என்பன போன்றவைகளைச் சொல்லும்போது அதற்கான பொருட்களை நாம் முன்பே பார்த்தோ, கேட்டோ, தொட்டோ அறிந்தவைகளை நினைவுபடுத்திச் சொல்வதால் அவை ஏற்கனவே நமது அனுபவங்களாக இருந்தன என்று அர்த்தம். அதற்கு நேர் மாறாக நாம் அனுபவிக்காததைச் சொல்லும்போது அந்தப் பொருட்களைப் பற்றி நம் மனதில் உள்ள எண்ணங்களை அறிவிக்கிறோம் என்று அர்த்தம்.

14. சீடன்: பொருட்கள் தொடர்பான அனுபவங்களால் ஏற்பட்ட எண்ணங்கள் என்பது புரிகிறது. பார்த்ததால் அனுபவங்கள் என்றால், பார்த்தே அறியாத பொருட்களைப் பற்றி என்ன அனுபவங்களோ , எண்ணங்களோ இருக்க முடியும்? அனுபவங்கள் இல்லாதபோது ஒருவனுக்கு எண்ணங்கள் வருவது இயலாது. அப்படியானால் அனுபவித்து அறியாத பொருளைப் பற்றிய எண்ணம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

15. குரு : முடியும், அப்படியும் சொல்ல முடியும். அனுபவித்து அறியாத பொருளைப் பற்றிச் சிந்தித்துப் பார்ப்பதும் எண்ணமே. அப்படி எண்ணிப் பார்ப்பதால்தான் முன்பின் தெரியாத பொருட்களும் தோன்றுகின்றன.

சீடன்: முன்பின் தெரியாத பொருட்கள் எவ்வாறு எண்ணச் சுழல்களுக்குள் சிக்க முடியும்?

குரு : “அன்வயம்” எனப்படும் நேர்மறைத் தழுவுதலாலும் (positive induction), “வ்யதிரேக” எனப்படும் எதிர்மறைத் தழுவுதலாலும் (negative induction), முன்போ, பின்போ பொருட்களுடன் அனுபவங்கள் இருக்கிறதோ, இல்லையோ நினைவில் தோன்றும் அந்தப் பொருட்களின் அனைத்து உருவகங்களும் ஒருவகையான எண்ணங்களே.

16-17. சீடன்: இந்த விஷயத்தில் நேர்மறை மற்றும் எதிர்மறைத் தழுவுதல்கள் எவ்வாறு பொருந்தும்?

குரு : ஒன்று இருக்கிறதோ இல்லையோ, ஏற்கனவே அனுபவிக்கப்படுள்ளதோ இல்லையோ அதைப் பற்றி எந்த மாதிரி நினைத்தாலும் அந்தப் பொருள் நம் எண்ணத்தில் இருப்பதாகத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். அதாவது ஒரு பொருளைப் பற்றிய எண்ணமே அந்தப் பொருளைப் புரிந்துகொள்வது என்றாகிறது. இது ஒரு நேர்மறைத் தழுவுதல்.

உண்மையோ இல்லையோ, அனுபவிக்கப்பட்டதோ இல்லையோ என்று நிலைமை எவ்வாறு இருந்தாலும், ஒன்றைப் பற்றி சிந்திக்கவே இல்லையென்றால் அதைப் புரிந்துகொள்ளவில்லை என்றாகிறது. இது ஓர் எதிர்மறைத் தழுவுதல். இந்த வழியாகவும் எண்ணம்-புரிதல் இவ்விரண்டின் தொடர்பு வெளிப்படுகிறது.

18. *சீடன்:* ஒன்றைப் பற்றிய வெறும் சிந்தனையே அதைப் புரிந்துகொள்வது என்று சொல்லப்படுவது எப்படி? புலன்கள் மூலம் ஒரு பொருளைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியும்; அல்லது பொருளை முன்பே உபயோகித்ததால் அந்த அனுபவத்தின் மூலம் மனதில் பதிந்துள்ளவை மூலம் தெரிந்துகொள்ளலாம். ஆனால் முன்பே தெரிந்துகொள்ளாமலோ, அல்லது பார்க்காமலோ இருக்கும் ஒரு பொருளைப் பற்றி யோசிப்பதால் மட்டுமே என்ன புரிந்துகொள்ள முடியும்? ஆகவே யோசிப்பதால் புரிந்துகொள்வது என்பது ஒரு நடவாத காரியம் என்றே அறிவுக்குப் புலப்படுகிறது.

குரு : நீ சொல்வது சரியல்ல. புலன்களால் அறியாதவைகளைப் புரிந்துகொள்ள முடியாது என்று நீ எப்படிச் சொல்லலாம்? சொர்க்கத்தில் கிடைக்கக் கூடிய இன்பங்களை அனுபவிக்காமலே அதைப்பற்றிய ஓர் உருவகம் நம் மனதில் இருக்கிறது. சாஸ்திரங்கள் அவைகளைப் பற்றிக் கூறியிருப்பதினால் நமக்கு அதைப் பற்றிய அறிவு இருக்கிறது. அவைகளை நாம் அனுபவிக்காவிட்டாலும் அந்த இன்பங்களைப் பற்றிய ஓர் அனுமான அனுபவம் நம்முள் இருக்கிறது.

19-21. *சீடன்:* அனுபவித்து அறிந்ததைப் பற்றி நம்மால் எண்ண முடியும்; அதை அறிந்துகொள்ள முடியும். ஆனால் அனுபவிக்காததைப் பற்றி எண்ண முடிந்தாலும் அதை அறிந்துகொள்ள முடியாது.

குரு : இப்போது கவனமாகக் கேள். ஒன்றை அனுபவித்தோமோ இல்லையோ அதை அறிந்துகொள்ள முடியும். தொலை தூரத்தில் அனுபவிக்கப்பட்டதைப் பற்றி எண்ணுவதும், அறிவதும் எவ்வாறு முடியுமோ அவ்வாறே பார்த்து அனுபவிக்காத தங்க நிறத்தில் உள்ள மேரு மலை போன்றவைகளைப் பற்றிப் பிறர் சொல்லிக் கேட்பதால் சிந்திக்கவும் முடியும், அறிந்துகொள்ளவும் முடியும்.

கண்களையும், காதுகளையும் மூடிக்கொண்டாலும் காட்சிகளையும், ஒலிகளையும் எண்ணங்கள் வடிவில் வார்த்து அவைகளை அறிந்துகொள்ள முடியும். இருக்குமிடம் இருட்டாக இருந்தாலும் ஒரு பொருளைப் பற்றிச் சிந்திக்கவும், அதன் மூலம் அதை அறிந்துகொள்ளவும் முடியும். குருடர்களுக்கும், செவிடர்களுக்கும் கண்களும், காதுகளும் இல்லாவிட்டாலும் அவர்கள் நினைத்த மாத்திரத்திலேயே அவர்களால் உருவங்களையும், ஒலிகளையும் அறிந்துகொள்ள முடியும். ஆகையால் முன்பே தெரிந்திருந்தாலும்,

தெரியாதிருந்தாலும் எதை நினைக்க முடியுமோ அதை அறியவும் முடியும். இதுதான் நேர்மறைத் தழுவுதல் முறை.

22. சீடன்: அப்படியானால் எதிர்மறைத் தழுவுதல் என்றால் என்ன?
குரு : மனம் இல்லாத போதும், மயக்கத்திலும், ஆழ்ந்த நித்திரையிலோ சமாதியிலோ இருக்கும் போதும் எண்ணவோட்டங்கள் நடைபெறுவதில்லை; அதனால் எதுவும் பார்க்கப்படுவதும் இல்லை. இந்த நிலைகளில் மட்டும் அல்லாது, விழித்திருக்கும் போதும் ஒருவன் சிந்திக்காது இருந்தால் அப்போதும் எந்த நிகழ்வுகளும் இருப்பதில்லை.

23-25. சீடன்: விழித்திருக்கும் நிலையில் அவ்வாறு இருக்க முடியாது. அறிவதற்கு ஒரு பொருள் இருந்தால் அதைப் பற்றிச் சிந்திக்காவிட்டாலும் அது அறியப்படுகிறது என்றே கொள்ளவேண்டும்.
குரு : இல்லை, நீ சொல்வது சரியில்லை. நம் தினப்படி அனுபவமே வேறு மாதிரியாகத்தான் இருக்கிறது.
சீடன்: எப்படி?
குரு : ஒருவன் ஒரு வேலையில் தீவிரமாக இருக்கும்போது அவனை வேறொருவன் கூப்பிட்டால் முன்னவனிடம் இருந்து பதில் ஏதும் வராமல் இருக்கலாம். பின்னர் அவனே “நான் வேலையில் மும்முரமாக இருந்தேன். கூப்பிட்டது எதுவும் கேட்கவில்லை, நான் எதையும் கவனிக்கவில்லை, கூப்பிட்டிருந்தால் அப்போது எனக்குத் தெரியவில்லை” என்று எதையாவது சொல்லலாம். அதாவது ஒன்று இருக்கிறது என்றாலும், அதைக் கவனித்தாலன்றி அது அறியப்படுவதில்லை என்று இதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது.

26-28. சீடன்: அத்தகைய கவனம் இல்லாமல், நேராக உணரப்படும் பொருள் இருப்பதை அறியமுடியாதா?
குரு : ஐம்புலன்களால் ஒரு பொருள் உணரப்படுகிறது என்றாலும் சம்பந்தப்பட்டவனின் கவனம் இல்லாமல் அது இருப்பதை அறியமுடியாது. ஒருவளின் கழுத்தில் இருக்கும் மாலை அவளுடைய தோலில் உரசிக்கொண்டு இருந்தாலும், அவள் கவனம் செலுத்தவில்லை என்றால், அது அங்கு இருப்பதை அவள் அறியமாட்டாள். அவ்வாறு அறியாததால், அதைப் பற்றிய ஞாபகம் வரும்போது அது தொலைந்து விட்டதோ என்று அதை அவள் தேடிக்கொண்டும் இருப்பாள். ஆகவே நகை உரசிக்கொண்டு உணர்வு கொடுத்தாலும், அதைப் பற்றிய கவனம் இல்லையென்றால் அது தொலைந்துபோன மாதிரிதான்.

வலியால் துடிக்கும் ஒரு நோயாளியின் துயரத்தை மறக்கடிக்கச் செய்யவேண்டும் என்றால் அவரது கவனத்தைத் திசை திருப்பலாம். அதேபோல உறவினரை இழந்த ஒருவரது துன்பத்தைப் போக்க அவருக்கு வேறு வேலைகள் கொடுத்து துன்பத்தை மறக்கடிக்கச் செய்யலாம்.

ஒரு பொருள் நமக்கு நேராக இருந்து உணரப்பட்டாலும், அதைப் பற்றிய கவனம் இல்லையென்றால் அது அறியப்படுவதில்லை என்பது இதிலிருந்து நன்கு புலப்படுகிறது.

29-31. ஒரு விஷயம் முன்பே அறியப்பட்டதோ இல்லையோ, அதைப் பற்றி அறிவது என்பது இறுதியில் ஏதோவொரு எண்ண வடிவில்தான் இருக்கிறது என்று இதிலிருந்து தெரிகிறது. அதனால் ஒரு பொருளைத் தெரிந்துகொள்வதில் சம்பந்தப்படும் பல விஷயங்கள் பற்றி வேதங்கள் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றன: மனம், எண்ணம், மனோநிலை, புத்தி, கற்பிதம், உள்ளுணர்வு, இதயக் கட்டு (பந்தம்), பார்க்கப்பட்டது, மாயத் தோற்றம், ஜீவாத்மா, உலகம், அனைத்தும், இறைவன் போன்றவைகள்.

சீடன்: இதுதான் அறிய வேண்டியவை எல்லாவற்றையும் அடக்கியுள்ளது என்று எங்கு சொல்லப்பட்டிருக்கிறது? மாறாக எல்லாமே மாயையால்தான் உருவாக்கப்பட்டிருக்கிறது என்றுதானே சொல்லப்பட்டிருக்கிறது.

குரு : ஆமாம். அறிவு என்று பொதுவாகச் சொல்லப்படுவதே மாயைதான். மாயை, அவித்யை, பந்தம், களங்கம், இருள், அறியாமை, மனம், தொடரும் பிறப்பு-இறப்புகள் என்ற பல பெயர்களில் உலகையும் அதில் உள்ள பொருட்களையும் பற்றிய அறிவு குறிப்பிடப்படுகிறது.

சீடன்: அப்படியே இருக்கட்டும்; ஆனால் மனோநாசத்திற்கும் இதற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?

குரு : கேள். இந்த அனைத்துப் பெயர்களாலும் குறிப்பிடப்படும் அறிவு என்பது மனத்தைப் பற்றியதே.

32-33. சீடன்: வேறு யார் இப்படிச் சொல்லியிருக்கிறார்கள்?

குரு : “இது-அது என்றோ, அல்லது இதுவல்ல-அதுவல்ல என்றோ, அல்லது வேறேதேனும் வழிகளிலோ உலகில் உள்ளவைகளைப் பற்றி உள்ள அறிவு என்பது இறுதியில் மனமே ஆகும். மனமே வெளிப்படும் அறிவாக இருக்கிறது” என்று வசிஷ்டர் ராமருக்குக் கூறுகிறார்.

34. சீடன்: இருக்கட்டும். மனத்தை அழிப்பது எப்படி?

குரு : எல்லாவற்றையும் மறப்பதே இறுதியில் தேவையான ஒன்று. எண்ணங்கள் இல்லையென்றால் உலகமும் உதிப்பதில்லை. சிந்திக்காது இருந்தால் உலகம் இருக்காது.

மனத்தில் எதுவும் இல்லையென்றால் மனமே அழிந்துவிடும். அதனால் எதையும் எண்ணாதே; இருக்கும் எண்ணங்களையும் மறந்துவிடு. இதுதான் மனத்தை அழிப்பதற்கானதொரு சிறந்த வழி.

35-37. சீடன்: இவ்வாறு யாராவது சொல்லியிருக்கிறார்களா?

குரு : "அனுபவித்தது, அனுபவிக்காதது என்ற அனைத்தையும் பற்றிய எண்ணங்களைக் கைவிடு. ஒரு மரக்கட்டையைப் போலவோ அல்லது ஒரு கல்லைப் போலவோ எண்ணங்கள் ஏதும் இல்லாமல் இரு.

ராமர் : எல்லாவற்றையும் நான் மறந்துவிட வேண்டுமா?

வசிஷ்டர்: ஆமாம், எல்லாவற்றையும் மறந்துவிட்டு ஒரு கல் அல்லது மரக்கட்டையைப் போல இரு.

ராமர் : அப்படியிருந்தால் கல்லையும், கட்டையையும் போல மரத்துப்போய் இருக்க வேண்டியதுதான்.

வசிஷ்டர்: அப்படியில்லை. அதெல்லாம் மாயத் தோற்றம்தான். மாயங்கள் மறந்தால் அதில் இருந்து நீ விடுபடுவாய். பார்ப்பதற்கு உணர்வற்று இருந்தாலும், நீயே ஆனந்தமயமாய் இருப்பாய். உனது அறிவு முற்றிலும் தூய்மையாகவும், கூர்மையாகவும் விளங்கும். சம்சார பந்தங்களில் சிக்கிக்கொள்ளாமலும், செயல்பாடுகளில் தீவிரமான ஈடுபாடு கொண்டவன் போல மற்றவர்களுக்குக் காணப்பட்டும், அதே சமயம் பிரம்மத்தின் ஆனந்தம் தரும் மகிழ்வோடும் இருப்பாய். ஆகாயத்தில் காணப்படும் நீல நிறம் போல இல்லாமல், என்றும் உணர்வாய் விளங்கும் ஆன்மாவில் மறுபடியும் உலகமாகக் காணப்படும் மாயங்கள் துளிர்க்காமல் இருக்கட்டும். மனோநாசம் செய்து என்றும் ஆனந்தத்தில் திளைக்க இந்த மாயங்களை மறப்பதுதான் ஒரே வழி. சிவனோ, விஷ்ணுவோ, பிரம்மனோ யார் உபதேசம் செய்திருந்தாலும் இந்த ஒரே வழியைப் பின்பற்றாமல் உனக்கு முக்தி கிடைக்காது. எல்லாவற்றையும் மறக்காமல் ஆன்மாவில் லயித்து இருப்பது இயலாது. அதனால் அனைத்தையும் மறந்துவிடு" என்று வசிஷ்டர் ராமருக்கு அறிவுறுத்தினார்.

38-39. சீடன்: அதைச் செய்வது மிகக் கஷ்டம் இல்லையா?

குரு : அறிவில்லாதவனுக்கு அது கஷ்டமாக இருந்தாலும், விவேகம் உள்ள சிலருக்கு அது எளிதே. பிரிவுகள் ஏதுமில்லாத முழுமையான பிரம்மத்தைத் தவிர வேறு எதையும் நினைக்காதே. விடாது தொடரும் இந்தப் பயிற்சியால் ஆன்மாவிற்கு அன்னியமாக உள்ளது அனைத்தையும் நீ எளிதாக மறப்பாய். எதையும் சிந்திக்காமல் அமைதியுடன் நீ இருப்பதற்கு உனக்குக் கஷ்டமாக இருக்காது. உன் மனதில் எந்த எண்ணமும் எழுவதற்கு விடாதே;

பிரம்மன் ஒன்றையே எப்போதும் சிந்தித்திரு. அப்படிச் செய்தால் உலகத்தைப் பற்றிய எல்லா நினைவுகளும் மறைந்துபோய் பிரம்மத்தைப் பற்றிய சிந்தனை ஒன்றே நிற்கும். அது மாறாது நிலைத்து நிற்கும்போது அதையும் மறந்துவிட்டு, "நான் பிரம்மம்" என்ற சிந்தனையும் இல்லாமல் அந்த பிரம்மனாகவே இரு. பழகுவதற்கு இது ஒரு கடின காரியமாக இருக்காது.

40. என் புத்திசாலிப் பையனே! இந்த அறிவுரையைப் பின்பற்றி, பிரம்மத்தைப் பற்றி அல்லாது வேறெதையும் நினைக்காதே. இவ்வாறு பயில்வதால் உன் மனம் அழிந்து, நீ அனைத்தையும் மறந்து, அந்த சுத்தப் பிரம்மத்திலேயே நிலை கொள்வாய்.

41. எவர் இந்த அத்தியாயத்தைப் படித்து, இதில் கூறப்பட்டுள்ள வழியைப் பின்பற்றுவார்களோ, அவர்கள் விரைவில் பிரம்மனாகவே ஆவார்கள்!

## பிற்சேர்க்கை - 1 (Align text matters with the column Nos.)

1 நிலைகள் - 2 விவேகம் - 3 வைராக்கியம் - 4 உபரதி - 5 முமுக்ஷுத்வம்

1 காரணம் - 2 தூய மனதில் மட்டும் எழுவது - 3 விவேகத்தில் இருந்து வருவது - 4 அஷ்டாங்க யோகத்தின் விளைவு - 5 சத்-சங்கத்தில் தொடக்கம் (ஞானிகளின் சமூகத்தில்)

1 இயல்பு - 2 பிரம்மம் மட்டுமே உள்ளது, மற்ற அனைத்தும் மாயம் என்பதில் உறுதியாக இருப்பது -
3 உலகைத் துறப்பது, உலக விஷயங்களில் பற்றற்று இருப்பது - 4 மனத்தைக் கட்டுக்குள்
வைப்பது - 5 முக்தியில் நாட்டம் கொள்வது

1 விளைவு - 2 இந்த உண்மையை எப்போதும் நினைவில் கொள்வது - 3 அனைத்து உலக இன்பங்களையும் வெறுத்து, அவைகளில் இருந்து விலகி நிற்பது - 4 உலகச் செயல்களில்
இருந்து விடுதலை - 5 குருகுல வாசம்

1 எல்லை   - 2 பிரம்மம் மட்டுமே உண்மையானது என்பதில் உறுதியாக இருப்பது - 3 இம்மை மற்றும்
மறுமை சுக-போகங்களை வெறுத்து ஒதுக்குதல் - 4 செயலின்மையால் உலகங்கள் இருக்கின்றன என்பதை மறப்பது - 5 சாஸ்திர சம்பிரதாயங்கள் மற்றும் மத வழக்கங்களைக்
கைவிடுதல்

1 பலன்      - 2 உலகே மாயம் என்பதால் வைராக்கியம் வருதல் - 3 சாந்தி -   - (Note: 4 & 5 are absent)

## பிற்சேர்க்கை - 2  (Align text matters with the column Nos.)

1 நிலைகள்  - 2 ஞானம் (பேரறிவு) -  3 ச்ரவணம்   - 4 மனனம்

1 காரணம்   -  2 ச்ரவணம், மனனம், நிதித்யாசனம், சமாதியால் விளைவது - 3 விவேகம், வைராக்கியம்,
உபரதி, முமுக்ஷுத்வத்தால் விளைவது  - 4 மறைமுக அறிவான விவேகத்தால் விளைவது

1 இயல்பு    -  2 சாந்தி எனும் ஆனந்த நிலையில் வேறெதுவும் இல்லாத பிரம்மம் மட்டுமே இருப்பது
3 அத்வைத பிரம்மத்தை மட்டுமே கேட்டுக்கொண்டு இருப்பது  - 4 அத்வைத ஆத்மா
என்பதன் உண்மையை விசாரிப்பது

1 விளைவு  -  2 அகந்தை மீண்டும் தலை தூக்காமல் இருப்பது  - 3 அசத் ஆவரணத்தை அழித்தல்
4 அபன் ஆவரணத்தை அழித்தல்

1 எல்லை   -  2 “நான் உடல்” என்பதை விடுத்து  “நான் பிரம்மம்”  என்ற கருத்தில் தீவிரமாக இருப்பது

3 அசத் ஆவரணம் தலை தூக்காமல் இருப்பது - 4 அபன் ஆவரணம் தலை தூக்காமல்

இருப்பது

1 பலன்      -  2 ஜீவன் முக்தி  -  3 பரோக்ஷ ஞானம் (மறைமுக அறிவு:  உள்ளதையும் இல்லாததையும்

பிரித்து அறிவது)  - 4 அபரோக்ஷ ஞானம் ( நேரடி அறிவு:  அகந்தையையும் ஆத்மாவையும்

பிரித்து அறிவது) .

# பின் அட்டை

ஆதி சங்கரரும் அவர் போன்ற ஏனைய மாபெரும் ஞானிகளும் வேதாந்த சூத்திரங்களுக்கு விரிவான விளக்கவுரைகளை வெகு காலம் முன்பாகவே எழுதி, ஆன்ம விசாரம் செய்யும் வழிகளை நன்கு காட்டிச் சென்றிருக்கின்றனர். அவ்வாறான உரைகளில் காணப்பட்ட மிக முக்கியமான கருத்துக்களைத் தொகுத்து, அவைகளை சம்ஸ்க்ருத சுலோகங்களாக எழுதி, அதனை “ஸ்ரீ அத்வைத போத தீபிகா” என்ற தலைப்பில் பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்டதொரு நூலாக ஸ்ரீ கரபாத்திர சுவாமிகள் படைத்துள்ளார்.

இருக்கும் ஆன்மாவான அதைத் தவிர வேறொன்றும் இல்லாது, உள்ளபடி இருக்கும் அந்த ஒன்றை அறியவிடாமல் அறியாமையான அஞ்ஞானம் தடுக்கிறது; அனைத்தையும் மறைக்கும் தன்மை கொண்ட அஞ்ஞானம் என்றும், எப்போதும் இருக்கும் உண்மையை மறைத்து “அது இல்லை” என்றும், “அது தானாக வெளிப்படுவதில்லை” என்றும் ஆகிய இரண்டு விளைவுகளை ஏற்படுத்துகிறது; அதன் இன்னொரு தன்மையால் அது நம்முள் மனம் என்ற ஒன்றை உருவாக்கி, அதன் மூலம் மனிதர்கள், இறைவன், உலகம் என்ற தோற்றங்கள் உண்மையாக இருப்பன போல உணர்த்தி நம் முன் ஒரு மாய வலையை விரிக்கிறது; நன்கு கற்றுத் தெளிந்தவர்கள் மட்டுமே அந்த உண்மையை உணர்வதற்கான தகுதியை பெற்றவர்கள், வெறும் சாஸ்திர அறிவு மட்டுமே பெற்றவர்கள் அதை உணர இயலாது;அதை உணரும் அறிவைப் பெறுவதற்கு ஆன்ம விசாரம் ஒன்றே முதன்மையான சாதனம்.

ஆன்மிகப் பாதையில் முன்னேற இயலாது தடைகளாக நிற்கும், நமது முந்தைய அனுபவங்கள் மூலம் நம்முள் ஊறியிருக்கும், வாசனைகள் எனும் கற்பிதங்கள் அனைத்துமே ஆன்ம விசாரமாகிய தியானத்தால் அகலுகின்றன; அதன் விளைவால் நம்மை ஒரு ஜீவனாகக் குறுக்கிக் கட்டிப் போட்டிருந்த மனம் என்று இடையில் முளைத்த உபாதியும் அத்துடன் மறைவதால், எங்கும் எப்போதும் உள்ள ஆன்மா எனும் பிரம்மத்தை அறிபவனாக நாம் விளங்குகிறோம்; அந்த நிலையை அடைபவனுக்கு, அவனது முக்குண வினையால் அவன் அனுபவிக்க வேண்டிய கர்ம பலன்களாக, அவனுக்கு வரவிருக்கும் பிறவிகளும் இல்லாது போகின்றன; அவ்வாறான கர்ம பலன்களும் அவனது உண்மையான சொரூபமாக உள்ள பிரம்மத்திற்கு அல்ல, அவை அனைத்துமே தனியாக இடையில் தோன்றும் ஜீவனுக்கே என்பதால், உண்மையில் எவ்வித பந்தமும் இல்லை, பந்தம் இல்லாததால் விடுதலையும் இல்லை என்பதையும் உணர்ந்து, எவ்வாறு இடையில் தோன்றும் மனத்தை அழிக்கும்

வழிகளை அறிவது என்ற இவ்வாறான அனைத்துக் கருத்துக்களையும் ஆசிரியர் இந்த நூலில் விளக்குகிறார்.

இந்த நூலின் ஆங்கில மொழி பெயர்ப்பு பகவான் முன்னிலையில் பலமுறை படித்துப் பார்க்கப்பட்டு, நன்கு திருத்தி அமைக்கப்பட்டது. பகவான் மதித்துப் போற்றிய வெகுசில நூல்களில் இதுவும் ஒன்றாக அடங்கும்.